'D BY THE MADRAS TEXT BOOK COMMITTEE.
*Vide Fort St. George Gazette Part I-B,*
*Page 516 13th Nov., 1928*

உ

# விதாஸரும்

## அவர் நூல்களும்

ஆசிரியர்

கிரிஸ்தவக் கலாசாலைத் தமிழாசிரியர்

டி. சி. பார்த்தசாரதி ஐயங்கார்

'ஒற்றுமை' ஆபீஸ்
தியாகராயநகர், சென்னை.

...ட்] 1953 [விலை ரூ. 2-8-0.

2ம்-பதிப்பு




# முகவுரை.

---

அருந்தமிழீர்! வடமொழியில் கவிச் சக்கரவர்த்தி யென்று உலகெல்லாம் போற்றும் காளிதாஸ மகா கவியாற் செய்யப்பட்டிருக்குஞ் சில காவியங்களையும் நாடகங்களையும் தமிழில் மொழி பெயர்த்துப் பலரும் பாராயணம் பண்ணும்படியும், பள்ளி மாணவர்கள் படிக்கும் படியுஞ் செய்யவேண்டு மென்னும் எனக்கிருந்த பேரவாவை முன்னிட்டு, எனது சிற்றறிவிற் கெட்டியவாறு இதை எழுதலாயினேன். இதனைக் கல்விக் கழகங்களிற் பாடப் புத்தகமாக வைத்து ஆதரிக்க அறிஞர்களை வேண்டுகிறேன்.

இங்ஙனம்

டி. சி. பார்த்தசாரதி

---

# காளிதாஸன் சரிதம்.



"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு"

என்று, வள்ளுவனார் திருவாக்கின்படி, முன்னம் வட திசையில் வளமை மிக்கிருந்த உஜ்ஜினி என்னும் நாமம் வாய்ந்த நகரத்தை விக்ரமாதித்தன் ஆண்டுவந்தான்; அவன் கல்வியிற் கடலனையான்; காதலிற் கடவுளனையான்; காட்சியில் மேருவனையான்; கற்றவர்களை ஆதரிக்குந் தன்மையில் பாரியினும் பரிவுடையான்; அவனது சபையில் எப்பொழுதும் பல புலவர்கள் பூவில் மொய்க்கும் வண்டுகளைப்போலச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள். அவர்களுள், காளிதாஸரும் ஒருவர்; இவரை இந்திய ஷேக்ஸ்பியர் என்று கற்றார்கள் எல்லோரும் நாளும் போற்றி வருகின்றனர்; இவர் ஆங்கிலத்தில் கைதேர்ந்த அருங்கவிகள் போல இயற்கை வருணனையில் மிகவும் வன்மை வாய்ந்தவர். இவர் செய்து வைத்துள்ள இலக்கியமும் நாடகமும்

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்னும் அமுத மொழிக் கிணங்கப் படிக்கப் படிக்க இன்பத்தைப் பயந்து கொண்டே யிருக்கும்.

இப்புலவரைப் போற்றுதார் இவ்வுலகில் எவருமே கிடையாது. இவராலியற்றப்பட்டுள்ள நூலிற்பல பிற பாஷைகளிலும் மொழி பெயர்த்துப் பொன்னே போல் இன்றும் போற்றி வரப்படுகிறது; இவரால் செய்யப்பட்ட இதிகாஸங்கள் சொல்லழகு பொருளழகுவாய்ந்தன வென்பதற்குக் குமாரஸம்பவமும் மேகஸந்தமுமே உதாரணமாகக் கூறலாம். இவரது நாடகத்தில் ஆங்காங்கு விந்தையாகச் சொல்லியுள்ள பிராகிருதச் சொற்கள் கற்றவர் மனதைக் கரையச் செய்யாமல் இரா.

## காளிதாஸன் கல்வி

மகிஷபுரி என்னும் வளமை வாய்ந்த ஒரு சிறந்த நகரமுண்டு. அதை மகேந்திரன் என்னும் நல்லரசன் அரசுபுரிந்து வந்தான். அவனுக்குப் பெண் ஒருத்தி யிருந்தாள்; அவள் அழகில் அனைவரினுஞ் சிறந்தவள். கல்வியிற் கலைமகளினும் மேம்பட்டவள்; தான் கற்றதைப் பிறருடன் வாதிக்கும் வல்லமையால் மிக்கவள்; அன்னவள் நாக்கைக் கண்டு நடுங்காதவரும் நாண மடையாதவரும் கிடையாது. அவளது தந்தையார் தன் மகளினது கல்வியின் திறமையைக் கண்டு தான் பெற்றதிலுலடைய வேண்டிய பயனை இன்றே அடைந்து விட்டோமென்றெண்ணிக் கரையிலா மகிழ்ச்சியால், தன் பெண்ணை எவன் கல்வியால் வெல்லுகிறானோ அவனுக்கே அவளைக் கலியாணஞ் செய்து கொடுப்பதாக நிச்சயித்திருந்தான்.

அச்செய்தியை அறிந்த அருங்கவிப் புலவோரெல்லாம் ஒவ்வொருவராக வந்து, அவளுடன் சொற்

போர் புரிந்து, பின்னிடைந்து அன்னவளுக்குப் பணிவிடைக் காரர்கள் போலாயினர்; அதுகண்ட அரசன் மனம் ஆற்ருெணு அல்லற் கடலிலாழ்ந்தது; அதினின்றெழுவதற்கு உபாயமென்னவென்று தன் மந்திரியின் ஆலோசனையால் உலகின் கண்ணுள்ள மற்றைப் புலவரையும் ஒருங்கே வந்து சேரும்படியாகச் செய்தான்;அரசன் கட்டளைப்படியே வந்த புலவர்களும் அன்னவள் வாக்கைக் கண்டு பயந்து சூரியனைக் கண்ட பனிபோலாயினர்.

அப்புலவர்களின் மனப்பாங்கினை அறிந்த மந்திரி, அவர்களை எல்லாம் ஒருங்கு சேர்த்துத் தனிக்கூடஞ் சென்று, அப்பெண்ணை வெல்லும் மார்க்கங்களைப் பற்றிச் சில தந்திரங்களைச் சொல்லினன்.

அவ்வசனத்தைக் கேட்ட புலவர்கள், மந்திரியின் மதிக்கு மெச்சி அவ்வாறே செய்வதாக ஒப்புக் கொண்டார்கள்.

அந்த மஹிஷபுரியில் அந்தணர் குலத்துதித்த பிள்ளை ஒருவனிருந்தான். அவனை எல்லாரும் மூழ மகனென்றே கூப்பிட்டு வந்தார்கள்; அவனுக்கு எழுத்தென்பது சதுரமா வட்டமா என்று தெரியாது. அவன் ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்து ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு காட்டிற் சென்று மேய்ப்பான். அவனை மேற்கூறிய புலவர்கள் கூப்பிட்டு, அப்பா! குழந்தாய்! நீ இங்ஙனம் ஏன் ஆடுமாடு மேய்த்துக் கொண்டு துன்பமடைகின்ருய், நாங்கள் சொல்லுகிற படி செய்தால் நீ சீக்கிரத்தில் நலம் பெறுவாய்! இல்லையேல் துன்பமடைவாய். அன்றியும், நீ நாங்கள் சொல்லும் வண்ணம் நடவாவிடின், உன்னை

உதைப்போம் என்று அச்சமுறுத்தினர்கள். இவர்கள் பயமுறுத்துவதைக் கண்ட அச்சிறுவன், ஐயா! என்னை உதைக்கவேண்டாம், நீவிர் எவ்வண்ணம் நியமிக்கின்றீர்களோ அவ்வண்ணமே நடக்கத் தயாராக விருக்கிறேன். இவ்வற்ப விஷயத்தில் என்மீது கோபம் வேண்டாம். நடைபெறவேண்டியதைச் சொல்லுங்கள் என்றான். அவர்களும் அவனைப் பார்த்து, அடே! நீ எங்களுடன் பின்பற்றி வரவேண்டும். நாங்கள் உன்னை நன்னிலைமைக்குக் கொண்டு வருகின்றோம். 'ஒன்றை நினையாமுன் வந்து நிற்பினும் நிற்கும்' 'உறற்பா லீலண்டாவிடுதலரிது' என்னும் வாக்கியங்கள் உன் விடயத்திலேயே நிதர்சனமாயிற்று. நாங்கள் உன்னை இன்றே அரசன் மனைக்கு அழைத்துக் கொண்டு போகிறோம். அங்கொரு வித்துவ ரத்தினம் விகசித்திருக்கிறது. அதின் நறுமணத்தை முகர்ந்தறிய வேண்டுவது உனது கடமை. அம்மலர் எம்மலரினும் வாசனை வீசக்கூடியது; காதலித்தவர்களுக்கு மலரக் கூடியதல்ல; கற்றவர்களுக்கே மலரக்கூடியது. வெங்கதிரைக்கண்டு மலரும் புஷ்பம் செங்கதிக்கு மலருமா? நீயோ வெங்கதிரைவிட்டு நீங்காத வேதியன். விப்பிர தருமத்தில் வேறுபட்ட வேடுவன். உன்னைக் காட்டிலும் உயர்ந்தோர் அந்தப் பெண்ணிற்கு யாவர் கிடைக்கப் போகின்றார்கள்? நீ முன்னம் பண்ணிய புண்ணிய மிகுதியாற்றான் எங்கள் கண்ணிற் கிலக்காயினாய். ஆனால், ஒன்று மாத்திரம் நீ ஜாக்கிரதையாக மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். அவ்வரசவனிதை உன்னோடு சில வசனங்களை மாரிபோல்

பொழிவாள்; அப்போது நீ ஊமையைப் போலிருந்து சமிக்கை செய்யவேண்டும்; மற்றக் காரியங்களை நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்; சீக்கிரம் புறப்படு என்றனர். அவ்வந்தணச் சிறுவனும் புன்னகையுடன் அவர்களின் சாயையைப் போலப் பின்னாலேயே படர்ந்து சென்றான்.

பின்பு யாவரும் குதூஹலமாய் அந்தப் பையனை ஊருக்கு அருகாமையில் நிறுத்தி, அவனை ஒரு சிவிகையின் மீது ஏற்றிக்கொண்டு கல்வியிற் கரைகண்ட புலவர்கள் சுமந்துவர, அரசன் அரண்மனையின் வாயிலில் வந்து, 'அரச! இச்சிறுவர் தான் எங்கள் குரு. இவர் இப்போது மௌன விரதங்கொண்டிருக்கிறார். இவரது உருவைக்கண்டு எள்ளக்கூடாது; முன்னம் வாமன மூர்த்தி வானத்தையுந் தாவி யளக்கவில்லையா? அது போல இவரும் இதுவரையில் கானத்தைக் கடும்பக லெல்லாம் தாவி யளந்துகொண்டிருந்தார். இவர் குலத்தாற் குறைவுபடாதவர். இவரைப்பற்றி நம் மந்திரியாரும் நன்கறிவர். ஆயினும், இவர் இப்பொழுது கொண்டிருக்கும் விரத பங்கம் நேரிடாமற் காப்பதே உனது பாரம். 'சண்டி மிரண்டால் காடி டங்கொள்ளாது' என்னும் பழமொழியைப்போல ஒரு கால் அவ்விரதபங்கம் நேரிடிலோ, அன்றே உனக்கும் உனது குலத்திற்கும் பழுது நேரிட்டா லும் நேரிட்டுவிடும்; இனி நாங்கள் சொல்லுவதொன் றில்லை. உன்னுடைய குழந்தையோ வாக்கில் திறமை பெற்றவள். அவள் எது கூறவேண்டுமாயினும் குறிப் பாற்றெரிவித்துவிட்டால், அவரும் அவ்வாறே குறிப்

பாற் குறித்து விடுவார் என்று அவரைக் காட்டினர். அதைக்கேட்ட அரசனும் அப்படியே செய்கவென்று தன் பெண்ணிற்குக் கட்டளையிட்டான்.

அதன் பிறகு, எல்லாரும் அவைக் களத்திற்குச் சென்றனர். ஆங்கு அவரவர்களுக்கென்று அமைத்திருக்கும் ஆசனங்களில் உட்கார்ந்து கொண்டார்கள். அப்பால், அரசகுமாரத்தி அனைவருங் காணக் கடவுள் ஒருவரே என்று கூறத் தனது சுட்டுவிரலை உயர்த்தினாள். அதன் உண்மை அறியாத சிறுவன் எல்லாருங் காண இரண்டு விரலை யுயர்த்தினான். உடனே அங்கிருந்த புலவர்கள், இருவரும் நிமித்திய விரல்களின் அபிப்பிராயத்தை விரகினாலுரைப்பவர் போலத் தெய்வமிரண்டென்றே நிலை நிறுத்தினர். அரசகுமாரியும் தான் தோற்றதாக வொப்புக்கொண்டாள். அப்புறம் அரசன் அகமகிழ்ந்து அந்தணர் ஆசிகூற, அருமறை முழக்கத்துடன் அங்கு எதிரில் தன் பெண்ணை அப்பிராமணச் சிறுவருக்குத் தாரை வார்த்துக் கொடுத்தான்; கலியாணஞ் சம்பிரமமாக நடந்தேறியது. அன்றைப்பகலும் ஆச்சரியமாகவே கழிந்தது. அந்தணச் சிறுவன் அகவிருளைப்போல அந்திவேளையும் சந்தடி யில்லாமல் அகன்று பரந்தது. அரண்மனைகளிலெல்லாம் அப்புலவர்களின் அகமலர்ச்சிபோல ஆங்காங்கு விளக்கொளி விரிந்தது.

அரசர்களின் முறைமைப்பிரகாரம், வேலைக்காரர்கள் ஓரறையில் கட்டில் மெத்தைகளைக் கண்கவரும்படியாக ஏற்றி வைத்தார்கள். அந்தணச் சிறுவனும் அரசன் வீட்டில் அறுசுவையுண்டி யுண்டு அடிமையாள்காட்டிய அறையிற் சென்று படுத்தான். ஆங்கு,

அவன் ஒருநாளுங் கண்டிராத பல பாவைகளையும் கண்ணாடிகளையுங் கண்டு தானே அதிசயித்தான். இது தேவலோகமோவென்று எண்ணினான். பின்பு அவன் அமைக்கப்பட்டிருந்த ஒவ்வொரு ஆதனங்கள் தோறும் சற்று அமர்வான்; "நாம் பெற்ற பாக்கியமே பாக்கியம். நம்போலத் திடீரென்றித்தகைய அரசபாக்கியத்தைப் பெறுவாருமுண்டோவென்று எண்ணி எண்ணிக் குதிப்பான்; அப்பால், நான்கு பக்கங்களிலுந் திரும்பிப் பார்ப்பான். இவ்வாறே சில நேரங் கழித்து விட்டு, "முன்னம் அடிமை காட்டிய அறையுட் சென்று மெத்தையிற் படுத்தான். படுத்தவன் புரண்டான்; புரண்டவன் தன்னையும் மறந்து ஆனந்த மேலீட்டால் அயர்ந்து நித்திரை புரிந்து விட்டான். அப்பொழுது முதற்சாமம் முடிந்தது. ஊருமுறங்கிற்று. அரண்மனையு மடங்கியது; அரசச் செல்வியும் தன் வேலைகளை முடித்துக் கொண்டு அந்தணச்சிறுவன் படுத்துறங்குமறைக்குள் பிரவேசித்தாள். அதற்குள் ஆகாயத்தில் தெள்ளிய வெளியுடன் விளங்கிய மதியமும், தன்னை முகவொளியாற்றோற்கடித்த வம்மாது சிரோமணியின் மனநிலை கண்டாராய் வான்போல இடைவானிலிருந்து மேலே யமைக்கப்பட்டிருந்த கண்ணாடியிற் பிரதி பலித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது தனது அருமந்த கணவன் அயர்ந்து நித்திரையிலாழ்ந்துள்ளதைக் கண்டாள். கண்டவள் களைத்துத் தூங்குங் கணவரை எழுப்புதல் அபசாரமென்று நினைத்து, அருகிலிருக்கும் வீணையைக் கையிலெடுத்து, ஆங்கு முன்னமே பளிங்குச் சுவரின் மீதெல்லாம் தொங்க விட்டிருக்கும் பல்லரசர் படங்களுங்காண,

"விண்ணவர் வியப்ப விஞ்சை வீரர்கள் விரும்பி யேத்த
மண்ணவர் மகிழ வான்கட் பறவைமெய்ம் மறந்து வீழ
வண்ணமு னனங்கனுணு பாடி னுணரசரெல்லாம்
பண்ணமைத் தெழுதப்பட்ட பாவைபோலாயினரே" என்று

சிறப்பித்துக் கூறியவண்ணம் பாடினாள்; பின்பு, பலவகையதான வாசனைத் திரவியங்களை வாரி யிறைத்தாள். இச்சூழ்ச்சிகளில் ஒன்றும் அந்தப் பிராமணச் சிறுவன்மாட்டுப் பலிக்கவில்லை. எட்டிக்குத் தேனிட்டுலர்த்தினும் தன்னியற்கைக் குணம் மாறுபடாதது போல, அச்சிறுவன் இளமையிற் றன்னுடன் பழகி வந்த ஆடுகளே இம்மாதிரியாக எச்சமிட்டனவோ வென்றுதான் கனக் கண்டவனைப்போலத் திடுக்கிட்டு எழுந்தான்; இஃதென்ன பரிபவமாய் இருக்கின்றதே; 'ராமேச்சுவரம்போனாலும் சனீச்சுவரன் நீங்கவில்லை' என்பதுபோல அரசன் அரண்மனைக்குள்ளும் இந்த ஆட்டின் உபத்திரவம் பெரியதாயிற்றே என்று முறுமுறுத்தான். பின்னர், தன்னிலை தெரியாது ஆடுகளை ஓட்டுவான்போ லோட்டத் தலைப்பட்டான்.

இவற்றையெல்லாம் அருகாமையில் நின்று கண்டவள், கண்ணகியினுங் கடுங்கோபமடைந்து வாளையெடுத்துச் சிறுவனை நோக்கி, 'அடே! நீயார்? உண்மையை உள்ளபடித் தெரிவிக்கின்றனையா? அல்லது இவ்வாளுக்கு விருந்தாகின்றனையா? வீணே உன் வாழ்நாளைப் போக்கடித்துக் கொள்ளாதே, நீயோ காண்பதற்கு வாலிபப் பருவம் நீங்காதவனுயிருக்கின்றாய்' என்று அதட்டினாள். அதற்கும் பிராமணச் சிறுவன் மிகவும் பயந்து, 'அம்மணி! என்மீது

கோபித்தல் நலமன்று; நான் ஒன்றும் அறியாத வன்; என்னை மன்னித்து உயிர்பிச்சைகொடுத்து அனுப்பிவிடக் கோருகிறேன்' என்றான்.

அரசகுமாரி—அடாபேதாய்! 'உன்னுயிரைப் பலி கொடுப்பதால், இனி நான் அடையப்போகும் பய னென்னே? நீ பயப்படாதே. உனது உண்மை யைச் சொல்லிவிடு' என்றாள்.

அந்தணச் சிறுவன்--அம்மணி! நான் ஒரு இடைக் குலத்தவன்.

அரச குமாரத்தி—என்ன ஆச்சரியம்! என்ன வஞ் சனை! என்ன படுமோசம்! என்னே விதி! உண்மை யாக இடைக்குலத்துதித்தவனா?

அந்தணச்சிறுவன்—ஆம், அம்மணி!

அரச குமாரத்தி—அப்படியாயின், நீ எக்காரணத் தால் இங்கு வந்தனை என்றாள்.

அந்தணச்சிறுவன்—நான் அந்தணக் குலத்துப் பிறந்து இடையர்கள் கைத்தொழிலைக் கொண்டவன்; என்னைப் பல புலவர்களுந் திரண்டு வந்து இட்டுவந் தார்கள். அப்பால், ஊமை போலவும் இருக்கச் சொன்னார்கள். இல்லாவிடில் உதைப்பேனென் றும் அச்சமுறுத்தினர்; நீங்கள் ஒருவிரலைக் காண்பித் தவப்போது நானுமிரண்டு விரலைக் காண்பித்தேன். இதுதான் எனக்குத்தெரியும்' என்று உண்மையைச் சொல்லி விட்டான்.

அந்தச்சிறுவன் சொல்லிய வசனங்களைக்கேட்ட வரசனுடைய பெண் மனம் வருந்தி, அச்சிறுவனை நோக்கி, 'நீ இவ்வூரின் கோடியிலிருக்குங் காளி கோவிலிற்போய்ப் பிறரறியாமல் புகுந்துகொள்.

இப்பொழுதோ மணி பன்னிரண்டிற்கு மேலாயிற்று; காளியும் தன் பரிசனங்கள் புடைசூழ வெளியில் உலாவச் சென்றிருப்பாள்; அவள் வருவதற்குள் நீ உள்ளே சென்று கதவை மூடி தாழிட்டுக்கொள்; காளி வந்து கதவைத் தட்டினுற் றிறக்காதே! அவளை உன் நாக்கில் 'ஓம்' என்னும் பீஜாக்ஷரத்தை எழுதச்சொல். அங்ஙனம் எழுதமாட்டேன் என்று சொல்லிவிடில், கதவைத் திறக்க மாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிடு; இப்படிச் சொன்னல் காளியும் உன் வார்த்தையை அவமதிக்காமல் கருணை புரிந்து, நீ நினைத்தபடி உன் நாக்கில் எழுதுவாள். அப்பொழுதே நீ பாக்கியத்தைப் பெற்றவனுவாய். வீண் தாமதஞ் செய்வதால் பயனில்லை; உடனே புறப்படு" என்று கூறி அச்சிறுவனை அனுப்பினுள். அவனும் அவ்வாறே சென்று காளியின் அருள் பெற்றுத் திரும்பி வந்தான்.

அன்று முதலாக அவன் நாற்கவிகளில் முதற் கவியாயினன்; பின்பு கற்ருேர்க்கு இனிமைகொடுக்கும் மேகசந்தேசம் என்னும் மாண்மை பொருந்திய காவியத்தைப் பாடிக்கொண்டே அரண்மனையிலடி வைத்தான்; அக்காவியமோ செம்மொழிச் சிலேடை யும் பிறிதுமொழிச் சிலேடையுமாகவே வமைந்திருந் தன. அப்பாடலைக் கேட்டவுடன் அவ்வரசிளங் குமாரத்தியின் உள்ளம் பூரித்து தேகத்தில் மயிர்க் கூச்செரிந்தது. அந்தணச் சிறுவன் மீது தான் முன்பு கொண்ட சீற்றம் முழுதும் சூரியனைக் கண்ட இருள்போல மறைந்து, தாமரைபோல அவள் முகம் மலர்ந்தது. அப்போது அவன் வாக்கிலிருந்து வெளி

வரும் ஒவ்வொரு சொற்களும் கற்றோர் களிக்கத் தக்கனவாகவேயிருந்தன. பின்பு சோனை மாரியும் பின்னிடையும்படிச் சொற்கள் தானுகவே பொழியத் தலைப்பட்டான். அதைக் கண்ட அப்பாவையர் திலகம், அவனைக் காளியின் வரம் பெற்று வந்தமையால், இன்று முதலாக உன்னை யாவருங் காளிதாஸன் என்று அழைக்கட்டும் எனக் காரணப் பெயரிட்டு அழைத்தனள். அது முதலாக நாளது வரையில் அவனுக்குக் காளிதாஸன் என்ற பெயரே உலகில் வழங்கி வருகின்றது.

அப்பால், அவனுடைய அமிருத வருஷத்தைக் கண்டு அகம் நைந்து, அடியேனை ஆட்கொள்ளல் வேண்டுமென்று அவனடி பணிந்தாள்; பணிந்தவள் நிமிர்வதற்கு முன்னமே அவனுமவளடி பணிந்து, இருகையினையும் தன் சிரத்தின் மேலேற்றி, அம்மணி! என்னை இவ்வண்ணம் பரிசோதித்தல் தகுமா? நீர் என்னைச் சிட‌னுக நினைக்கவேண்டாமோ? நான் உம்மை ஆட்கொள்ளுவதெப்படி?

> "காலத்தினுற் செய்த நன்றி சிறிதெனினுஞ்
> ஞாலத்தில் மாணப் பெரிது"

என்னும் அருமறையின்படி, ஒன்றுமறியாத என்னை ஒரு பொருளாக்கி ஞானம் உதயமாகும் மார்க்கத்தைக் காண்பித்தவர் நீரன்றோ? உம்மை ஆரியனுகக் கொள்ளுவதன்றோ எனது கடமை; அதை மறந்து அதருமமாகப் பேசுவது எங்ஙனம் அடுக்கும் என்றான்.

அவனது வாசகங்களைக் கேட்டு ஒன்றுந்தோன்றாமல் அசைவற்று நின்று, கடவுளே இது உன்

திருக்கூத்து; என்னே நான் செய்த அபாக்கியம் இருந்தபடி, ஹே கருணாவிலாஸா! காளிகாதேவி! நீவிர் அல்லவோ நிரபராதியான என்னை இவ்வாபத்தினின்றுங் காத்தருளல் வேண்டும். அபலையான நான் இவ்வண்ணம் நுங்கருணையால் பெற்ற கணவனை விட்டுப்பேதுற்றலைவது அழகோ? இனி என்னை இவ்வுலகம் என்னவென்றெண்ணும்? கற்பிற்சிறந்த மங்கையர் கணவனை விட்டும் நீங்கியிருப்பரோ? ஹே! தெய்வங்காள்! என் கணவனை என்னிடஞ் சேர்ப்பிக்க வொண்ணுதோ? இதுதானோ யான் இத்துணை நாளாக உங்களிடம் வைத்திருந்த பத்தியிருந்தபடி யென்று முறையிட்டாள்; நெஞ்சம் கலங்கினாள்; நெட்டுயிர்ப்பெறிந்து வாடினாள் அப்பால், காளிதாஸனைப் பார்த்து, அண்ணலே! அருள் பெற்றும் அகங்குழையாமல் அதருமத்தில் பிரவேசிக்கலாமோ? அடியாள் நும்பொருட்டாகச் செய்த பிழை என்னே? அனாதையான வென்னை இங்ஙனம் கைவிட்டு அகல முயல்வதழகோ? அப்படிச் செய்வதால் என்னுயிரன்றோ அழிவுபடும். இதுவோ கற்றறிந்தவர்களின் இலக்கணம். நம் பெரியோர்கள் ஜீவகாருண்யத்தால் யாம் பெற்றபேறு வையகம் பெறுக என்று எண்ணி, சகலரும் விதிவிலக்குகளை அறிந்து நெறி வழுவாதொழுகி, இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் அடையும் பொருட்டு லோகோபகாரமாகச் சகல தர்மங்களையும், ஆசார வியவகார பிராயச்சித்தம் என மூன்று வகையாகச் சாத்திர முகத்தால், உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கி அனுக்கிரகித்ததனால், அந்த ஆப்த வசனத்தையாயினும் மற

வாது சிந்திக்க வேண்டாவோ? இன்று தெய்வத் தருள் பெற்ற வும்மினும் பெரியாரெவருளரோ? இனி நான் இவ்வுலகில் கைம்பெண் போல விருத் தலழுகோ? இதுவரையில் தமது வல்லமையும் கவிச்சா துரியமும் நீறு பூத்த நெருப்புப்போலவும், கரித்துணி யில் முடிந்த மாணிக்கம் போலவும், புறத்திற்றோன்று மல் அடங்கியிருந்தன. காளியின் கருணையைப்பெற்ற பின்னரல்லவோ அது வெளியாயிற்று; அவ்வருள் பெற்றும் அகவிருளொழியாமல் என்னைப் பரீக்ஷிக் கின்ற துமதாண்மைக்கிழிவன்றோ! மேலும் பொருளி னுல் வாக்கினுல் சரீரத்தினுல் எவரெவர் எவ்வளவு சொற்பமான உதவியைச் செய்தாலும், இது எவ் வளவு மாத்திரமென்று அற்பமாயெண்ணுமல், அவ் வுதவி செய்யப்பட்ட காலம் காரணம் முதலியவை களைப் பற்றி மிகப் பெரிதாகவே கொள்ளவேண்டும்.

"தினைத்துணை நன்றி செயினும்
பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரி வார்"

என்ற அமுத வாக்கை மறந்து, அவர்களால் தமக்கு வேண்டிய உதவிகளை வேண்டியபடி யெல்லாம் பயந்து பெற்றுக்கொண்டு, அவர்களுக்குப் பிரதி யுப காரம் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தை மறந்து, விசுவாச காதகத்திற்குள்ளாகாமல் என்னைப் பாது காக்க வேண்டாவா? அன்றியும்,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றபடி

எந்த நன்றியை மறந்த பாவத்திற்கும் போக்கடித் துக் கொள்ள மார்க்கமுண்டு. ஆனல், ஒருவர் செய்த

நன்றியை மறந்த பாவத்திற்கு மாத்திரம் பிராயச் சித்த மில்லே, நரகமே கதி என நியாயங்கள் முறையி டுகின்றனவே அதையாயினுங் கவனித்தல் கடமையல் லவா? இரஸத்தைஉட்கொண்டு சக்கையை வெளியிற் றுப்பி விடுவது இயற்கை தானே என்று நினைத்து ஒருவர் செய்த நன்றியை மாத்திரம் பெற் றுக்கொண்டு, அந்நன்றி செய்தாரை அலக்ஷியஞ் செய்து அவமதிப்பது அழகிதன்று; கனியைக் கண்டு மரத்தைப் பரிபாலிப்பது போலவும், இனிய வமுதத்தைக் குறித்து பசுவைப் பரிபாலிப்பது போல வும், செய்த நன்றியை யுணர்ந்து, அது செய்தாரை யும் மறவாமல் மனதில் மதிக்க வேண்டும். அவற்றை யெல்லாம் நீர் என் விஷயத்தில் மறந்தீர் போலும் என்றாள்.

அவ்வசனங்களேக் கேட்ட காளிதாஸன் அசை வற்று நின்று,'அன்னய்! உனது வசனங்களேக் கேட் டுள்ள முவப்படைந்தேன். என் உதர போஷணேக் கும் ஏதுவில்லாமல் கொழும்பில்லாத கொடிபோ லலேந்து கொண்டிருக்கையில் யாதொரு சம்பந்தமில் லாத என்மேல் இரக்கங் கூர்ந்து கல்வி பயிற்றுவித் தக் கமலாஸினியே! உனது பேரருளன்றோ என் னேப் புனிதனுக்கியது. அத்துணேக் கிருபாகடாக்ஷத் தைச் செய்தவும்மை நான் பரமஞான பிதாவாக வெண்ணுவதல்லவா எனக்கு இகத்திலும் பரத்தி லும் ஏற்றத்தைக் கொடுக்க வல்லது. நான்குபேர் கேட்டால் நகைக்க மாட்டார்களா? வேண்டாம்; அதரும காரியத்தையும் எண்ணத்தையும் கனவிலும் வைக்காதீர். நான் உம்மைக் குருவாக வரித்துவிட்

டேன்; இனி யான் உம்மைச் சாமான்யமாக நினைக்கவே மாட்டேன்; மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல மானிடவுருவங் கொண்டு வந்த கடவுளாகவே உம்மைப் பாவித்தேன். உமது வாயிலிருந்து வரப் பட்ட ஒவ்வொரு வார்த்தையும் வேதமொழி யென்றே யொழுகி நடப்பே' னென்றான்.

அவ்வனிதாரத்னம், இனி இவனை முன் போலக் கோபித்து நம் குறைமுடித்துக் கொள்ளுவேமென் றெண்ணி, முகங்கறுக்க, கண் சிவக்க, வாய்பதைக்க, பல்லை நெற நெறவென்று கடித்து, உதடு துடி துடிக்க, கலகலவென்று சிரித்து, பொள்ளென்று சரீரம் பொங்க, புருவநெற்றிமேல் வில்லைப்போல் வளைந்தேற, கொடிய கூற்றுவனைப் போலக் கோவித்து, இப்பொழுதே உன்னை என் தந்தை யாரின் வசம் ஒப்புவித்துக் கொடிய தண்டனைக்கு ஆட்படுத்தும்படியாகச் செய்வேனென்றனள்.

காளிதாஸன் புன்னகை புரிந்து, அதுவும் குருவருள் ஆணையாகும். அப்படி உமது திருவுளமிருப் பின் செய்யத்தடையென் என்றான்.

அப்போது அரச மாளிகைகள் தோறும் வைத்திருந்த தீபங்களெல்லாம், காளிதாஸனாலே அரச குமாரத்திக்கு ஐம்புலன்களும் எப்படி ஒடுங்கி னவோ, அப்படியே ஒளி மழுங்கி வெளுத்துப் போயின. அல்லி மலர்களெல்லாம், காளிதாஸனு டைய அறநெறியைக் கேட்ட வனிதையர்கள் எப்படி வாயைமூடிக் கொள்ளுவார்களோ, அப்படியே குவிந் தன.

அதன் பின்னர் சூரிய பகவான், தம் வழித் தோன்றிய கற்பிற்கரசியின் பிராணனை ஒழியும்படி செய்த காளிதாஸனைக் கோபித்துக்கொண்டுபுறப்படு வதுபோல, இருளைக் கடிந்து மிகவும் சிவந்த ரூபத் தோடு உதயகிரியிலுதயஞ் செய்தான். காளிதாஸன் இயற்றிய கனிந்த கவிகளைக் கேட்டு ஆனந்தமடை யும் அந்நகரத்துப் புலவர்களின் முகம்போல் தாமரை முகைகள் மலர்ந்தன.

அப்பால் கவியும் இனி நாம் இவ்விடத்திருப்பது தரும விருத்தமே யாகுமாகையால் அகன்று செல்லு வோமென வெளிப்போந்து விக்கிரமாதித்தன் அவைக் களத்திருக்கும் பவபூதி முதலியவர்களோடு ஒருவனாக வந்து சேர்ந்து கொண்டான்.

அவனது கல்வியின் திறமையுணர்ந்த விக்கிர மாதித்தன் மற்றைப் புலவர்களை ஒருகண்ணாகவும் இவனை ஒருகண்ணாகவும் பாவித்துச் சிறப்புடன் வைத்திருந்தான். இவனே அப்புலவர்களின் கூட் டத்திற்குத் தலைமையாக விருந்தும் வந்தான். ஒவ் வொரு நாளும் காலை மாலை என்னும் இரண்டு வேளை யிலும் விக்கிரமாதித்தன் அவனுடன் ஒருகணமாயி னுஞ்சம்பாஷிக்காமல் இருப்பதே கிடையாது. அதன் பிறகு அப்புலவர் திலகஞ் செய்த நூல்கள் ஏழு.

---

# முதலாவது

## குமரன் தோற்றம்

குமரன் தோற்றம் என்பது சுப்பிரமணியக் கடவுளின் அவதாரத்தையும் அவர் பிறந்த காரணத்தையும் வல்லவர் மனம் நைந்துருகும்படியாகத் தெரிவிக்கும்.

### பார்வதி தேவி யவதாரம்.

இவ்விந்தியாவின் வடக்கின் கண் எல்லையாக அமைந்திருப்பது இமயமலை. அது கிழக்கு மேற்காக வமைந்திருக்கிறது. அதில், எப்பொழுதும் பனி நிறைந்திருக்கும்; இடைவிடாமல் மாலையைப் போலப் பெருகிவரும் பல அருவிகள் சல சல வென்னுஞ் சப்தத்துடன் பெருகிக் கொண்டே யிருக்கும்; மேக படலங்கள் அதன்மீது எக்காலத்தும் உலாவிக் கொண்டேயிருக்கும். இரவு காலங்களில் அதன் மேல் படர்ந்துஞ் செழித்தும் வளர்ந்து மிருக்கும். ஔஷதிகள் நவரத்தினங்களினொளியையும் சந்திரனொளியையுந் தோற்பிக்கும்படியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அம்மலையின் மார்க்கங்களிலெல்லாம் சீயங்களினாற் பிளக்கப்படும் களிற்றினுடைய மத்தகத்தினின்று தெறித்த முத்துக்கள் இரத்தத்துடன், வேடர்களுக்குவழியைப்புலப்படுத்தும்;அதன் சிகரங்களினும் குகைகளிலும் வெட்டுப் பாறைகளிலும் எண்ணற்ற யோகிகள் கண்களை மூடிக்கொண்டு கடவுளைத் தியானஞ் செய்துகொண்டிருப்பார்கள். அம்மலையின் கொடுமுடிகளின்மேல் தேவமாதர்கள் திரள் திரளாக வந்து, ஒருவரோடொருவர் விந்தை

யாகப் பேசிப் பந்து விளையாடியும், சுனைகளில் விழுந்து தண்ணீர் குடைந்துஞ் செல்லுவார்கள். தேவதாரு மரங்களிலிருந்து மிகவும் ரமணீயமானவும் நறுமண முள்ளவுமான காற்று எப்போதும் வீசிக்கொண்டே யிருக்கும். அம்மலைச் சரிவுகளிலெல்லாம் கவரிமான்கள் வாலைத்தூக்கிக்கொண்டே உல்லாஸமாக அங்குமிங்கும்திரும்பித்திரும்பிப்பார்த்துக்கொண்டு உலவிவரும். அம்மலையின் மீதுள்ள மூங்கிற் புதர்கள் எல்லாம் இனிமையாக வேணுநாதஞ் செய்துகொண்டே யிருக்கும். ஆங்கு, விசாலித்தாழ்ந்த தடாகங்கள் தோறும் பலவகைப் புஷ்பங்கள் மலர்ந்து வண்டுகளுக்கு ஒரு நிலையமாக விருந்தன. கதிரவன் கிரணங்களும் உட்புகுவதற்கிடம் பெறுமல் நெருங்கிய தருக்களின் இடையிடையே ஒளிந்தொளிந்து உலவியது.

இத்துணைப் பெருமைகளை யெல்லாம் பெற்ற அந்தஹிமவானுக்கு மேனை என்றொரு மனைவியுண்டு; அவள் கற்பிற்கருந்ததி; கருணையிற்றிருமகள்; கணவனைக் கனிவுடன் தொழும் பக்தியுடையாள்.

"வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தார்—சீலம் ஒழிவரோ

என்னும்படியாக, வேலை பிறழ்ந்தாலும் காலை விழுந்தாலும் வேளைதவருது கணவற் பூஜை செய்யுந் தலைமை யுடையாள். கணவன் குறிப்பறிந்து நடக்குங் காரிகையாள்; கணவன் விதித்ததே விதியென மதித்து, அதன்படி ஒழுகும் மதியுடையாள்; அவளிட

மாக ஹிமவானுக்கு மைந்நாகம் என்னும் மலையானது, முதற் பிள்ளையாகப் பிறந்தது. சிறிதுகாலங் கடந்த வளவில் பார்வதி என்னும் ஒப்பற்ற வொரு பெண்ணும் இரண்டாவதாக அவருக்கு அவளிடத்தில் தோன்றினள். பார்வதி தோன்றியபோது பூமியிலுள்ளோர் பல்லாண்டு பாடினர்; தேவர்கள் கற்பகமலர் மழைபோலப் பொழிந்தார்கள். அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலியவர்கள் தெய்வ லோகத்து நாட்டியப் பெண்கள் நர்த்தனஞ் செய்தனர். கின்னரர் என்னும் ஒருவகைச் சாதியினர் கிம்புரு வாசித்தார்கள். சித்தர்கள் வீணை வாசித்தார்கள். கந்தருவர்கள் தெய்வப் பாடல்களைப் பாடியாடினார்கள். தேவதுந்துபி என்னும் தேவ வாத்தியம் கடலைப்போ லொலித்தன. இங்ஙனம் எல்லாப் பிராணிகளும் அளவில்லாத ஆனந்தத்தை யடைந்தன.

"வனைதரு பவளக் காலா வயிரமே மருங்கிற் கோலாப்
புனையிரும் பலகை நீலாப் புரிந்தபொற் றொட்டின் மேலா
வனையவ டன்னை யுய்த்து மங்கையிற் கொண்டுநந் தன்கோன்
மனமகிழ் திறனுற்போற்றி மதியென வளர்க்கலுற்றாள்"

என்கிறபடியே பார்வதி தேவியாரும் வளர்பிறை சந்திரனைப்போல வாளொளி பிறங்க வளர்ந்து வந்தனள். அவளது திருமேனியும் தக்கபருவத்தால் எழில் பெற்று விளங்கியது. அவளுடைய அங்கங்களெல்லாம் இயற்கையாக ஏற்பட்ட அழகினாலும், ஆபரணங்கள் அணிந்திருப்பதால் உண்டான செயற்கை அழகினாலும் பார்ப்பவர் கண்களைப் பறிக்கக்கூடியதாக

விருந்தன. இப்படிப் பார்வதியானவள் புதிய பருவத்தால் நாளுக்கு நாள் பொலிவுற்று வருகையில், ஒரு நாள் ஹிமவானிடத்தில் பிரமபுத்திரரான நாரதமூர்த்தி வந்தார். அவரது வரவைக்கண்ட ஹிமவான் கரையிலாவானந்தத்துடன் இன்றே நான் தன்னியனாயினேன்; தேவரீருடைய வரவு சாமான்யமானதன்றே, உலகோர் தேவரீரின் உண்மையுணராது கலகப்பிரியன் என்று வேண்டாது கூறினும், உண்மையுணர்ந்த உரவோர் அங்ஙனம் சொல்லார்களன்றோ வெனத் தன்னிலே பெயர்ந்து முறை நழுவா வண்ணம் ஆஸனமளித்து குசலம் வினவினன். சுவாமி! தேவரீர் இவண் போந்ததால் இச்சிறு குடியில் பாக்கியம் பெற்றது. இனி கூறுவது மிகையாகும். "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்பது போலத் தேவரீர் வலுவில் வந்து காட்சி தந்தருளியது அடியனேன் செய்த பாக்கியமே. ஆயின், தேவரீர் இவ்வளவு எளிமையாக என்னிடத்திற் கெழுந்தருளிய காரணமென்னோ எக்காரியத்தை உத்தேசித்தோ என்று அன்பு கொண்டு கூறினன். இவ்வார்வம் மிகுந்த வாசகத்தைக் கேட்ட முனிவர்பிரான், 'அரச! நான் உனக்கோர் சுபச்செய்தியைச் சொல்லுவான் வேண்டி வந்திருக்கிறேன். அது பரம இரகஸியம். நீ பெற்ற பாக்கியம். உலகில் உன்னினும் உயர்ந்தவர் ஒருவருமில்லை. ஒவ்வொருவரும் சேர்க்கையாலன்றோ மேன்மையுந் தாழ்மையும் அடைவார்கள். இனி, நீ அடையப்போகும் சேர்க்கையோ அவாங்மனசகோசரமானது; அனைத்துலகுங் கொண்டாடும் ஆட்சியுடையது. என்போன்றவர்களும் நாளும்

ஏற்றக்கூடியது. ஏழுலகத்தினர்க்கும் அடைக்கல மாயது. இவ்வளவு சிறப்பினையுடைய பொருளை நும் மகள் கணவனாகப் பெறப்போகின்றனள். அச்சிறப் பினை எடுத்துக் கூறுவதற்கு ஆயிரம் நாவைப் படைத்த ஆதிசேடனும் வல்லன் அல்லை. உலக கர்த்தனாகிய பரமசிவமூர்த்தியே உனக்கு மருமகனாக வாய்க்கப் போகின்றான். அவரும் உன் பெண் ணிற்கு உகந்து, இவளைத் தனது பாகத்தில் சேர்த் துக்கொண்டு, அர்த்தநாரீஸ்வரன் என்னும் பெய ரோடு விளங்கப்போகிறார்; இன்னும் சில நாட்களில் சிவபிரான் இம்மலைக்குத் தவம் செய்ய வருவார், உமது பெண்ணை அப்பெருமானுக்குப் பணியாளாக அமர்த்தும்' என்று கூறி மறைந்தார்.

இமவான் அன்று முதல் தன் புதல்வியின் பக் கல் அளவு கடந்த வன்புடையனாய்ப் பல மக்களிருப் பினும், இக்குழந்தையினையே வலது கண்ணாகப் பார்த்து வந்தான். அவளும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' யென்று, அவன் சொன்ன சொல் மாறாமல் நடந்து வந்தாள். அவளது ஒழுக்கத்தினை யுஞ் சீலத்தினையுங் கண்டு போற்றாதா ரெண்திசை யினுமில்லை. வாணியும் அன்னவள் வாக்கின் திற மையைக் கண்டு நாணமடைவாள். மலர்மாமகளும் இம்மெல்லியலாளின் மேனி எழில் கண்டு மயக்க மடைவாள். இப் பார்வதியானவள் அம்மலையின்மீது விளையாட வரும்போது, விண்ணாட்டவர்களும் இவ ளது பேரழகினைப்பார்த்து இமையா நாட்டத்தைப் பெற்றதினாலாய பயனை யடைந்தோ மென்றெண்ணு

வார்கள்; தேவேந்திரன் மாத்திரம் பொருமை கொண்டு, இத்தன்மையான சோதியுடன் விளங்கும் பாவையாள் பருவத ராஜனுக்குப் புத்திரியாக வந்து தோன்றினளே. இப்பெருந் தவத்தளாய செல்வியை இவன் எத்துணையான தவத்தைச் செய்துதான் பெற்ருனே. இப்பாவையன்ரே உலகுய்ய வந்து தோன்றியவள். இம்மாதின் அருங் குணங்களுக்குத்தக்க மணவாளன் யாரோ வென்று வாயாரச் சொல்லி வாழ்த்தினன்.

இவ்வண்ணம் சின்னுள் கழிந்த வளவில், நாரதரின் மொழிப்படியே பரமசிவமூர்த்தியார் தண்டுக மண்டலந்தாங்கித் தவமுந் தவஞ்செய்தும் பெருதவர் தானே,

"தத்தம் உள்ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரும்,
முத்தொழில் புரியு மூவா முதல்வனு முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற விருக்கு மாபோல்"

தவஞ்செய்ய வந்தார். அதைக்கண்ட ஹிமவான் தன் அருமை மகளைச் சிவபிரானுக்குப் பணிவிடை செய்து வரும்படியாகக் கட்டளையிட்டான். அப்பார்வதியும் அப்பொழுதையிலிருந்து முக்கண்மூர்த்தியின் முகங்கோணுமல் காலையிற் கடிது எழுந்து பூப்பறித்து மேடைகழுவித் தவத்திற்கு வேண்டுவனவாகிய சாமக்கிரிகள் எல்லாம் குறைவற சித்தமாக வைத்துப் பணிவிடை புரிந்து வந்தனள். ஆனல், அவள் இளமைப் பருவத்திற் குகந்த பந்தாடல் கழங்காடல் நீர் விளையா

டல் முதலியவற்றையெல்லாம் முற்றும் மறந்தாள். பணிவிடை புரிவதே தான் பெற்ற பாக்கிய மென்று எண்ணியிருந்தாள். வேண்டுதல் வேண்டாமை என்னு மிரண்டையும் ஒன்ருகப் பாவிக்கும் ஒப்பற்ற மூர்த்தி அப்பார்வதியின் பணிவிடைக்கு மெச்சி யிருந்தான்.

## தேவர்கள் போற்றல்

இங்ஙனமிருக்க, அறநெறிக்கும் மறநெறிக்கும் பேதமுணராத தாரகாசுரன் என்னும் ஒரு கொடிய வரக்கனிருந்தான். அவனுக்குத் தயை என்பது கருமையா செம்மையா என்பதுந் தெரியாது. ஜீவ காருண்யம் என்னும் ஒருபதம் உலகிலிருப்பதாகப் பாவிப்பதே கிடையாது. அவன் அநேக வாண்டுகள் பிரமனைக் குறித்து அருந்தவஞ்செய்து, பல பெரிய வரங்களைப் பெற்ருன்; ஆகாயம், பூமி, பாதாளம் என்னும் மூன்றிடங்களுக்குஞ் செல்லும் வன்மை வாய்ந்த அபார சக்தியையும் பெற்ருன். அவன் பெயர் சொல்ல அகிலலோகமும் நடுங்கும்; அவ்வசுரன் தேவர்களுக்கும், மற்றுமுள்ள நல்லோர்களுக்கும் அல்லும் பகலும் இடைவிடாமல் தொந்தரவு செய்து வந்தான். அத்தீயன் உபத்திரவத்தைச் சகிக்க முடியாத தேவர்கள் தங்கள் தலைவனுகிய தேவேந்திரனேடு ஒருநாள் பிரமனது சத்தியலோகஞ் சென்று, பிரமனைக் கண்டு வணங்கி, 'தேவரீர் அன்ருே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளின் சுவரூபமாக விளங்குகின்றீர்கள்; உம்மாலன்ருே அகன்ற வுலகமும், அதிலுள்ள சராசரப் பொருள்களும் படைக்கப்பட்டன. உலகங்களை

உண்டு பண்ணுவதும், உண்டாக்கிய வுலகத்தைக் காப்பாற்றுவதும், காத்த பின்பு அழிப்பதுமாகிய மூன்று தொழில்களையும் ஓர் திருவிளையாட்டைப் போலன்றோ செய்து வருகின்றீர்; ஹே! கலைமகள் கணவா! நீர் கண்ணைத் திறந்து பார்ப்பதே உலக சிருஷ்டி; கண்களை மூடுவதே உலகப் பிரளயம்; ஓ! வேதியா! விண்ணவருக் குகந்த வித்தகா! வேண்டி னோர்க்கு வேண்டும் வரமளிக்கும் வள்ளலே! தேவரீ ரைக் காட்டினும் எமக்குற்ற நற்றுணை யாவருளர்? தேவரீரைப் போன்றவர்களல்லவோ எம்போலியர் இடருற்றால் எடுத்தாதரித்தல் வேண்டும். தேவரீர் முக்காலங்களையும் உணரும் சக்தி வாய்ந்தவரன்றோ? உமது உருவத்தை யாவரால் அறியமுடியும்? தேவரீர் அறியாத தொருபொருளு முளவோ? என்று பல வாறு தோத்திரஞ் செய்தார்கள்.

தேவர்களின் தோத்திரங்களை யெல்லாம் செவி யேற்ற பிரமன், அவர்களைக் கையமர்த்தி 'இன்று நீங்கள் யாவரும் அவரவருக்கு அமைக்கப்பட்டிருக்குந் தொழிலையும் விட்டு விட்டு ஒன்றாய்த் திரண்டு வந்த தின் காரணமென்னே? ஒருநாளும் இல்லாமல் இன்று மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரனைப்போல உங் கள் முகங்களெல்லாம் வாடியிருக்கின்றனவே. உங்க ளுக்கு என்ன கஷ்டம் உண்டாயிற்று? ஏன் உங்கள் ஆயுதங்கள் எல்லாம் ஒளிமழுங்கிக் காணப்படுகின் றன? இந்திரனுடைய வச்சிராயுதம் எங்கே போய் விட்டது? எமனுடைய தண்டாயுதத்தை யார் அபகரித் தார்கள்? வருணனுடைய வன்மையான பாசத்தை

எவன் பிடுங்கிக்கொண்டான்? குபேரனுடைய கதாயுதத்தைக் கொண்டு சென்றவன் யாவன்? சுவரில் எழுதிய சித்திரத்தைப்போல இவர்கள் எல்லாம் ஏன் தன்னியற்கை யொளியுங் குறைந்திருக்கிறார்கள்? உங்கள் வன்மையுந் திண்மையு மெங்கே பதுங்கிக் கொண்டது?' என்று கேட்டான்.

பிரமன் பேச்சுக்களைக் கேட்ட இந்திரன் தேவ குருவாகிய பிரகஸ்பதி பகவானைப் பார்த்து, 'ஓ மகா புருஷா! பிரமனுக்குப் பதில் கூறு' மென்று விண்ணப்பித்துக் கொண்டான். உடனே பிரகஸ்பதி பகவானும் நான்முகக் கடவுளை நோக்கி, 'பிதாமக! தேவரீர் அறியாத விஷயங்களும் ஒன்றுளதோ? ஆயினும் தேவரீர் கட்டளையின்படி எங்கள் துன்பத்தைச் சொல்லுகிறேன் கேளும்: நீர் வரங்கொடுத்தனுப்பிய தாரகாசுரன் முறையே மூன்றுலகங்களையும் வென்றான். இவ்வளவு அவ்வளவென்றெடுத்துரைக்கவியலாத விடுக்கண்களை இமையவருக்கும் முனிவர்களுக்கும் இயைந்து செய்கிறான். சிசுக்களைச் சீற்றத்துடன் சீவி எறிகிறான். விருத்தாப்பியர்களை விண்ணிற்பந்தாடி விலங்குகளுக்கு விருந்திடுகிறான். பலமுள்ளவர்களைப் பதைபதைக்கப் பற்களால் கடிக்கிறான். பதிவிரதைகளைத் தூக்கிச்சென்று பரிபவப்படுத்துகிறான். அவன் இருக்கும் இடத்தில் சூரியன் என்றும் முழுகிரணங்களுடன் பிரகாசித்து அறியான்; அக்கதிரவனும் அவனது கடுமையான கட்டளைக்குட்பட்டுத் தன்னொளி மறைத்து எப்பொழுது பார்த்தாலும் சில்லென்னுஞ் சீதகிரணங்களுடன்

பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். சந்திரனுக்கு என்றும் பௌரணமியாகவேயிருக்கிறது. வாயுபகவானோ வேகமடங்கி விசிறியினல் விசிறுவதைப்போல் வீசிக்கொண்டிருக்கிறான்; திக்குப் பாலகர்கள் எண்மரும் அவன் கூப்பிடும்போதெல்லாம் எதிர் சென்று தோப்பிக்கரணம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள்; திக்கயங்கள் தந்தங்களை யிழந்தன. இருதுகள் மாறி மாறி வருவதே உலகவியற்கை; அத்தீயன்விஷயத்தில் அவைகளாறும் அப்படியில்லாமல் ஒரே காலத்தில் அவனுக்குப் பேரானந்தத்தைக் கொடுத்துக் கொண்டே யிருக்கின்றன. வருணன் சாகரத்திலுண்டாகும் நவமணிகளையும் முத்துக்களையுங் கொடுத்து முகமன் கூறிச் செல்லுகிறான்; நாக வரசர்களோ நாளும் அந்திகாலத்திற் சென்று, அவனுடைய அகநகரெல்லாம் தமது படங்களின் மேலுள்ள நாகரத்தினங்களால் விளக்கு வைக்கின்றார்கள். இத்தேவர் தலைவன் கற்பதருவில் பெற்ற விலையுயர்ந்த வாபரணங்களை அவனுக்குக் கொடுத்து வணங்குகின்றான். இங்ஙனமாக எல்லாத் தேவர்களும் அந்தப் பாவியின் கொடுங்கோலுக்கடங்கி நடந்தும், அவன் செய்யுங் கொடுஞ்செயல் பொறுக்க முடியவில்லை; நந்தவனத்தில் விந்தையாகச் செழித்துத் தழைத்துப் பூத்துப் பிஞ்சு விட்டிருக்கும் மலர் மரங்கள் ஒன்றுமில்லாமல் பிடுங்கிச் சென்றுவிட்டான். அப்ஸரஸப் பெண்கள் எல்லாரையும் அனுபவிக்க முடியாத காராக்கிரகத்திற் போட்டுக் கடுந்தண்டனை விதித்திருக்கிறான். தேவர்களுக்காக அங்கியிலிடும் அவிசுகளை யெல்லாம் தானே வலியக் கவர்ந்துகொள்ளுகிறான். இங்

திரனுடைய உச்சைச்சிரவம் என்னும் பெயர்வாய்ந்த உத்தம அச்சுவத்தைத் திருடிக்கொண்டு போய்விட்டான். திருமாலின் சக்கிராயுதம் அத்தியன் கண்டத்தில் நவரத்ன மாலையாகப் பிரகாசிக்கின்றது. ஆகாச கங்கையிலுள்ள பொற்றாமரைப் புஷ்பங்கள் ஒன்றில்லாமல் பறித்துக்கொண்டு போய்விட்டான். இப்படி நாங்கள் அடையும் துன்பங்கள் பலவாயிருக்கின்றன. இதில், எதை நான் தங்களிடம் சொல்லிக்கொள்ளுவது? எதை விடுவது? ஆகையால் தேவரீர் இத்தருணம் இவ்வேளையர்கள் மீது கருணை கூர்ந்து அம்மகா பாபியைக் கொல்லத்தக்க சேனைத் தலைவனை எங்களுக்குக் கொடுத்து ரக்ஷிக்கவேணுமென்று வேண்டிநின்றார்கள்.

தேவர்களின் குறைகளைக் கேட்ட தாமரையான், அவர்களை ஒருவாறு தேற்றி, 'உங்களைப் பீடித்த பயம் இன்னும் சில நாட்களில் ஒழியும்; அவன் விஷயத்தில் நான் ஒன்றுஞ் செய்வதற்கில்லை. ஏனெனில், நானே அவனுக்கு அப்படிப்பட்ட வரங்களை அளித்துவிட்டேன். நாம் வளர்த்த பிள்ளை துஷ்டனாகவிருந்தாலும் நாமே அவனை நாசஞ்செய்யலாமா? அப்படிச் செய்வது பெரும் பாதகமல்லவா? தான் வைத்து வளர்த்த மரத்தைத் தானே வீழும்படிச் செய்வாருமுண்டா? நீவிர் அஞ்சற்க! 'பலநாளைத் திருடன் ஒருநாளைக்ககப்படுவான்' என்னும் பழமொழிபோல அவனே அவன் செய்கிற தீமைக்குத் தக்கவண்ணமாகத் தண்டனைக்குட்படுவான், வெந்நீரால் வீடு வேகாது; வாயாடிகளால் காரியமாகாது.

பொறுமையே பூஷணம். சிவபிரான் கையிற் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற சக்தி என்னும் ஆயுதத்தால் அவன் ஆயுள் இறுதியடையும்; இது கிடக்கட்டும்; இப்போது சிவபெருமான் இமயமலையில் தவஞ் செய்துகொண்டிருக்கிறார். அம்மலைக்கு நீங்கள் சென்று அவர் தவத்தைக் கலைக்க முயலுங்கள்; பார்வதி தேவியை அத்தேவனுக்குக் கடிமணஞ் செய்து வையுங்கள்; அவர்களுக்குச் சுப்பிரமணியக் கடவுள் திருக்குமரராக வந்தவதரிப்பார்; அக்குழந்தை அவ்வசுரனைக் கொன்றுவிட்டு உங்கள் கட்டங்களைப் போக்கும்; சீக்கிரம் வேறொரு ஆலோசனையுஞ் செய்யாமற் செல்லுங்கள்' என்று விடைபகர்ந்தார். அது கேட்ட தேவர்கள் ஆனந்தமடைந்தார்கள்; அகம் பூரித்து அப்பிரமன் பேரருளுக்கு மெச்சி, அவர் கூறிய வுபாயத்தை வுள்ளத்தமைத்து, இனிச் செய்ய வேண்டுவனவாகிய காரியங்களைத் தடையின்றி முடிக்க வழிதேடல்வேண்டும்; 'தெய்வங்காட்டுமே யன்றி யூட்டாது' என்னும் பழமொழியை மனதிலெண்ணி ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடத்தை நாடிச் சென்றனர்.

மன்மதன் மாய்வு

கமலத்தோன் கட்டளைப்படியே செய்வதாகக் கூறித் தேவலோகத்தை அடைந்த தேவேந்திரன் ஓர் சபை கூட்டினன். அச்சபைக்குச் சுதர்மை என்று பெயர். அதில், முனிவர்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், சாரணர் முதலிய பல்வகைச் சாதியினரும் தேவர்கணங்களும் நிறைந்திருந்தனர். இவர்களினிடை

யில் தேவேந்திரன் மணிமகுடந்தரித்து, இந்திராணியுடன் சிங்காதனத்தில் வீற்றிருந்தான். அவன் அவையோர்களை நோக்கி, 'அறிவிற் சிறந்தவன்பர்களே! பிரமன் கூறியவண்ணம் சிவபெருமானார் செய்யுந் தவத்தைப் பின்னஞ் செய்வதற்குத்தக்க வன்மை வாய்ந்த வீரபுருஷன் யாவனிருக்கிறான்? அது சாமான்யமானதன்றே. அப்படி எவனாயினு மிருப்பின், உமது நுண்ணிய மதியாலாராய்ந்து பதில் சொல்லுங்கள்" என்று சொன்னான். அப்பொழுது அவ்வவைக்களத்திருந்தோர் யாவரும் இந்திரன் கேட்ட வார்த்தைக்கு என்ன பதிலளிப்பதென்று தோன்றாமல் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக்கொண்டு விளித்தார்கள். அவர்களுள், திரிகாலஞானியாகிய நாரதபகவான் புன்னகைபுரிந்து, 'அரச! நீ என்ன இக்காரியத்தை ஒரு பெரிதாக வெண்ணிக் கலக்கமுற்று அவையோரைக் கேட்கின்றனையே. அவர்களும் ஆழ்ந்த ஆலோசனை செய்கின்றனரே. வெண்ணெயைக் கையில் வைத்துக்கொண்டு நெய் இல்லையென்று வீடுவீடாக அலைபவர்களுமுண்டோ? என்னே உங்கள் மதியின் திறமை! கிருஷ்ணபரமாத்மாவின் புதல்வனாகிய மன்மதன் இருக்கும்போது நமக்கென்ன குறை? நாம் ஏன் தேடியலையவேண்டும்? அவனைச் சீக்கிரம் வரவழைத்தால் நமதுகாரியம் தடையில்லாமல் கைகூடும்' என்று சொல்லினர். அதைக்கேட்ட சபையோர்களும் மன்மதனே அப்பெருமான் தவத்தைக் கலைக்கத் தகுதியுள்ளவன். நாரதர் சொல்லிற்குமிஞ்சியதொரு வாசகமுண்டோ? தந்தையின் தந்திரத்தைத் தலைக்கட்டிக் கொடுப்பது

தனயன் கடமை என்பதை அறிந்திலீரோ! அத்துணை யான புத்திரனில், இந்காரதரும் ஒருவராள்ரோவென எல்லோரும் ஆமோதித்தனர். அதன்படியே இந்தி ரனும் மன்மதனை நினைத்தான்.

உடனே மன்மதனும் வந்து இந்திரனைப் பணிந்து, "ஐயா! உமக்கென்னால் ஆகவேண்டுவ தென்னை? எவனாயினும் பூவுலகில் தவஞ் செய்து உமது மேலான பதவியை அடைய விரும்புகின்றானோ? அல்லது உமது மனதைக்கவர்ந்த பெண் எவளேனும் இருக்கிறாளா? எதுவாக விருப்பினும் காலந் தாழ்த் தாமற் சொல்லும்; அதை முடித்தேவிடுகிறேன்; காலஞ்செய்வது காவலருஞ் செய்யார்கள். சீக்கிரம் தெரிவியும்" என்றான். இந்திரனும் அவனை அடியி லிருந்து முடிவரையில் கண்ணாரக் கண்டு "மன்மதா! அவைகள் ஒன்றுமில்லை; இப்பொழுது சிவபெரு மான் இமயமலையில் தவஞ் செய்துகொண்டிருக்கிறார். அவருக்குப் பார்வதி என்னும் பெண்ணொருத்தி பணி விடை செய்துகொண்டு வருகிறாள்; அப்பார்வதியி னிடம் சிவபிரானுக்கு அன்பு மேலிடும்படியாகச் செய்ய வேண்டும். அதற்குத் தகுந்தவன் நீ தான் என்று நினைத்து உன்னை என்னிடத்திற்கு வருவித் தேன்" என்றான்.

அவ்வசனத்தைக் கேட்ட மதனன், "ஐயா! சிவ பெருமான் மூவுலகினுக்கும் முதல்வனாயிற்றே. அவர் செய்யுந் தவத்தையா கலைக்கச் சொல்லுகிறீர்; வேண் டாம்.

"கையுந் நகையுங் கதிரார் விழியு
மெய்யுந் தழலாம் விமலன் றனை
யாதனெய்யும்படி சென்றிடி னிவ்வுயிர்கொண்
டெய்யுந் திறமு முளதோ வுரையாய்"

வேறு ஏதேனுங் கூறின் செய்யச் சித்தமாகவிருக்கின்றேன். அக்காரியம் சாமான்யமானதன்று; உலகினையெல்லாம் உண்டாக்கிய ஒரு பெருமுதல்வனை எதிர்ப்பாரும் ஏங்கும்படிச் செய்வாருமுண்டோ? அது விபரீதமாகவன்றோ முடிவுபெறும். ஆயிரம் மகங்களைச் சிறப்புடன் செய்து அனைவரும் போற்றும்படியான அரிய பதவியை ஆண்டுவரும் உமக்கும், அம்முழுமுதற் கடவுளின் உண்மை தெரியாதா? அப்பெருமான் விஷயத்தில் எனது மனம் துணியவில்லை." என்றான். அவ்வசனத்தைக் கேட்ட மகபதி ஒன்றுந்தோன்றாமல் மறுபடியுஞ் சத்தியலோகஞ் சென்று தனக்கும் மதனனுக்கும் நடந்த சம்பாஷணைகளை யெல்லாம் எடுத்து முறையிட்டான். உடனே பிரமன் மன்மதனை நோக்கி, "ஹே! மன்மதா! உன் வலிமை நீ யறியாய்; நான் உண்மையாக அறிவேன்; உன்னால் ஆகாத காரியமும் உலகிலுண்டோ? உன்போன்ற வில்லாளிகளும் பயமடைவார்களோ? உனது சகாயத்தால் உலகம் மேன்மையடையப்போவதென்றால், உத்தமர்கள் அதற்கு இடையூறு செய்வார்களோ? தங்களாலியன்றவரையில் முயற்சி யெடுத்துச்செய்ய முன் வருவார்களே யல்லாமல் உன்னைப்போலப் பின் சென்றவர்களை நான் இதுவரையிற் கண்டதே கிடையாது.

நீயோ தேவதாம்சமாகப் பிறந்தவன்; உனக்கு யான் அதிகமாகச் சொல்லவேண்டுவதென்ன விருக்கின்றது? முன்னம் உலகிற்காக உயிர் கொடுத்தவரும் உடல் கொடுத்தவரும் எலும்பு கொடுத்தவரும் பூவுலகிலிருந்துள்ளார்களென்னுஞ் சரிதையு மிருக்கின்றதே' அவைகள் நீ அறியாததொன்ரு? இப்போது நான் வீணே கதை படிப்பதால் ஆகும் பயனைக் காணேம். இனி அரைக்கணமும் வீண்வார்த்தை சொல்ல நான் தயாராகவில்லை; இப்போது நீ போய் இந்திரன் சொல்லியவண்ணஞ் செய்யப்போகிருயா? அல்லது எனது சாபத்தைப் பெறப்போகிருயா? இரண்டிலொன்றைச் சொல்லிவிடு"எனக்கறுத்தனர். பிரமன் கோபத்திற்குப் பயந்த மன்மதன், "குட்டுப் பட்டாலும் மோதிரக் கையாற் படவேண்டும்,' இவர் சாபத்தாற் சாவதைவிட சிவபெருமான் நேத்திராக்கினிக் கிலக்காவதே நன்மை" என்று நினைத்து அப்படிச் செய்வதாக வொப்புக்கொண்டான்.

அதன் பின்பு மன்மதனும் தென்றற் காற்ருகிய தேரில் ஏறினன்; சந்திரனுகிய குடை மேலே நிழலைச் செய்தது; மாலை வேளையிற் ருேன்றும் செவ்வானமாகிய யானை முன்னே நடந்தது; சமுத்திரமாகிய பேரிகை வாத்தியம் ஒலித்தது. அவனது கரத்தில் கருப்பு வில்லானது பொலிந்து கொண்டிருந்தது. தாழை, அசோகு, அல்லி, மாமலர், நீலோத்பலம் முதலிய பூக்களாலாகிய அம்புகளடுக்கிய அம்பருத்தூணியொன்று அவன் தோளில் தொங்கிக்கொண்டிருந்தது. இவ்விதமான வைபவங்களுடன் மன்மதனும்

சிவபெருமான் தவஞ் செய்துகொண்டிருக்கும் இமய மலைச்சாரலை அடைந்தான். அங்கு இவன் அடைந்ததுஞ் சில்லென்னுந் தென்றற் காற்று மிக்க பரிமளத்தோடு வீசியது. அசோகு முதலிய மரங்களில் புஷ்பங்கள் மலர்ந்து நறுமணம் வீசத் தொடங்கியது. குயில்கள் தங்கள் மூக்கினால் இளந் தளிர்களைக் கோதிக்கொண்டிருந்தன. வண்டுகள் கள்ளுண்டு மயக்கங்கொண்டு அங்குமிங்கும் பறந்து பாடிக்கொண்டிருந்தன. அப்பொழுது, உலகிலுள்ள எல்லாப் பிராணிகளும் இன்பக் கடலுளாழ்ந்து துன்பமற்றிருந்தன.

இப்படி உலகமெல்லாம் சந்தோஷமாய்க் காலத்தைக் கழிக்க, சிவபெருமான் மாத்திரம் தவங்கலைந்து கண்களைத் திறக்காமல் யோகத்திலேயே இருந்தார். அவர் தவஞ்செய்துகொண்டிருக்கும் இடத்திற்கு அருகாமையிலிருக்கும் மரஞ் செடி கொடிகளும் பறவைகளும் மிருகங்களும் கூடச் சிறிதும் சப்தம் செய்யாமலும் சலனமில்லாமலு மிருந்தன. சிவ பெருமானே பத்மாஸனத்தில் அமர்ந்து, இரண்டு உள்ளங் கைகளையும் அகற்றித் தன் இரண்டு ஊருகளின்மீது வைத்துக்கொண்டு, தியானத்தில் அமர்ந்து இருந்தார். அவரது சடையிலும் இடுப்பிலும் சர்ப்பங்கள் மாணிக்கங்களோடு பிரகாசித்துக் கொண்டிருந்தன; மார்பில் முப்புரிநூலும் அரையில் மான்தோலும் ஜொலித்தன. இப்படித் தவஞ் செய்வதைக்கண்டான் மன்மதன். உடனே அவன் உள்ளங் கலங்கி யுடல் நடுங்கியது. அத்தேவனைக் காணக்

கண் கூசியது. அச்சம் அவன் மனத்தில் தானாகவே யுண்டாயிற்று. அப்போது அவனது கரத்தின் கண்ணிருந்த வில்லும், தோளில் தொங்கிக்கொண்டிருந்த அம்பறாத் தூணியும் அவனறியாமலே நழுவி பூமியில் வீழ்ந்துவிட்டன. அதுகண்ட மன்மதன்,

"முறுவலி னெயில்மூன் றட்ட முதல்வனைப் பொருதியென்றே
நறைமலர யனுமேனைத் தேவரு நாகர்கோனு
முறுதுயரகல விக்கனுய்த்தனர் வினையேற்கின்னே
இறுதிவந் தணுகிற்றுருகு மிதற்குமோரைய முண்டோ"

வென்றுளங் கலங்கினான்.

அப்போது பார்வதி தேவியார் தன் தோழியர்கள் இருவர் பக்கத்திலே வர சிவபெருமானுக்குப் பணிவிடை செய்யத் தன் வழக்கப் பிரகாரம் அங்கு வந்தாள். அந்தச் சமயத்தில் சிவபெருமான் சிறிது கண்களைத் திறந்து பார்த்தார். அதைக் கண்ட பார்வதி அப்பெருமானைச் சாஷ்டாங்கமாக வணங்கி நின்றாள். முக்கண் பெருமானும் அவளை நோக்கி, 'மாதர் சிரோமணி! உனது பணிவிடைக்கு மெச்சினேன்; நீ வேறு பெண்களைக் கண்ணுற்கூட காணமுடியாத பெருமைவாய்ந்த மகாபுருஷனைக் கடிமணஞ் செய்துகொள்ளுவாய்' என்று வாழ்த்தினார். இவ்வண்ணம் பெருமான் பேசுவதைக் கண்ட மன்மதன், விதியை "தாமரை முதல்வற்கேனுந் தள்ளருந் தகையதன்றோ" என்று சிறிது தைரியங் கொண்டு, முன்னம் அச்சத்தால் கீழே விழுந்த வில்லை எடுத்து வளைத்து மோகனாத்திரம் என்னும் பாணத்தை அவர் மீது போட்டான்; அப்பாணம் பட்டவுடன் சிவபெரு

மானுக்குத் தவந் தடுமாறியது. பார்வதியைப் புன் சிரிப்போடு அடிமுதல் முடிவரையில் நோக்கினர்; பார்வதியும் ஐயன் நோக்கியதைக்கண்டு அகமகிழ்ந் தாள். சிவபெருமான், 'திடீரென்று நாம் ஏன் இப் படி மயக்கமடைந்தோம்; நம்முடைய தவம் ஏன் கலைந்தது' என்று யோசித்தவராய்த் திரும்பிப் பார்த்தார்; மன்மதன் கருப்பு வில்லோடு நின்றிருப் பதைக் கண்டார். இவனே இப்படி நம்மைச் செய் திருக்கவேண்டும் என்று நினைத்தார். உடனே அவ ருடைய நெற்றிக் கண்ணானது திறந்தது; அதிலிருந்து பெரிய அக்கினிச் சுவாலை யொன்று அகில லோகங் களையும் அழிக்கவரும் ஊழிக் கனலைப்போல வெழுந் தது. தேவர்கள் தியங்கினர். தபோதனர்கள் தத் தளித்தார்கள்; தாவர சங்கமங்கள் நிலை மாறின. அப்பொழுது ஆதியங் கடவுளான அண்ணலை அனை வரும் அரகர! சம்போ! இத்தருணம் எளியோங் களைக் காத்து ரக்ஷித்தல் வேண்டுமென்று போற்றி னர்கள். அதற்குள் கிளம்பிய நெருப்பானது மன்ம தனைச் சாம்பலாக்கிவிட்டது. சிவபெருமானும் அக் கணத்தே அவ்விடத்தை விட்டு வேறிடத்திற்குச் சென்றார். இவ்வாறு காமன் எரிந்து விழுந்த விடமே அங்கநாடெனக் கூறுவது.

## பார்வதி கடிமணம்

மன்மதன் மனைவியின் பெயர் இரதி என்பது. அவள் தன் கணவன் கடவுளாற் சாம்பலாக்கப்பட்ட தைக் கேள்விப்பட்டாள். தீப்பட்ட ஈயைப் போல வும், வெயிலிற்பட்ட புழுவைப் போலும், வலைப்

பட்ட மான்போலும், தாயிழந்த கன்றைப் போலவும் மிகுந்த துயரத்தால் துடித்து, செம்பதுமைத் திருக் குமரா! தமியேனுக் காருயிரே! சம்பரனுக்கு ஒரு பகைவா! கன்னல் வரிச்சிலை பிடித்தத் தடக்கை வீரா! வில்லாலே புரமூன்றெரித்த பரம்பொருளின் யோகத்தைத் தவிர்க்கவேண்டில், விண்ணோரெல்லா ரும் இறந்தனரோ? போவென்று உனைவிடுத்த தேவ ரெல்லாம் பொடியாகிப்போன வுன்னைக் கடிதெழுப்ப மாட்டாரோ? நின் தாதையாகிய மாயன் எல்லாம் வல்லனாயிருந்தும், என் துயர் காணாது எங்குத் தூங்கு கின்றனனோ?' அன்று நான் வேண்டாமென மறுத்த போதும், அமரர் பணி நடத்துவதே என் கடனென்று குறித்தனையே. இன்று உம்பர்கள் தம் விழியெல் லாம் உறங்கிற்றோ? அயனும் உவப்புற்றாரோ வென்று துள்ளி விழுந்தாள். கணவனைப் பிரிந்தும் நான் இருப்பேனோ என்பாள். கல்லில் தலையை மோதிக்கொள்வாள். கண்ணில் அருவிபோல் நீரைப் பெருக்குவாள். அண்டினவரை வெறுப் பாள்; தன்னிரு கரங்களால் மார்பு கிழிய அறைந்து கொள்ளுவாள். ஐயோ! கணவனை யெரித்த நெருப்பு என்னை ஏன் கொளுத்தாது ஒழிந்தது என்பாள். கணவன் இறந்தபின்பு பெண்களுக்குப் பூமியில் என்ன வேலை யிருக்கிறது? இப்பொழுதே நெருப்பை மூட்டுங்கள்; நான் அதில் விழுந்து என்னுருயிரை மாற்றிக்கொள்ளுகிறேன், என்று தோழிகளிடங் கூறுவாள்.

இங்ஙனம் அவள் துயரப்பட்டுக் கொண்டிருக்கும் போது, அசரீரியானது அவளை நோக்கி, 'ரதி! நீ வருந்

தாதே! இப்போது உனக்கு உண்டாகிய துக்கம் இன்னும் கொஞ்சநாளையில் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கிவிடும்; இனி, அதைக் குறித்து விசன முறற்க. இன்னும் சில நாட்களில் பரமசிவன் பார்வதியைக் கலியாணஞ் செய்து கொள்ளப் போகிறார். அப்போது உன் கணவனும் உயிர்பெற்றெழுந்திருப்பான்' என்று கூறிற்று. அதைக்கேட்ட ரதிதேவியும் ஒருவாறு சாந்தமடைந்து கலியாண நாளை எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள்.

இது இவ்வாறிருக்கப், பரமசிவன் வேறிடம் சென்றதால், பார்வதி மிகவும் வருந்தி, 'என்ன நான் அபாக்கியசாலியாயினேனே. மேலோர்களுக்குப் பணிவிடை செய்வதல்லவோ மேதினியில் பிறந்ததின் பயன்; அது கிடைத்தும் இடையில் அறுபட்டதே. ஒருகால் எனது பணிவிடையிற் குற்றமிருந்திருக்குமோ? பெரியோர்கள் மனம் பேதித்தால் எல்லாம் பேதிக்கும் என்று சொல்லும் வாக்கின் வண்ணம் இனி என்ன நேரிடப்போகின்றனவோ? நல்லது, நான் ஏன் பெண்ணாகப் பிறந்தேன்? இப்படிப்பட்ட கடவுளைக் கண்டும் அவரோடு வாழக்கொடுத்து வைக்காமல் போயினேனே. இதென்ன அபாக்கியம். உலகில் பெண்களாய்ப் பிறப்பதுமட்டும் போதுமா? எவ்வளவு தனவான் வீட்டில் பிறந்தாலும் ஏற்றதொரு கணவனைப் பெறாவிடில், பிறந்தும் பிறவாததேயாம். பெண்ணாகப் பிறந்தவர்கள் இவரைப் போன்றவர்களைக் கலியாணஞ் செய்து கொண்டாலல்லவா பெருமையைப் பெறுவார்கள். ஆகாயத்தில் அளவிடவொண்ணாத அநேகவாயிர நக்ஷத்திரங்களிருந்தா

னும் ஒரு சந்திரனுக்குச் சமானமாகுமா? ஐயோ! மற்றைய ஆண்பிள்ளைகள் இருந்தென்ன? இல்லாவிட்டால் தானென்ன? நான் அக்கடவுளை எப்படியாவது அடையாவிடின், நான் எடுத்த ஜன்மம் வீணுகும். ஆதலால், தவமாவது செய்து நான் நினைத்ததை நிறைவேற்றிக் கொள்ளுவேன்' என்று தவஞ் செய்யப் புறப்பட்டாள்.

தனது தவச்செல்வி தவஞ்செய்யக் கிளம்பியதைக் கண்ட மேனை பெண்ணை நோக்கி, 'குழந்தாய்! நீயோ பெண்! அதினும் உலகத்தாருக்கெல்லாம் மேன்மையான பெருமையைப் பெற்றுள்ள ஹிமவானுக்குப் பிறந்திருக்கின்ருய்; உன் எல்லையில்லாத குணத்திற்கும் அழகிற்கும் மெல்லிய சரீரத்திற்கும் தவமோ அடுக்கும்; அம்மம்ம! வேண்டாம்! வேண்டாம்! காட்டிற்குச் சென்று கண்மூடித் தவஞ் செய்வது யாருடைய வேலை? நீ நம்மில்லிருந்து ஏற்குந் தெய்வத்தைப் பூஜித்தாற் சாலும்' என்று தடுத்தாள். பார்வதியோ தான் பிடித்த முயலுக்கிரண்டு கொம்புண்டென்று சொல்லுவாரைப் போல ஒரே பிடிவாதமாகத் தவஞ் செய்தே தீருவேன் என்னும் எண்ணத்தை மனதிற்குள் வைத்துக்கொண்டு தன் தாயின் வசனத்தைச் செவியிலேற்றுக்கொள்ளவேயில்லை. அதன்பின்பு, அவள் தான் அலங்காரத்தின் பொருட்டணிந்திருந்த ஆடையை அவிழ்த்தெறிந்தாள். அங்கத்தில் அணிந்திருந்த அணியிழை யனைத்தையு மப்புற மகற்றினள். கருமையாகத் தழைத்து நீண்டுப் பின்னிவிட்டிருந்த பின்னலைப் பிரித்துச் சடையாகக் கட்டினள். மரப்பட்டையாலாகிய மரவுரியைத் தரித்

துக் கொண்டாள். உருத்திராக்கத மாலைகளைப் பூண வேண்டிய விடங்களிற் பூண்டாள். திலகத்தைப் போக்கினள்; திங்களைப்போன்ற திருநீற்றைத் திரு மேனி திகழத் திருத்தமாகப் பூசினள். வீட்டை வெறுத்தாள். காட்டைக் கருதினள். ஆங்கு ஓரிடத் தில் யோக சாத்திரமுறை வழுவாவண்ணம் ஆஸன மிருந்து கண்களை மூடிக்கொண்டு கடுமையாகத் தவஞ் செய்யத் தலைப்பட்டாள். இவளது தவத்தைக் கண்டு கிளிகள் துயருற்றன; குயில்கள் குதூகலத்தை விட் டன. மான்கள் மனம் வருந்தி நின்றன. சராசரங்க ளெல்லாம் இரக்கத்துடன் வருந்தாநிற்க, பார்வதி மாத்திரம் தான் வாட்ட வாட்ட ஆகாயத்திலிருந்து விழும் மழைத் துளிகளையும் சந்திரனிடத்திலுண்டான கிர ணங்களையுமே தனக்கு ஆகாரமாகக் கொண்டாள். உலர்ந்து உதிர்ந்து கிடக்கும் இலைச் சருகுகளையும் உணவாக வுட்கொள்ளுவதில்லை. இவ்வாறு நீக்கியதி னலேயே இவளுக்கு அபர்ணை என்னும் ஒரு நாம தேயமும் வழங்கி வருகின்றது. இப்படி இவள் தவஞ் செய்துகொண்டிருக்கும்போது, ஒரு பிரமசாரி அவள் தவஞ் செய்யுமிடத்திற்கு வந்தார். அவர் மார்பில் மான் தோலும், கையில் கமண்டலமுஞ் சமித்தும் வைத்துக்கொண்டிருந்தார். அப்பிரமசாரியின் தேஜஸோ பார்ப்பவர் கண்களைப் பறிக்கக் கூடிய தாக விருந்தது. பார்வதியும் அவரை அன்போடு முகமன் கூறி யுபசரித்தாள்.

பின்பு அப்பிரமசாரி அவளை நோக்கி, 'அம்மா! நீயார்? ஏன் தவஞ் செய்கிறாய்? தவத்திற்கு வேண்டு

வனவாகிய திரவியங்களெல்லாம் சரியாகக் கிடைக் கின்றனவா? உன் சரீரம் தவத்தால் நேரிடுங் கஷ்டங் களைப் பொறுக்கக் கூடியதாயிருக்கின்றனவா? நீ செய்யும் தவத்தைப்போல எந்த முனிவர்களும் செய்த தில்லையே; உன்னைப் பார்த்தால் மிகவும் சிறிய பெண்ணாகக் காணப்படுகிறாய்; வயோவிருத்தர்கள் அணிந்துகொண்டிருக்கும் மரவுரியை நீ இளமைப் பருவத்தில் ஏன் உடுத்துக்கொண்டிருக்கிறாய்? உன் முகத்தைப் பார்த்தால் மணாளனைப் பெறவேண் டித் தவம் செய்வதுபோலக் காணப்படுகின்றது. நீ இத்தகைமையான தவம் செய்யும்படி உன்னைச் செ ய்தவன் யாவன்? என்னுடைய தவத்திலும் பாதி யுனக்குக் கொடுக்கிறேன்; உன் எண்ணம் சீக்கிரத் தில் நிறைவேறும்' என்று நயம்பட வுரைத்தார்.

இவர் சொல்லியதைக் கேட்ட பார்வதியின் தோழி, 'சுவாமி! இவள், காமனைக் கொன்றவரும், சடாடவியிற் சந்திரனையுங் கங்கையையுந் தரித்தவ ரும், நெற்றியில் நெருப்புக் கண்ணை யுடையவரும், முழுமுதற் கடவுளுமான சிவபெருமானையே கலியா ணஞ் செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தை யுடையவளாய் இப்படித் தவஞ் செய்கிறாள்; தூங்கும் போதும் துயில் விழிக்கும்போதும், நெற்றிக் கண்ணா! திருநீலகண்டா! என்னைவிட்டு ஏன் போய்விடுகின்றீர் கள்? என்று கூறுகின்றாள்; இவளுடைய எண்ணம் என்றைக்குக் கைகூடுமோ தெரியவில்லை' என்ற னள்.

பிரமசாரி தோழியின் வார்த்தையைக் கேட்ட வுடன் புன்னகை புரிந்து, 'இஃதெப்படிக் கைகூடும்?

பாம்புகளை ஆபரணமாகக் கொண்டவரும், பக்தர்களுக்கு ஐசுவரியத்தை அருள்பவரும் ஆகிய சிவ பெருமானையோ மணக்க விரும்பினாய். நன்று. நன்று. மூடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவதைப்போலவும், குருடன் சூரியனைக் காண விரும்புவதைப் போலவும், இருளன் இராஜாவாக எண்ணங் கொள்ளுவதைப் போலவும் இந்த எண்ணம் உனக்கு எப்படியுண்டாயிற்று? அப்படித்தான் அவர் உன்னை மணந்துகொண்டாலும், அவருடைய யானைத் தோலைத் தரித்துக்கொண்டிருக்கும் திருமேனிக்கும், நெற்றிக்கண்ணுக்கும் கிழவெருதுக்கும், சுடுகாட்டுச் சாம்பலுக்கும் எங்ஙனம் உன் அழகும் ஆடையும் ஆபரணமும் வாகனமுமாகிய இவைகள் ஒத்திருக்கும்? அவரோ குலம் கோத்திரமில்லாதவர். பிரமன் கபாலத்தைக் கரத்திலேந்திக்கொண்டு ஊரூராய்ப் பிச்சை யெடுத்தவர். இப்படிப்பட்ட அவரை நீ கலியாணஞ் செய்துகொண்டால் உன்னைக் கண்டவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்; கலியாணப் பிள்ளைக்கு இருக்கவேண்டிய அழகிலும் குணத்திலும் ஏதாவது ஒன்று இவரிடத்தில் இருக்கின்றதா? என்று பரிகாசமாகக் கூறினர்.

இவைகளைக் கேட்டாள் பார்வதி. உடனே அவளுக்குக் கண்கள் சிவந்தன; புருவங்கள் துடித்தன; கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் சிதறின. அவள் அப்பிராம்மணச் சிறுவனை நோக்கி, 'போதும் நீர் கூறியது; சிவபெருமான் பெருமையை நன்ருக அறிந்திருக்கின்றீர். கொடுவினையாற் பீடிக்கப் பட்டவர்களும் தன் பெயரை ஒருதரம் சொன்ன

மாத்திரத்தில், அவர்கள் வினைகளை வேருடன் போக்கித் தன்னடிச் சோதிக்குச் சேர்த்துக்கொள்ளுபவரும், ஒப்புயர் வற்றவரும், முன்பு அடியும் முடியுந் தெரியாமல் அழலுருவாய் வளர்ந்து நின்றவரும், விருப்பு வெறுப்பு முதலியவைகளை விட்டவரும், எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் ஆதியங் கடவுளுமாகிய பரமசிவனுக்கு நீர் கூறிய அற்ப சந்தோஷத்தைத் தருபவைகள் எதற்கு? அவர் சுடு மயானத்திடை யிருந்தாலும் அதுவே ஈடும் எடுப்பும் இல்லாத மோக்ஷ உலகத்திற்குச் சமமாகும்; அவர் பிச்சைக்காரனாக விருந்தாலும் உலகில் அவர் படைத்த பெரும்புகழ் யாவரே பெற்றார்? அவர் பூசிக்கொள்ளுவது இடுகாட்டுச் சாம்பலாக விருந்தாலும், அச்சாம்பலே எண்ணற்ற யோகிகள் சிரத்தின் மேலும், தேவர்கள் நெற்றிமேலும் அழகாகப் பிரகாசிக்க வில்லையா? அவர் மாட்டின் மீது ஏறிச்சென்றாலும், திருமால், பிரமன், இந்திரன் ஆகிய இவர்கள் அவர் பாதங்களில் விழுந்து பணி கேட்க வில்லையா? உலகத்திற்கு எல்லாம் ஆதியம் பகவனாகிய மூர்த்திக்குக் குலமும் கோத்திரமும் சூத்திரமும் எதற்கு? வேதங்கள் அவரை விட்டு விட்டதா? அவராயினும் வேதத்தை விட்டாரா? புராணங்கள் அவரைப் புகழவில்லையா? அத்தகைய,

"முடிவி லாதுறை பகவனென் வேட்கையை முடியாது
விடுவ னென்னினுந் தவத்தினை விடுவனே மிகவின்னங்
கடிய நோன்பினை யளப்பில செய்துயிர் கழிப்பேனா
னெடிது மூத்தலின் மயங்கினை பித்தனே நீ" [யென்றாள்}

இனி உம்முடன் பேசி என்ன பிரயோசனம்? ஒருவனை நிந்திப்பதே மிகுந்த பாவத்தைத் தரக்கூடியது; அதிலும் ஒருவன் நிந்தித்துக் கொண்டிருப்பதைக் கேட்டுக் கொண்டிருப்பது பாவங்களினும் பெரிய பாவம். ஆதலால், தோழி, சீக்கிரம் இவ்விடத்தை விட்டுப் புறப்படு; நாம் வேறிடத்திற்குச் செல்லலாம் என்று மிகுந்த கோபத்துடன் மிக்க வேகமாக வெழுந்து செல்லத் தொடங்கினாள்.

பார்வதி கோபித்துச் செல்வதைக்கண்ட பிரமசாரி, உடனே பிராம்மண உருவை ஒழித்து, சடைமுடியும், சந்திரனும், கங்காநதியும், பாம்புகளும் சிரசில் விளங்க, அரையில் யானைத்தோலும், மார்பில் மணிவடமும், கொன்றைமாலையும், கையில் சூலமும் தோன்றப் பரமசிவனாக அவளுக்கு எதிரே நின்றார். கண்டாள் பார்வதி; மனம் பூரித்தாள்; உள்ளிருக்கும் ஆசையானது மேலே பொங்கி வழிவதைப்போலக் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கினாள்; இருகைகளையும் தலையின்மேல் குவித்துக்கொண்டாள்; 'ஹே! பரம்பொருளே ! கீழ்ப்பட்ட அடியாள் முன்வந்து தோன்றிய இது என்ன மாயம்; இது வரையில் என்னைப் பரீக்ஷை செய்தீரோ? சந்திரனைச் சடையில் தரித்த 'செல்வமே! கொன்றை மாலையை விரும்பிக் கொண்ட கோவே! எருதின்மேல் ஏறிவரும் இமையவர் தலைவா! பவளத்தைப் போன்ற திருமேனி உடையவனே! ஆதி அந்தம் இல்லாதவனே! அரவங்களை அணியாகக் கொண்ட அரசே! எல்லா உலகங்களுமாய் நின்ற சோதியே! நான் இன்றே பாக்கியத்தைப் பெற்றவளாயினேன்; உலகத்தில் யான்

பெற்ற பெருமையைப்போல் இனி யாவர் பெறப் போகின்றீர்கள்? தேவரீருக்கு என்மேல் இருந்த கருணையும் வெகு நன்று.' என்று பலவிதமாகத் தோத்திரம் செய்தாள். பரமசிவனும் அவள் தோத்திரமொழிகளைக்கேட்டுச் சந்தோஷமடைந்து, 'பார்வதி! உன் தவத்திற்கு யாம் கட்டுப்பட்டோம்; நீ விரும்பியது கைகூடும்' என்று கூறி மறைந்தார். பார்வதியும் எம்பெருமானுடைய திருவருளை வியந்து தோழியர்களுடன் தன் வீடு அடைந்தாள்.

அங்கு மறைந்த பரமசிவன் பிறகு கைலாசம் சென்றார். சப்தரிஷிகளையும் நினைத்தார். உடனே அவர்கள் மகேஸ்வரனை அணுகி "சுவாமி! தேவரீர் எங்களையும் ஒரு பொருட்படுத்தி அழைத்த காரணம் யாதோ?" என்று வினவினர். அதைக் கேட்ட பரமசிவன் 'தபோதனர்களே! நீங்கள் நேராக ஹிமவானிடம் சென்று அவன் பெண்ணை நமக்குக் கலியாணம் செய்துகொடுக்கும்படி ஏற்பாடுகள் செய்து வர வேண்டும்" என்றார். மஹாரிஷிகளும் அதற்கு இணங்கி ஈசனை வணங்கி விடைபெற்றுச் சென்றனர். சென்றவர்கள் சீக்கிரத்தில் ஹிமவான் இருப்பிடத்தை அடைந்தனர். ஸப்தரிஷிகளையும் கண்ட ஹிமவான் ஆனந்தமடைந்து அர்க்கிய ஆசனாதிகள் அளித்து அவர்களை நோக்கி, 'மேகங்கள் இல்லாமலே மழை பொழிவது போலவும், மலர்கள் இல்லாமலே பழங்கள் உண்டாவது போலவும் தேவரீர்கள் எனக்குக் காட்சிதந்த காரணம் யாதோ?' என வினயமாய்க் கேட்டனன். முனிவர்கள் மலையரசனுக்குக்

கண்ணுதல் கட்டளையைத் தெரிவித்தனர். அதைக் கேட்ட மேனை மணாளன் மகிழ்ச்சியடைந்து, தன் மனைவியின் விருப்பத்தையுங்கேட்டு, 'முனிவர்களே! நீலகண்டன் நினைவிற்கும் மாறு கூறுகின்றவர்கள் உளரோ? நித்திய யோகியும், நித்திய போகியுமான அப்பெருமானுக்கு எது நினைவோ அதுவே எங்களுக்கும் சம்மதம்' என்று கூறினன். இச்சுபசமாசாரத்தைத் தவசிகள் கறைக்கண்டனுக்குக் கூற, அவரும் அவர்களைத் தன் கலியாணத்தை நிறைவேற்றிய பிறகு போகும்படி வேண்டிக் கொண்டனர்.

பின்பு மணத்துக்கென்று ஓர் நாள் ஏற்படுத்தப் பட்டது. ஹிமவானுடைய நகரமெல்லாம் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டது. கலியாண நாளன்று, பார்வதியைப் பெண்கள் பலர் மஞ்சன நீராட்டி, அவளை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்தனர். பரமசிவனும் தன்னை அலங்கரித்துக் கொண்டு, தன் கணங்களுடன் ஹிமவான் நகரை யடைந்தார். அக்கினி சாக்ஷியாகக் கடவுள் பார்வதிக்கு மாங்கல்யம் சூட்டினர். பெண்கள் பாடினர். வாத்தியங்கள் முழங்கின. பிறகு லாஜ ஹோமம், அருந்ததிபார்த்தல் முதலிய சடங்குகள் நிறைவேறின. கலியாணம் முடிந்த பிறகு முனிவர்களும் மற்றவர்களும் பார்வதி நாதனைப் பணிந்தார்கள். அவர்கள் அவரை நோக்கிச் 'சுவாமி, மன்மதனுடைய பூசையும் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று வேண்டினர்கள். சிவபெருமானும் அதற்குச் சம்மதித்து மன்மதனை உயிர்ப்பித்து எழச் செய்தார். அவனும் அவரை வணங்க, அவனுக்கு

ஆசீர்வாதம் செய்தருளினார். ரதியும் இறந்த கணவனை மீண்டும் பெற்றுச் சந்தோஷமாகத் தன்னிடம் சேர்ந்தாள்.

## 6. குமரக் கடவுள் பிறப்பு

கலியாணம் முடிந்த உடன் பரமசிவன் பார்வதியை அழைத்துக்கொண்டு கைலாசம் சென்று அநேக வருஷங்கள் சந்தோஷமாக வாழ்ந்திருந்தார். தேவர்கள் தாரகாசுரனால் ஏற்பட்ட உபத்திரவத்தைப் பொறுக்கமுடியாமல், அக்கினிபகவானைச் சிவபெருமானிடம் அனுப்பித் தங்கள் குறைகளைக் கூறும்படி வேண்டினர். அப்படியே அக்கினிபகவான் பரமசிவனிடம் சென்று "சர்வலோக நாதனே! தேவதைகள் தேவரீருடைய பிரசாதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்; தயவு செய்து சுப்ரமணியக் கடவுளை எங்களுக்குச் சேனைத் தலைவனாக அனுப்பவேண்டும்" என்று வணங்கித் தோத்திரம் செய்தார். ஈச்வரனும் அக்கினிபகவான் கூறியதைக் கேட்டு, 'தேவதைகளுக்கு ஏற்பட்ட துன்பங்கள் எல்லாம் இன்னம் சில வருஷங்களில் சூரியன் முன்பட்ட பனிபோல நீங்கிவிடும்; இதோ என்னுடைய சக்தியில் சிறிது உம்மிடம் கொடுக்கிறேன். இதைப்பெற்றுச் செல்லும்' என்று தன் சக்தியில் சிறிது பாகத்தை அவர் கையில் கொடுத்தார். அந்தச் சக்தியை அக்கினிபகவானால் தாங்கமுடியவில்லை. உடனே அவர் இந்திரனிடம்சென்று, 'இந்திரா! சிவபெருமானால் கொடுக்கப்பட்ட இந்தச் சக்தியை என்னால் தாங்கமுடியவில்லை. நான் இதைக் கங்கை ஆற்றில் விட்டு விடு

கிறேன்' என்று கூறினர். இந்திரன் அதற்கு இணங்கவே அவரும் அவ்வாறு செய்தார்.

கங்கை யென்பது ஒரு பெரிய புண்ணிய நதி. இமயமலையில் உற்பத்தியாவது. தன்னிடத்தில் வந்து மூழ்கினவர்களுக்கு உடனே பாவத்தைப் போக்கக் கூடியது. ஸ்ரீமகாவிஷ்ணு திருவிக்ரம அவதாரம் செய்தகாலத்தில் அவர் பாதத்திலிருந்து உண்டாகியது; பகீரதனால் பிரம்மலோகத்திலிருந்து பூலோகத்திற்குக் கொண்டுவரப்பட்டது. முக்தி உலகத்திற்குப் பூலோகத்திலிருந்து சாற்றிவைக்கப்பட்ட பெரிய ஏணியைப்போன்றது. மஹாபரிசுத்தமான நீரையுடையது. எப்போதும் வற்றுமல் பெருகுகின்ற காரணத்தால் ஜீவநதி என்னும் பெயரைப் பெற்றுள்ளது. சிவபெருமான் சடாமுடியில் அகலாமல் தங்கியிருப்பது. இப்படிப்பட்ட பெருமைகளை எல்லாம் ஒருங்கேபெற்ற அந்தக் கங்காதேவியாலும் சிவபெருமானுடைய சக்தியைத் தாங்க முடியவில்லை. அக்கினிபகவான் சக்தியைக் கங்கையில் இட்டுச்சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் கிருதிகாதேவிகள் ஆறு பேர்களும் அவ்விடத்திற்கு ஸ்நானம் செய்ய வந்தார்கள். அப்பெண்கள் நீராடிக் கரையேறும் போது உருத்திரனுடைய அந்தச் சக்தியானது அவர்கள் மேல் பட்டது. படவே அவர்கள் ஆறு பேருக்கும் ஆறு ஆண் குழந்தைகள் பிறந்தன. கிருதிகாதேவிகள் தங்களுக்குப் பிறந்த குழந்தைகளை எடுத்துக்கொண்டு சென்று அருகிலிருந்த சரவணப் பொய்கையில் வைத்தார்கள். அந்தக் குழந்தைகளைக்

கங்காதேவியானவள் கையால் எடுத்தாள். உடனே அவைகள் ஆறு உடலும் ஒரு உடலாகவும், ஆறு தலையும், பன்னிரண்டு கையும் உள்ள ஒரு குழந்தையாக மாறின. கங்கையும் அக்குழந்தையைக் கண்டு சந்தோஷமடைந்து ஆறுமுகன் என்று பெயரிட்டு அதை அன்போடு வளர்த்து வந்தாள்.

ஒருநாள் பார்வதியும் பரமசிவனும் அவ்வழியாக ஆகாயத்தில் சென்றார்கள். அப்போது பார்வதி ஆறுமுகங்களையுடைய இந்தக் குழந்தையைப் பார்த்தாள். உடனே கணவனோடு கீழே இறங்கிவந்து, குழந்தையைக் கைகளால் எடுத்து, மார்போடணைத்து, முத்தமிட்டு, ஆனந்தக் கண்ணீரால் மஞ்சனமாட்டினாள். சப்தகன்னிகைகளும் ஆறுமுகனுக்கு ஆசீர்வாதம் கூறினார்கள்.

சுப்ரமணியக் கடவுளும் பாலசூரியனைப்போல் பிரகாசமுடன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, தன்னுடைய குழந்தை விளையாட்டினால் எல்லோரையும் சந்தோஷப்படுத்தி வந்தார். ஒருநாள் சிவபெருமான் கொலுமண்டபத்தில் உட்கார்ந்திருக்கும்பொழுது, இந்திரன் அம் மண்டபத்தை யடைந்து எம்பெருமானை வணங்கினான். அவனைக்கண்டதும் கங்காதரர் அவனுக்கு ஆஸனம் அளித்து, அவனை நோக்கி "தேவலோகம் ஏன் பிரகாசமில்லாமல் இருக்கிறது? ஏன் தேவதைகள் எல்லோரும் பூலோகத்தில் அலைந்துகொண்டிருக்கிறார்கள்? தாரகாசுரன் எப்படியிருக்கிறான்? சீக்கிரத்திலேயே நான் உங்கள் துன்பங்களைப் போக்

கடிக்கின்றேன்'' என்று கூறியருளினர். இவைகளைக் கேட்ட இந்திரன் 'தேவாதிதேவா! தங்களுக்குத் தெரியாததும் ஒன்று உண்டோ? திரிகால ஞானியாகிய உமக்கும் நாங்கள் கூறவேண்டுமா? தாரகாசுரனல் நாங்கள் படும் கஷ்டம் கொஞ்சமல்ல; எங்களுக்கு ஏற்பட்ட துன்பங்கள் தேவரீர் திருக்குமாரரால் நீங்குமென்று நான் முகனும் கூறியிருக்கிருர்; ஆதலால் தயவு செய்து குமரக் கடவுளை எங்கள் சேனைக்குத் தலைவனுக அனுப்பிவித்து எங்களுக்கு மங்களமுண்டாகும்படிச் செய்யவேண்டும்'' என்று வேண்டினன். முக்கண்பெருமானும் அவனுக்கு அபயமளித்து, தனது செல்வக் குமரனைநோக்கி 'குழந்தாய்! தேவர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைப்போக்கி மங்கள முண்டாகும்படிச் செய்' என்று கட்டளையிட்டார்.

## 7. தாரகாசுரன் வதம்.

தந்தையின் கட்டளையைக் கேட்ட குமாரக்கடவுள் களிப்படைந்தார். உடனே நெற்றிக்கண்ணனை நமஸ்கரித்தார். பார்வதியைப் பணிந்தார். அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்ருர். பிறகு சண்டைக்கு வேண்டிய ஆயுதங்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டார். மார்பில் இரத்தின கவசம் அணிந்தார். அப்போது பார்வதிதேவியும் தனது பிள்ளைக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணக் கூடிய பெருமை வாய்ந்த சத்தி என்னும் ஆயுதத்தைக் கொடுத்தாள். இதற்குள் இந்திரன் தனது தேரை அழகாக அலங்கரித்துக் கொண்டு வந்து நிறுத்தி

ஞன். முருகக் கடவுள் யாவரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு இந்திரனல் அலங்கரித்துக் கொண்டுவரப்பட்ட தேரின்மேல் ஏறினர். முனிவர்கள் 'முருகனுக்கு வெற்றி உண்டாக' என்றனர். பிரமன் அவரைக் கட்டியணைத்து ஆசீர்வதித்தார். கந்தருவர், வித்தியாதரர், சித்தர் சாரணர் முதலியவர்கள் கட்டியங் கூறினர்கள். பிறகு ஆறுமுகக் கடவுள் அமரர் சேனை தன்னைச் சூழ்ந்துவர 'நக்ஷத்திரக் கூட்டங்களின் மத்தியில் பிரகாசிக்கும் சந்திரனைப்போலவும், யானைக்கூட்டத்தின் மத்தியில்விளங்கும் மிருகேந்திரனைப்போலவும்' ஆகாய கங்கையை அடைந்தனர். கங்கையும் கார்த்திகேயரைக் கண்டதும் களித்து, சில்லென்று தன் நீரினல் அவர்மேல் காற்றின் மூலமாகவீசி, வழிகடந்து வந்த இளைப்பையாற்றினள். குமரக்கடவுள் கங்கைக்கரையில் உள்ள நந்தவனங்களையும் தேவலோகத்தையும் கண்டார். அவைகள் அழகுமாறி இருப்பதைக் கண்டு அடக்க முடியாத ஆவேசம்கொண்டார். 'இன்றே இந்நகரத்தைப் பாழ்படுத்திய பாவியை எமனுலகிற்கு அனுப்பிவிடுகிறேன்' என்ருர். அங்கு அவர் காசிபரையும் அதிதியையும் வணங்கி அவர்கள் ஆசீர்வாதத்தையும் அடைந்தார்.

எல்லோருடைய ஆசீர்வாதங்களையும்பெற்ற ஆறுமுகன் தேவர் சைன்னியங்களைச் சேர்த்துக்கொண்டு வெகு ஆடம்பரத்துடன் சண்டைசெய்யும் பூமியை அடைந்தார். சண்டைக்கு வேண்டிய பேரிகைகளும் வாத்தியங்களும் அங்கு முழக்கப்பட்டன. தேவவீரர்

கள் சிங்கநாதஞ் செய்தார்கள். பிரளயகாலப் பெருங்கடலைப்போல் தேவசேனைகள் பொங்கிவரு வதைக் கண்டான் தாரகாசுரன். தோள்களைத்தட்டி மீசைகளை முறுக்கினான். பல்லைக்காட்டிச் சிரித் தான்; 'வாருங்கள் சீக்கிரம்' வந்து விட்டில்பூச்சிகள் விளக்கில் சாவதைப்போல் என் கைப்பாணத்தால் மாளுங்கள்' என்று வீரவார்த்தைகள் கூறி, அசுர சேனைகளைத் திரட்டிக் கொண்டு தானும் சண்டைக் குத் தயாரானான். அப்போது கழுகுகளும் பருந் துகளும் ஆகாயத்தில் வட்டமிட்டன. நாய்கள் நரி கள் முதலியவைகள் பயங்கரமாகச் சப்தமிட்டுக் கொண்டு அசுரசேனைகளை நோக்கியோடின. அசுர சேனைகள் இருந்த இடத்தில் ஆகாயத்திலிருந்து இரத்தமழை பெய்தது. கொள்ளிகள் விழுந்தன. மண்காற்று வீசி அசுரசைன்னியத்தின் கண்களைத் தூர்த்தது. கோடைக்காலத்து இடிகளைப்போல் இடி கள் இடித்தன. இப்படி உண்டாகிய அபசகுனங் களைக் கண்டும் தாரகாசுரன் அஞ்சாதவனாய்த் தேவ சைனியங்களைத் தாக்கினான். அசுரர்களும் தேவர் களும் செய்யும் யுத்தத்தைக்கண்ட யாவரும் பயந்த னர். அச்சமயத்தில் தாரகாசுரன் சுப்ரமணியக் கடவுளைக் கண்டான். அடங்காக் கோபங்கொண்டு அவர்மேல் அநேகமாயிரம் பாணங்களைத் தொடுத் தான். குமரக்கடவுள் அவைகளையெல்லாம் விளை யாட்டாக விலக்கிவிட்டார். தன் பாணங்கள் எல்லாம் வீணாவதைக்கண்ட அசுரனுக்குக் கண்கள் சிவந்தன. 'அப்பனோ சடையன்; ஆத்தாளோ வேடச்சி; இவர் கள் பெற்ற நீயா என்னோடு சண்டைசெய்யத் தக்க

வன்? நீயோ வயதிற் சிறியவன்; உன்னேடு சண்டை செய்வதென்ருல் எனக்கு அவமானமாக இருக்கிறது; இனி ஒரு கணமேனும் இங்கு நில்லாதே; உன் தாயார் மடியில் சென்று கொஞ்சி விளையாடு; உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமானல் உடனே ஓடிவிடு' என்று வெகு கேவலமாகக் குமரனைப் பேசினன். இவைகளைக் கேட்ட கார்த்திகேயன் சிரித்துத் தாரகனைப் பார்த்து 'தாரகா! துள்ளுகிற மாடு பொதி சுமக்காது; வீண் பேச்சு எதற்கு? உனக்குச் சாமர்த்தியம் இருந்தால் என்னேடு சண்டைசெய் பார்ப்போம்' என்றனர். பிறகு அசுரன் அக்கினி அஸ்திரத்தைக் கடவுள்மேல் தொடுத்தான். இவர் அதை வருண அஸ்திரத்தினல் விலக்கினர். அவன் வாயு அஸ்திரத்தை விட்டான். இவர் நாகாஸ்திரத்தை விட்டு அதைத் தடுத்தார். இப்படி அவன் விடும் ஒவ்வொரு பாணத்தையும் இவர் 'முனிவர் மாயையைத் தடுக்கும் மகிமையைப்போல்' அதற்கு மாருன பாணங்களை விட்டுத் தடுத்து வந்தார். தன்னல் விடுக்கப்பட்ட பாணங்களெல்லாம் பாழானதைக் கண்டு சகிக்காமல் அசுரன் பெரிய கத்தியைக் கையில் கொண்டு, தேரை விட்டுக் குதித்துக்குமாரக்கடவுளைக் கொல்ல ஓடினன். அவன் அப்படி ஓடிவருவதைக் கண்ட சுப்ரமணியக் கடவுள் பார்வதி தேவியால் தனக்கு தரப்பட்ட சக்தியைப் பூஜை செய்து அவ்வசுரன்மேல் வீசி யெறிந்தார். அந்தச் சத்தி அசுரன் மார்பில் மேருமலை விழுந்ததைப்போல் விழுந்தது. உடனே அசுரன் ஆவி யொழிந்தது. சத்தியும் கடலில் மூழ்கிக் கடவுளின் கரத்தைச் சேர்ந்தது.

தேவசேனைகள் களிப்பென்னும் கடலுள் ஆழ்ந்தன. அசுரர்கள் இருந்த இடம் தெரியாமல் ஒளித்துக் கொண்டனர். கற்பக மலர்களைத் தேவர்கள் மழையைப்போல் வாரி யிறைத்தனர். கார்த்திகேயனை வாயார வாழ்த்தி முனிவர்கள் மகிழ்ந்தனர். குமரக் கடவுளும் வெற்றிமாலை சூடி, மாதலி ஓட்டி வரும் தேரின் மேலேறி, யாவரும் மங்களங் கூறத் தந்தையை யடைந்து வணங்கி நின்றனர். உலகத்துக் கெல்லாம் ஒருநன்மையைச் செய்துவந்த தன் குமரனைக் கண்ட பார்வதி அவனைப் பெற்றபொழுதடைந்த சந்தோஷத்தைக் காட்டிலும் பதின்மடங்கு மகிழ்ச்சியடைந்தாள்.

## ரகுவம்சம்

### திலீபன் சரிதம்

அநேக ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு, சூரிய குலம், சந்திரகுலம் அக்கினிகுலம் என மூன்று அரச குலங்கள் இவ்விந்தியாவில் இருந்தன. சூரிய குலத்தில் முதல்முதல் பிறந்தவன் மனுச்சக்கரவர்த்தி. அவன் சந்ததியார்களை மனுவமிசத்தார் என்று எல்லோரும் சொல்லுவார்கள். அவர்கள் நீதி தவறாதவர்கள். கடவுளிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவர்கள். தன்னுயிரைப்போல் குடிகளைக் காப்பவர்கள். சத்தியத்திலிருந்து சிறிதும் தவறாதவர்கள். தர்மத்தில் சிறந்தவர்கள்; கல்வியில் தேர்ந்தவர்கள். இப்படிப் பெருமை வாய்ந்த அந்தக் குலத்தில் திலீபன் என்னும் அரசன் ஒருவன் பிறந்தான். அவன்

விரிந்த மார்பையும், நீண்ட கைகளையும், மலையைப் போல் பருத்த தோள்களையும் உடையவன். அரச தருமங்களே ஒரு அழகிய உருக்கொண்டு வந்தன வென்று சொல்லும்படி அவ்வளவு சிறப்பாய் ஆட்சிபுரிந்தவன். அவன் தன் புஜபல பராக்கிர மங்களினுலும், கீர்த்தியினுலும் மேருமலைக்கு ஒப்பா னவன். அவன் தோற்றத்திற்குத் தகுந்த அறிவும், அறிவுக்குத் தகுந்த ஆராய்ச்சியும் ஆராய்ச்சிக்குத் தகுந்த முயற்சியும், முயற்சிக்குத் தகுந்த தேர்ச்சியும் உடையவன். அவனுடைய ஆளுகையில் குடிகள் பயம் இன்னதென்பது தெரியாமல் இருந்தனர். சூரியன் ' நீர் நிலைகளிலுள்ள நீரை ஆவியாக மாற்றி அதையே மகா பரிசுத்தமான மழையாகப் பெய்வது போல' இவ்வரசனும் குடிகளிடமிருந்து வாங்கிய ஆறிலொருபங்கு வரியை அவர்களுக்கே நன்மை செய்துவந்தான். அவன் தன்னுடைய வில்லும் அறிவுமே தனக்குத் தகுந்த துணையாகக் கொண்ட வன். குடிகளுக்குக் கல்விகற்றுக் கொடுப்பதாலும், வருகின்ற ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றுவதா லும், அப்போதைக்கப்போது புத்திபுகட்டி வந்ததா லும் தகப்பனைப்போன்று இருந்தான். அவன் தரு மத்தின் பெருமையால் அந்நாட்டில் மாதம் மூன்று தடவைகள் மழை பெய்து வந்தது.

இப்படிப் பெருமை பெற்ற அவ்வரசன் மனைவி யின் பெயர் சுதக்ஷணுதேவி என்பது. அவர்களுக்கு நெடுநாள்வரையில் பிள்ளை பிறக்காமலிருந்தது. அதனல் அவ்விருவரும் மிகவும் வருந்தினர்; புத்திர

னில்லாக் குறையை நீக்கிக்கொள்ள வழி எது என்று ஆராய்வாராயினர். அப்போது அவர்களுக்கு, 'வஸிஷ்ட முனிவரிடம் சென்றால் நம் எண்ணம் ஈடேறும்' என்னும் எண்ண முண்டாகியது. அதன் படியே திலீபனும் சுதக்ஷணாதேவியும் நல்லதோர் நாளில் தேரேறி வசிஷ்டர் அருந்ததியுடன் அமைந்து தவஞ்செய்யும் ஆச்சிரமத்தை யடைந்தான். அவர் கள் போகும் வழிகளிலெல்லாம், குயில்கள் பாடுவதை யும், மயில்கள் கலாபங்களைவிரித்துக் களிப்புடன் ஆடுவதையும், மான்கள் மருண்டு அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருப்பதையும், கிளிகள் கொஞ்சிப்பேசிப் பழவர்க்கங்களைக் கோதுவதையும், குரங்குகள் கிளைக் குக் கிளை வயிற்றில் குட்டிகளைக்கொண்டு குதூகலத் துடன் தாவிக்கொண்டிருப்பதையும் கண்களாரக் கண்டும், காதுகளாரக்கேட்டும் சென்றனர். கடைசி யில் இருவரும் முனித்தலைவன் வீற்றிருக்கும் ஆச்சிர மத்தையடைந்து, தேரைவிட்டுக் கீழே இறங்கி, அவரையும் அருந்ததியையும் நமஸ்கரித்தனர். அரச னையும் அரசியையும் கண்ட அருந்தவன் அவர்களுக்கு ஆசீர்வாதம் செய்து, ஆதனங்களில் உட்காரும்படிக் கூறினார். பிறகு அவர் அரசனை நோக்கி 'அரச! நாட்டில் யாவரும் சௌக்கியமா? உன் ஆட்சிக்குத் தவறு ஒன்றும் இல்லாமல் இருக்கிறதா? காலந்தவறா மல் தானதருமாதிகள் சரிவர நடந்து வருகின்றனவா? இன்று நீ என்னைத்தேடி இவ்வளவுதூரம் வந்த தென்ன?' என்றார். அதைக்கேட்ட அரசனும் அஞ் சலி செய்த கையினனாய் 'முனிவர் முதல்வா! இவ் வுலகத்தை ஆள்வது நீரன்றோ? நீவிர் இருக்

கும்போது எங்களுக்குக் குறை என்ன? ஆனலும் நெடுநாளாகியும், நாங்கள் முன்னம் பண்ணிய பாவங்களினலோ, வேறு எதனலோ எங்களுக்கு இது வரையில் புத்திரபாக்கியம் மட்டும் ஏற்படவில்லை; அந்த ஒரு குறையே எங்களை இரவும் பகலும் வருந்தச் செய்கின்றது; குழந்தைகள் இல்லாதவர்கள் தென்புலத்தார் கடனையும், தேவர்கள் கடனையும், விருந்தினர் கடனையும் செய்ய முடியாதவர்களாகின்ருரன்ருே? எத்தனைச் செல்வம் இருந்தாலும் உண்ணும் இனிய அன்னத்தை அங்குமிங்கு மிறைத்து வீடெல்லாம் கொஞ்சி விளையாடும் குழந்தைகள் இல்லாத வீடும் வீடாகுமா? புத்திரரில்லாதவர் புத் என்னும் நரகத்தை யடைவார்களன்ருே? இதுவரையில் எங்கள் வமிசத்தில் சந்ததியில்லாமல் இறந்தவர்கள் ஒருவரும் இல்லையே; நாங்கள் மாத்திரம் இவ்வாறு வருந்த நேர்ந்த, எங்கள் விதிதான் இருந்தவாறு என்னே? ஆதலால் முனிச்சிரேட்டா! கருணைகூர்ந்து எங்கள் குறையைப் போக்கியருளவேண்டும்' என்று பிரார்த்தித்தான். வசிஷ்டர் அரசன் கூறிய அனைத்தையும் கேட்டனர். உடனே தன் ஞானத்தால் முன் வரலாறுகளனைத்தையும் அறிந்தனர். பிறகு மன்னனை நோக்கி, 'திலீபச்சக்ரவர்த்தி! நீ முன்னோர்நாள் சுவர்க்கத்திலிருந்து பூமியை நோக்கி வெகு வேகமாகப் போய்க்கொண்டிருந்தாய்; அப்பொழுது வழியில் காமதேனு இருந்தது; அதை நீ பிரதக்ஷிணம் செய்து பூசைசெய்யாமற் போய்விட்டாய்; அதனல் தான் உனக்கு இப்பொழுது புத்திர பாக்கியம் இல்லாமல் போய்விட்டது; இப்போது

அதற்குச் செய்யத்தகுந்த பரிகாரம் ஒன்று இருக்கின்றது. அது என்னவென்றால், இதோ இருக்கும் அக்காமதேனுவின் கன்றாகிய நந்தினியை நீ சில காலம் மேய்த்து, அதற்குவேண்டிய சிஸ்ருஷைகளையெல்லாம் நீங்கள் இருவருமாகச் செய்துவரவேண்டும். அப்படிச் செய்தால் நீங்கள் அடைந்த துன்பமும் போய்விடும்' என்று கூறினர்.

அவர் கூறியபடியே அரசனும் அரசியும் செய்ய ஆரம்பித்தார்கள். நந்தினியோ சிவப்பும் வெளுப்பும் கூடிய அழகிய சரீரத்தையுடைய தெய்வலோகத்துப் பசு. அதனுடைய குளம்புகளிலிருந்து மேலே கிளம்பிச்செல்லும் தூசிகளே பாபத்தைப் போக்கடிக்கும் சக்திவாய்ந்தவை. இப்படிப் பெருமை வாய்ந்த அப்பசுவைக் காலையில் சுதக்ஷணாதேவி நெற்றியில் குங்குமம் மஞ்சள் முதலிய பொட்டுகளிட்டு, கழுத்தில் பூமாலையைச் சூட்டி மேய்த்து வர அனுப்புவாள். திலீபன் அதைப் புல்லுள்ள இடங்களுக்கு ஓட்டிச் சென்று மேய்ப்பான். பகல் வேளையில் நல்ல நீருள்ள இடங்களுக்கு ஓட்டிச் சென்று தண்ணீர் காட்டுவான். மாலை வேளையில் மனச்சந்தோஷத்துடன் வீட்டுக்கு அழைத்து வருவான். அப்போது அரசியும் அதை எதிர்கொண்டு அழைத்துப் பிரதக்ஷிணம் செய்து காலைவேளையில் செய்தது போலப் பூசனை புரிந்து தொழுவத்தில் கன்றோடு கட்டி புல் போடுவாள். இப்படி இருவரும் அந்தப் பசுவை வெகுகாலம் பூசித்து வந்தார்கள். அப்பசுவும் அவர்கள் மேல் மிகுந்த அன்பாய் இருந்தது.

வழக்கம்போல் ஒருநாள் அரசன் பசுவைக் காட்டில் மேய்த்துக் கொண்டிருக்கும்போது, திடீரென்று ஒரு சிங்கம் அப்பசுவின்மேல் பாய்ந்தது. அதைக் கண்ட அரசன் அடங்காக் கோபங்கொண்டு வில்லை வளைத்து அம்பை அதில் பூட்டினன்; ஆனல் அந்த அம்பை அவனல் விடமுடியவில்லை. சுவரில் எழுதிய பொம்மையைப்போல அப்படியே நின்றுவிட்டான். அச்சமயம் அந்தச் சிங்கம் அவனைப் பார்த்து 'நீ என்னைக் கொல்லமாட்டாய்; உன்னல் அது முடியாது; நான் பரமசிவனுடைய வேலைக்காரன்; என் பேர் கும்போதரன் என்பது; இதோ நிற்கும் இந்தத் தேவதாரு மரம் பார்வதியைச் சேர்ந்தது; அவளால் ஆசையாக வளர்க்கப்பட்டது; சுப்ரமணியக் கடவுளிடத்தில் அவள் எவ்வளவு ஆசை கொண்டிருக்கிருளோ அதைவிடப் பத்து மடங்கு இம்மரத்தின்மேல் ஆசைகொண்டிருக்கிருள். அவள் ஆசைக்குக் காரணமான அந்த மரத்தைப் பரமசிவன் என்னைக் காத்துக் கொண்டிருக்கக் கட்டளையிட்டிருக்கிருர்; அம்மரத்தினிடத்தில் எந்த மிருகங்கள் வந்தாலும் அதைக் கொன்று தின்னுவது என்னுடைய வேலை; ஆதலால் நீ இப்பசுவை என்னிடம் விட்டு, வந்த வழியைப் பார்த்து வீட்டுக்குச் சென்றுவிடு. உன்னுடைய ஆண்மையும் வீரமும் என்னிடத்தில் செல்லாது; என்னைப்போன்ற தெய்வத் தன்மை பொருந்தியவர்களிடத்தில் தோற்றுவிட்டால் உனக்கு அதனல் ஒரு இழிவும் ஏற்படாது: சீக்கிரம் சென்றுவிடு' என்றது. சிங்கத்தின் பேச்சைக் கேட்டான் அரசன்; என்ன செய்வதென்று தெரி

யாமல் திகைத்தான்; ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு, சிங்கத்தை நோக்கி,

" சிங்கமே! இந்தப்பசு எனக்குச் சொந்தமன்று; இது எனது குருவின் பசு; என் உயிரைக் காட்டி லும் எனக்குச் சிறந்தது; தயவுசெய்து அதை விட்டு விடு; அதற்குப் பதிலாக என்னைத் தின்று உன் பசியை ஆற்றிக்கொள்" என்றான். அதைக்கேட்ட சிங்கம்,

' அரசே! எல்லா உலகங்களும் புகழ்ந்து பேசப் படும் பெருமையை உடைய நீயா ஒரு பசுவின் பொருட்டுப் பிராணனை விடப்போகின்றாய்; இது உன் குலத்திற்கும், புகழுக்கும், வீரியத்துக்கும், பெரிய அபவாதமாக விருக்கின்றதே; உன் குரு இந்த ஒரு பசுவிற்காக உன்மேல் கோபங்கொண்டா லும், உன்னிடத்திலிருக்கிற பசுக்கூட்டங்களில் பாதியை நீ அவருக்குக் கொடுத்து விடலாமே' என்று இனிமையாகக் கூறிற்று. அவ்வுரைகளைக் கேட்ட அரசன் பின்னும் மிருகேந்திரனை நோக்கி,

' மிருகேந்திரா! நீ கூறிய அனைத்தும் வெகு நன்று; ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றுவது அன்றோ அரசர் முறைமை; அதைவிட்டு, 'நீ போ' என்றால் நான் எப்படிப் போவேன்? நான் அப்படிச் செய்தால் நம்பிக்கைத் துரோகம் செய்கிறவர்களில் ஒருவனாக மாட்டேனோ? பிறந்த குலத்திற்குப் பெருமையைத் தேடிவைப்பதல்லவா மனித ஜன்மத் தின் முக்கிய பயன்களில் ஒன்றாகும். என் பிராணன்

போகும்வரையில் நான் இந்தப் பசுவை விட்டுப்பிரியேன்; அதைப் பிறர் ஹிம்ஸிக்கவும் சகியேன், ஆதலால் நீ அதைக் கொல்வதை விட்டுவிடு" என்று மறுபடியும் வணங்கி வேண்டினன். இப்படிப் பலவாறு திலீபன் நீதிகளைக் கூறிச் சிங்கத்தோடு வாதாடி முடிக்கும் சமயத்தில், ஆகாயத்திலிருந்து மலர்மழை சிந்தியது. உடனே சிங்கம் அவ்விடத்தில் காணாமல் மறைந்து விட்டது. அப்போது நந்தினி என்னும் அந்தத் தெய்வப்பசு அரசனைப்பார்த்து, 'நான் உன் உண்மைப் பக்தியைப் பரிசோதிப்பதற்கே இங்ஙனம் செய்தேன்; வசிஷ்ட முனிவரின் அனுக்கிரகத்தினால் என்னிடத்தில் எமனும் வரமுடியாது; நீ அவரிடம் கொண்டுள்ள பக்தியையும், என்னிடம் வைத்துள்ள அன்பையும் பார்த்துச் சந்தோஷமடைந்தேன்; நீ என்னிடத்திலிருந்து பெறவேண்டுவது யாது? தடையில்லாமல் உடனே கொடுக்கிறேன்' என்று சொல்லிற்று. மன்னனும் மிகுந்த சந்தோஷங்கொண்டு, 'தெய்வத்தன்மை பொருந்திய நந்தினியே! நான் புத்தென்னும் நரகத்தில் வீழ்ந்து வருந்தாதபடி, எனக்கு ஓர் நல்ல பிள்ளையைத் தரவேண்டும்' என்று வேண்டினன். அப்பசுவும் 'உன் எண்ணம் சீக்கிரத்தில் கைகூடும்' என்று ஆசீர்வதித்தது.

ஆவினிடம் ஆசீர்வாதம் பெற்ற அரசனும் அரசியும் சந்தோஷ மடைந்தவர்களாய்க் குருவினிடம் சென்று பசுவை ஒப்புவித்து, விடைபெற்று அரண்மனைக்குச் சென்றனர். சிலநாட்கள் கழிந்ததும் சுதக்ஷணாதேவி கருப்பம் தரித்தாள். புதுமையான

அழகுகள் மாதந்தோறும் அவள் சரீரத்தில் தோன்றிக்கொண்டேயிருந்தன. இப்படிப் பத்து மாதங்கள் கழிந்தன. பிறகு நல்ல நாளொன்றில் அரசன் மனம் மகிழவும், அகிலமெல்லாம் குளிரவும், ஆண் குழந்தையொன்றினை அரசியும் பெற்றாள். அப்போது அரசன் அடைந்த சந்தோஷத்திற்கு அளவே இல்லை; 'பிறவிக் குருடன் கண்களைப் பெற்றதைப் போலவும், பெருங்கடலில் திண்டாடும் ஒருவன் கரையினைக் கண்டதுபோலவும்' அரசன் குழந்தையைக் கரத்திலேந்தி, 'என் ஆருயிரே! கடுமை பொருந்திய நரகத்தைப் போக்கிய கண்மணி! பித்ருக்கள் பசியைத் தீர்த்த பெருமானே!' என்று பலவாறு புகழ்ந்து முத்தமிட்டான். தானங்களை யெல்லாம் சிறப்பாகச் செய்தான். நீங்கள் இன்னம் பத்து வருடங்களுக்கு வரிகட்ட வேண்டாம்" என்று குடிகளிடம் கூறினன். பொக்கிஷசாலையைத் திறந்து வேண்டியவர்களுக்கு வேண்டியபடி தருமம் செய்தான். குடிகளும் குழந்தைபிறந்த தினத்தைப் பெரிய உற்சவமாகக் கொண்டாடினார்கள். பிறகு அந்தக் குழந்தைக்கு ரகு என்று பெயரிட்டார்கள்.

குழந்தையும் தவழ்ந்தும், தத்திநடந்தும், மழலைச் சொற்கள் பேசியும், சிறுதேர்உருட்டியும், பெற்றோர்களை மகிழ்வித்துக் குழந்தைப் பருவங்கடந்து, வாலப் பருவத்தை யடைந்தது. அப்போது அரசன் கல்வியிற் சிறந்த ஒரு உபாத்தியாயரிடம் பிள்ளையை ஒப்புவித்துப் படிப்புச் சொல்லிக் கொடுத்தான். ரகுவும் படிப்பிலும், வில்வித்தை வாள்வித்தை முதலிய அர

சர்களுக்குள்ள வித்தையிலும் கெட்டிக்காரனுனன். அவன் எல்லா வித்தைகளையும் கசடறக்கற்றுணர்ந்த பின், அரசன் நல்ல பெண்ணொருத்தியை அவனுக்குக் கலியாணம் செய்து வைத்தான். பிறகு திலீபன் தன் பிள்ளையின் பராக்கிரமத்தினுல் தொண்ணூற்றென்பது அசுவமேத யாகங்களைச் செய்துமுடித்தான். மறுபடியும் அரசனுக்கு நூறுவது யாகம் செய்து முடிக்கவேண்டு மென்னும் எண்ணம் உண்டாகியது. அதனுல் அவன் தன் பிள்ளையைக் கூப்பிட்டு 'இளஞ் சிங்கமே! உனது சாமர்த்தியத்தினுல் நான் யாவராலும் செய்து முடிக்க முடியாத அசுவமேத யாகங்களை செய்துமுடித்தேன்; கடைசியாக இன்னம் ஒன்று செய்து முடிக்க வேண்டுமென்று ஆசையுண்டாயிருக்கிறது; ஆதலால் நீ யாகத்துக்கென்று தயாரித்து வைத்திருக்கும் இக்குதிரையுடன் முன்போல் உலகமெல்லாம் சுற்றி வரவேண்டும்' என்று கூறினுன். ரகுவும் 'தந்தைசொல் மிக்க மந்திரமில்லை' என்னும் நீதியை நன்றாக அறிந்தவன் ஆதலால், அவர் கூறியபடி குதிரையைப் பிடித்துக் கொண்டு புறப்பட்டான்.

இது இப்படியிருக்கும்போது, தேவேந்திரனுக்கு இந்தயாகம் செய்யும் சமாசாரம் தெரிந்தது. அவன் உடனே கோபங்கொண்டான். ஏனென்றால், நூறு அசுவமேதயாகம் ஒருவன் செய்து முடித்தால் அவன் பிறகு இந்திரனுடைய உலகத்தை அடைந்து அவன் ஆசனத்தில் அமர்ந்து இந்திரனுக ஆகி விடுவான். ஆகையால் இந்திரன் மிகவும் பயந்து ரகு பிடித்துச்

செல்லும் யாகக்குதிரையைப் பிடித்து ஒளித்துவிட்டான். அதனால் இந்திரனுக்கும் ரகுவுக்கும் பெரிய சண்டை நடந்தது. அந்தச் சண்டையில் இந்திரன் ரகுவைத் தன் வச்சிராயுதத்தினால் அடித்தான். அப்படி அடித்தும் அந்த வச்சிராயுதம் ரகுவை ஒன்றும் செய்யவே இல்லை. அதைக்கண்ட இந்திரன் மிகவும் சந்தோஷப்பட்டு அக்குமாரனை நோக்கி 'நீ மகாபுருஷன், இதுவரையில் என் வச்சிராயுதத்தினால் அடிபட்டவர் பிழைத்ததில்லை. இன்று உன்னிடம் என் ஆயுதம் தன் சக்தியை இழந்துவிட்டது; உன் வீரத்தைக்கண்டு சந்தோஷமடைந்தேன்; குதிரையைத் தவிர வேறு எதைக்கேட்டாலும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்' என்றான். அப்பொழுது ரகு இந்திரனை நோக்கி, 'நீ என் யாகக்குதிரையை விடாதே போனால், இக்குதிரையினால் செய்யப் புகுந்த யாகத்தின் பயனையாவது என் தந்தைக்குக் கொடுத்து விடு' என்று கேட்டான். தேவராஜனும் ரகுவின் எண்ணப்படியே வரத்தைக் கொடுத்துத் தேவலோகம் சென்றான்.

பின்பு திலீபன் சில வருஷங்கள் ராஜ்யத்தைச் சிறப்பாக ஆட்சிசெய்து, நல்ல தினமொன்றில் ரகுவுக்கு மங்கள ஸ்நானம் முதலியவைகளைச் செய்வித்து, சகல வாத்தியங்களும் முழங்க, மங்கையர் மங்களம் பாட, வேதியர் வேதமோத, மகுடஞ் சூட்டினான். அன்று முதல் ரகுவும் ராஜ்யத்தைச் செம்மையாய் ஆண்டுவர, திலீபனும் தபோவனம் அடைந்து கடவுளைக் குறித்துத் தவஞ்செய்து மோட்ச உலகத்தையடைந்தான்.

## ரகு மஹாராஜன் சரித்திரம்.

தந்தை இறந்தபின்பு ரகு இராஜ்யத்தையெல்லாம் வெகு விமரிசையாக ஆண்டுவந்தான். அவன் ஆட்சியில் குடிகள் யாதொரு கஷ்டமும் இல்லாமல் இருந்தனர். எல்லோரும் ரகுவைக் கொண்டாடினார்கள். இவன் புகழ் பரவாத இடமே இல்லை. இவ்வாறு சிலகாலஞ் செல்ல, ரகு திக்குவிஜயம் செய்ய விரும்பினான். உடனே அவன் வேண்டிய அனைத்தையும் சேகரித்துக்கொண்டு, நாற்படைகள் தன்னைச் சூழ்ந்துவர, நல்லதினம் ஒன்றில் தன் நாட்டை விட்டுப் புறப்பட்டான்.

அவன் செல்லும் வழிகளில் காடுகளை அழித்து நாடுகளாக்கியும், பாலை வனங்களில் பெரியகுளங்களை வெட்டியும், ஆறுகளுக்கு எல்லாம் வாராவதிகளைக் கட்டியும் ஜனங்களுக்கு மிகுந்த நன்மையைச் செய்தான். கிழக்குக் கரையிலுள்ள நாடுகளை எல்லாம் ஜெயித்தான். சும்ஹதேசம், வங்கதேசம் கலிங்கதேசம் முதலிய நாடுகளையும் வென்று, தென்னாட்டிலுள்ள அரசர்களை யெல்லாம் தன் அடிபணியச் செய்து, கன்யா குமரியைக்கண்டு, கேரள நாட்டை யடைந்தான். பிறகு அங்குள்ள அரசர்களை யெல்லாம் முதுகுகாட்டி யோடும்படிச் செய்து, பாரசீகர், ஹூணர், காம்போஜர் முதலிய சிறந்த அரசர்களையும் தோற்கடித்தான்.

எல்லா நாடுகளையும் ஜெயித்து விஜயலக்ஷ்மியுடன் அயோத்தியை அடைந்த ரகு, விச்வஜித் என்

னும் ஒரு யாகத்தைச் செய்யத் தொடங்கினன். அந்த யாகமோ சாதாரணமான அரசர்கள் செய்யத் தகுந்த தன்று. எல்லா உலகங்களையும் வென்ற வீரனே செய்வது. அப்படிப்பட்ட சிறப்புப் பொருந்திய யாகத்தைச் செய்யும்போது ரகு தன் பொக்கிஷத்தில் உள்ள பொருளை யெல்லாம் வேதியர்க்கும், வறியோர்களுக்கும், விருந்தினர்களுக்கும், வாரி வாரிக் கொடுத்தான். அதனல் அவன் பொருள்களெல்லாம் செலவழிந்து விட்டன. ஒருநாள் அரசன் அரண்மனைக்கு வரதந்து என்னும் ரிஷியின் சிஷ்யரான கௌத்ஸர் என்பவர் வந்தார். அம்முனிவரைக் கண்ட மன்னன், கையில் மண்பாத்திரம் நிரம்ப நீர் கொண்டு அவர் பாதங்களைக் கழுவி உபசரித்தான். அதைக்கண்ட முனிவர், "அரசே! நான் உன்னிடம் தக்ஷிணை பெற்றுப் போகவேண்டும் என்னும் ஆசையோடு வந்தேன்; ஆனல் உன் நிலைமையைக் காண என்மனம் வருந்துகின்றது; நான் போய் வருகிறேன்' என்று கூறிப் புறப்பட்டார். முனிவர் கூறியவைகளைக் கேட்ட ரகு மனங் கலங்கி, கௌத்ஸரை நோக்கி, 'தாங்கள் தயவு செய்து இக்குடிசையில் மூன்று நாள்கள் எழுந்தருளி யிருக்கவேண்டும்; எளியேன் பேச்சை அசட்டை செய்யலாகாது' என்று வேண்டினன். முனிவரும் அதற்கு இணங்கினர். ரகுவும் நாம் முனிவருக்கு எங்கிருந்து தக்ஷிணை கொடுக்கப்போகிறோம் என்று சிறிது யோசித்தான்; அப்போது அவனுக்கு ஒரு நினைவு வந்தது. உடனே அவன் தன் தேரைச் சித்தப்படுத்திப் போர்க்

கோலங்கொண்டு, 'அளகாபுரியை வென்று வருகின்றேன்' என்று புறப்பட்டான். அக்கணமே குபேரனுக்கு இச்சமாசாரம் தெரிந்தது. அதனால் அவன் ரகுவின்மேல் ஆசைகொண்டு அவனுக்கு அளவற்ற செல்வம் உண்டாகும்படி செய்வித்தான். திடீரென்று தன் அரண்மனையில் செல்வம் நிறைந்து விளங்குவதைக் கண்ட ரகு மிகுந்த சந்தோஷமடைந்தான். முனிவருக்கு வேண்டிய பொருளை முதல் நாளிலேயே கொடுத்தான். அவரும் பொருளைப் பெற்று அரசனுக்குப்பல ஆசீர்வாதங்களைச் செய்து, தன் ஆச்சிரமத்தை யடைந்தார். அவர் அகன்று சில நாள்கள் கழிய, அரசனுக்கு ஓர் அழகிய ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு அஜன் என்று அரசன் பெயரிட்டுக் குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தான்.

## அஜன் மணம்

அஜன் ஐந்து பிராயத்தை யடைந்தவுடன் ரகு அவனை நல்லாசிரியரிடம் அனுப்பிக் கல்வி பயிற்றுவித்தான். அஜன் கல்வியில் கெட்டிக்காரனான பிறகு, அரசர்களுக்குரிய வில்வித்தை முதலிய வித்தைகளிலும் சிறந்து விளங்கினான். அக்காலத்தில் ஒரு நாள் தூதுவர் சிலர் விதர்ப்ப நாட்டிலிருந்து ரகு மஹாராஜன் அரண்மனையை அடைந்தனர். அவர்களை வந்த விஷயம் என்ன என்று அரசன் கேட்க, அவர்கள் ஒரு கடிதத்தை அவன் கையில் கொடுத்தார்கள். அரசன் அக்கடிதத்தைப் படித்தான். அதில் 'எனது பெண் இந்துமதிக்குச் சுயம்

வரம் நடக்கிறபடியால் நீங்கள் யாவரும் வரவேண்டும்' என்று எழுதி விதர்ப்பதேசத்தரசன் கையெழுத்து இடப்பட்டிருந்தது. அதை அருகில் இருந்த அஜனும் வாசித்துப் பார்த்தான். அவனுக்குச் சுயம்வரத்திற்குப் போகவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகியது. உடனே அஜன் தன் சதுரங்க சேனைகளையும் சேர்த்துக்கொண்டு விதர்ப்பநாட்டை நோக்கிப்புறப்பட்டான். அவன் போகும்வழியில் நர்மதை என்னும் ஆற்றங் கரையில் தங்கினான். அப்போது அவ்விடத்திலிருந்த காட்டானை யொன்று சேனையுள் புகுந்து வீரர்களையும், மற்று முள்ளவர்களையும் பயப்பட்டுக் கதறியோடும்படிச் செய்தது. அதைக் கண்ட அஜன் அடங்காக் கோபங்கொண்டு வில்லை வளைத்து அம்பொன்று தொடுத்து அந்த யானை மேல் எய்தான். அந்த யானை இவன் அம்பின் வேகத்தைச் சகிக்காமல் கீழே விழுந்து பிராணனை விட்டது. உடனே அது பிரியம்வதன் என்னும் கந்தருவனாக மாறி, ஆகாயத்தில் நின்று, 'அஜ குமாரனே! நான் முன்னம் மதங்க ரிஷியின் சாபத்தால் காட்டானை யாயினேன்; இப்பொழுது உன்னால் சாபம் நீங்கி என் பழைய உருவத்தை யடைந்தேன்; இந்த உன் உபகாரத்திற்காக நான் உனக்கு இந்தச் சம்மோகனம் என்னும் பாணத்தைக் கொடுக்கிறேன்; பெற்றுக் கொள்' என்று கொடுத்து, அந்தப் பாணத்துக்குரிய மந்திரத்தையும் அஜனுக்கு உபதேசித்துச் சென்றான்.

பிறகு அஜனும் மற்றதேசத்தரசகுமாரர்களும் சுயம் வர நாளை நினைத்து விதர்ப்ப நாட்டை யடைந்

தார்கள். சுயம் வர நாளன்று அரசர்களெல்லோரும் கொலுமண்டபத்தில் அழகாக அமைக்கப்பட்டிருந்த ஆசனங்களில் உட்கார்ந்திருந்தார்கள். அப்போது இந்துமதி தோழியர்கள் தன்னைச் சூழ்ந்து வர, சர்வாபரண அலங்கிருதையாய்க் கையில் மாலையுடன் கொலுமண்டபத்தில் நுழைந்தாள். அவளுடைய தோழியருள் ஒருத்தி அங்கு அமர்ந்திருந்த இராஜ குமாரர்கள் வரலாற்றை யெல்லாம் முறையே அவளுக்குச் சொல்லிக் கொண்டு வந்தாள். இந்துமதி அவர்கள் எவரையும் லக்ஷியம் செய்யவே யில்லை. அவள் அஜனிடம் சென்றபோது தோழியும் அவன் பெருமையை யெல்லாம் எடுத்துக் கூறினாள். அதைக் கேட்ட அரசகுமாரத்தி அவனது உருவத்தின் அழகையும், கம்பீரத்தையும் கண்டு சந்தோஷமடைந்து மாலையை அவன் கழுத்தில் சூட்டி மௌனமாய்த் தலைகுனிந்து நின்றாள். அங்கிருந்தவர்களெல்லாரும் அடங்காச் சந்தோஷம் அடைந்தனர்.

பின்னர், விதர்ப்பநாட்டரசன் தன்மகளை முறைப்படி அஜனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தான்; கலியாணம் முடிந்ததும் அஜன் தன் மாமனிடத்தில் விடை பெற்றுக் கொண்டு, மனைவியையும் அழைத்துக்கொண்டு தன்னாட்டை நோக்கிப் புறப்பட்டான். சுயம்வரத்துக்கு வந்திருந்த அரசர்களெல்லாரும் அஜன் மேல் பொறாமைகொண்டு அவனை வழியில் போய்த் தடுத்துச் சண்டைக்கிழுத்தனர். அதைக்கண்ட

அஜன் மிகுந்த கோபங்கொண்டு தன் வில்லை வளைத்துக் கந்தருவனால் கொடுக்கப்பட்ட சம்மோக னாஸ்திரத்தை அவர்கள் மேல் பிரயோகித்தான். அப் பாணமானது அவர்கள்மேல் பட்டவுடன், அவர்கள் அறிவிழந்து, வலியிழந்து, வழிமறந்து ஒன்றும் தெரி யாதவர்களாய்ப் பிரமித்து விழுந்துவிட்டார்கள். அஜ னும் ஆபத்திலிருந்து நீங்கி மனைவியோடு அயோத் தியை அடைந்தான். ரகு மஹாராஜன் தன் பிள்ளை யின் வெற்றியைக்கண்டு சந்தோஷித்து அவனுக் கும் பட்டங்கட்டித் தான் காடுசென்று கடவுளைக் குறித்துத் தோத்திரம் செய்து அவர் திருவடிகளை யடைந்தான்.

### அஜ மஹாராஜன் சரித்திரம்

அஜன் அரசாட்சியைப் பெற்றவுடன் நீதி முறையிலிருந்து தவறாமல் நெடுங்காலம் ஆண்டுவந் தான்; ஒரு நாள் அஜமஹாராஜன் இந்துமதி தேவி யுடன் உல்லாசமாகப் பூஞ்சோலைக்குச் சென்றான். அத்தோட்டத்தின் மத்தியில் ஓர் பெரிய குளம் இருந் தது. அதில் தாமரை மலர்கள் நிறைந்து அழகாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அம்மலர்கள் சில வற்றில் அழகிய அன்னப்பறவைகள் அமர்ந்து பூவி தழ்களைக் கோதிக்கொண்டிருந்தன. வண்டுகள் தேனையுண்டு பாடகர் சுருதி கூட்டுவதைப்போல் ரீங் காரஞ் செய்துகொண்டிருந்தன. மரக்கிளைகளில் உள்ள குயில்கள் எல்லாம் இனிமையாகச் சுருதிக் குத் தகுந்தபடி பாடிக்கொண்டிருந்தன. அப்போது குளத்தில் அலைகள் கரைகளில் மோதுவது மத்தளம்

அடிப்பதைப்போல் இருந்தது. இவைகளை யெல்லாம் கண்ட மயில்கள் தங்களுடைய கலாபங்களை விரித்து நாடகமேடையில் ஆடுவதைப் போலக் குளக்கரைகளில் ஆடிக்கொண்டிருந்தன. இப்படிப்பட்ட விநோதங்களை யெல்லாம் கண்டு இருவரும் களித்திருக்கும் சமயத்தில், ஆகாயமார்க்கமாக நாரதர் கையில் வீணையேந்திக் கடவுளைப் பாடிக்கொண்டே சென்றார். அப்போது அவர் வீணையில் அணிந்திருந்த மாலையானது நழுவிக் கீழே இருந்த இந்துமதியின் கழுத்தில் விழுந்தது. உடனே அவள் கீழே விழுந்து 'பிராணனை விட்டாள். திடீரென்று தன் மனைவி இறந்ததைக்கண்ட அஜன் மிகுந்த துக்கக்கடலில் மூழ்கி, "ஐயோ! என்ன அநியாயம் இது? இப்படியும் புஷ்பம் பிராணனை வாங்குமோ? சந்திரனைக்கண்ட தாமரையைப்போல இவள் முகம் பிரகாசமிழந்து விட்டதே; இனி இத்துக்கத்தை நான் எவ்வாறு சகிப்பேன்? நானும் இந்த மாலையை அணிந்துஎன்பிராணனையும்விட்டுவிடுகிறேன்" என்று மனைவியின் கழுத்திலிருந்த மாலையைத் தான் அணிந்துகொண்டான். ஆனால், அம்மாலை அவனைக்கொல்லவில்லை. அதைக் கண்ட அரசன், 'என்ன விந்தை இது! ஒருத்தியைக் கொன்ற மாலை என்னை ஏன் கொல்லக்கூடாது? நான் செய்த பாவமே அவள் மேல் மாலையாக விழுந்ததோ? அல்லது எமன் என்னிடத்தில் பயப்பட்டு அம்மாலை உருக்கொண்டு அவள் ஆவியைக் கொண்டு சென்றனனோ? அப்படி இருந்தால் அந்த எமனை நான் சும்மா விடுகிறதில்லை' என்று இன்ன பல கூறிக் கஷ்டப்பட்டுக் கொண்டி

ருக்கும்போது, வசிஷ்டரால் அனுப்பப்பட்ட மாண வன் ஒருவன்

"முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவன னற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி, யுந்தன்
சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு வந்து (ஆன்)"

அரசனை அணுகினன். முனிவனைக் கண்ட அர சன் தன் துயரத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, அவர் அடிகளில் விழுந்து வணங்கி உபசரித்தான். அப்போது முனிவர், 'அரச! நான் வசிஷ்ட முனி வரின் சீஷன்; உன் துக்கத்தை ஆற்றி வரும்படி அவர் என்னை உன்னிடம் அனுப்பினர்; நீ உன் துக் கத்தைப் பொறுத்துக்கொள்;

" சூழ்வினை நான்முகத் தொருவற் சூழினும்
ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ"

உன் மனைவி முற்பிறப்பில் ஒரு தெய்வப்பெண்; அவளை இந்திரன் திருணபிந்து முனிவர் தவம் செய்யு மிடத்திற்குச்சென்று, அவர் தவத்தைக்கலைக்கும்படிக் கட்டளையிட்டான்; அவள் அப்படியே சென்று தன்னு டைய ஆடலாலும் பாடலாலும் முனிவரின் தவத்தைக் கலைக்க முயன்றாள்; அந்த முனிவர் அவள்மேல் கோ பித்து அவளை மனிதஜாதியிற் சென்று பெண்ணைகப் பிறக்கும்படிச் சபித்தார். அச்சாபத்தைக்கேட்ட அவள் பயந்து, தனனை மன்னித்துச் சாபத்தைப் போக்கிவிடும்படி அவர் பாதங்களில் விழுந்து வணங்கி னள். அப்போது முனிவரும் அவள் வணக்கத்துக்கு

மனமிரங்கி 'நீ தேவலோகத்துப் புஷ்பத்தைக் கண்டவுடன், உன் மானிட ஜன்மத்தை ஒழித்துத் தெய்வ உருவடைவாய்' என்று சாபவிமோசனமும் செய்தார். அந்தப் பெண்ணே உன் மனைவியாவள்; முனிவரின் வார்த்தைப்படியே அவள் தெய்வமலரைக்கண்டவுடன் தன் பிராணனை விட்டுச் சுய உருவடைந்தாள். ஆதலால் நீ அவளைக்குறித்து வருந்தவேண்டிய நியாயமில்லை' என்று தேற்றி, அரசனைவிட்டு அகன்றார். வசிஷ்ட முனிவரின் சிக்ஷையால் அஜன் ஒருவாறு தன் துக்கத்தை மாற்றிக் கொண்டான். இருந்தும், அவன் இந்துமதியின்மேல் இருந்த ஆசையால் நாளுக்கு நாள் உடல் இளைத்துச் சிலகாலம் சென்றபின் பிராணனை விட்டான்.

## தசரத சக்கரவர்த்தியின் சரிதம்.

அஜ மஹாராஜனின் புதல்வன் தசரதன். தந்தை இறந்த பிறகு தசரதன் அரசனானன். அவன் மிகவும் நல்லவன்; பொய் சொல்லுதல், திருடுதல், கள் குடித்தல், பெரியோர்களை அவமதித்துப் பேசுதல், சூதாடுதல் ஆகிய இவைகளில் சிறிதும் செல்லாத் திடமான மனத்தையுடையவன். தருமம் செய்வதில் சிறந்தவன். ஒருகாலத்தில் தசரதன் இந்திரனுக்கும் உதவி செய்திருக்கின்றான். அவனுக்கு மூன்று மனைவியர்கள் இருந்தார்கள். அவர்களுக்குக் கௌசலை, கைகேசி, சுமித்திரை யென்று பெயர். ஆனல் அவர்களுக்குப் பிள்ளை இல்லை. அதனல் அரசன் அதிக வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஒருநாள் அவன் நாட்டிலுள்ள ஜனங்களெல்லாம் திரண்டு அரசன் அரண்மனையை அடைந்தனர். அதைக் கேள்விப் பட்ட தசரதன் பரபரப்புடன் வாயிலை அடைந்து, "குடிகாள்! உங்களுக்கு என்ன துன்பம் நேர்ந்தது? யார் என்ன செய்தார்கள்? நீங்கள் ஒன்றுகூடி வரக்காரணமென்ன? சீக்கிரம் சொல்லுங்கள்; உங்களுக்கு உண்டான துன்பத்தைப் போக்கி இன்பத்தைச் செய்கின்றேன்' என்றான். அதைக் கேட்ட குடிகளும் அவனை வணங்கி 'அரசே! நாங்கள் காட்டுமிருகங்களினால் படும் துயரம் இவ்வளவவ்வளவல்ல; தயவுசெய்து எங்கள் கஷ்டத்தைப் போக்கவேண்டும்' என்றனர். உடனே அரசனும் குடிகளுக்கு அபயம்தந்து அனுப்பிவிட்டு, வேட்டைக் கோலங்கொண்டு காட்டிற்குப் புறப்பட்டான். அவன் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருக்கும்போது, யானை தண்ணீர் குடிக்கும் சப்தத்தைப்போல் ஒரு பெரிய சப்தம் கேட்டது. அந்தச் சப்தத்தைக் கேட்ட அரசன், இது யானையின் குரல் என்று எண்ணி, அச்சப்தம் வந்த வழியே ஒரு அம்பைத் தொடுத்தான். அவ்வம்பு அருகில் இருந்த குளத்தில் நீர் மொண்டு கொண்டிருந்த ஒரு சிறுவன் மேல் பாய்ந்தது. உடனே அச்சிறுவன் ஓ வென்று அலறிக்கொண்டு கீழே விழுந்தான். அந்தப் பரிபவத்தைப் பார்த்தான் தசரதன் வேகமாக அச்சிறுவனிடம் ஓடினான். பார்த்துப் பயத்தை அடைந்தான். 'ஐயோ இப்பாதகத்தைச் செய்த பாவிக்கும் ஒரு நன்மை உண்டாகுமா என்று அலறினான். அப்போது அந்தச் சிறுவன் அரசனைப் பார்த்து, 'சக்கரவர்த்தி! நான் உன் கையால் இறக்க

நேரிட்டது எனது ஊழ்வினையே யாகும்; ஆதலால் நீர் வருந்தவேண்டாம்; தயவுசெய்து என்னை இப் போதே என்பெற்றோர்களிடம் சேர்த்துவிடும்' என்று வேண்டினான். அதன்படியே தசரதன் சிறுவனைக் கைகளில் எடுத்துக் கொண்டு, அவனது பெற்றோர் தவம் செய்யும் இடத்தில் கொண்டுவிட்டான். அவன் பெற்றோர்களோ குருடர்கள். அரசன், பிள்ளையை அவர்கள்முன்புவிட்டு 'சுவாமி! நான் உங்களதுபிள்ளை யைக் கொன்ற பாதகன்; உமது அருமைக் குழந்தை இதோ பிணமாகக் கிடக்கிறான்; இப்பழிசெய்த என்னை இப்போதே சாபமிட்டுக்கொல்லுங்கள்;உமது புதல்வனோடு நானும் செல்கின்றேன்' என்று கூறிக் கலங்கினான். மன்னவன் பேசியதைக் கேட்ட அவர் கள் "தசரதா! நீ இக்காரியத்தை வேண்டுமென்று செய்ததாகத் தெரியவில்லை; ஆகையால் நாங்கள் உனக்குப் பெரிய சாபமிடக்கூடாது; ஆனாலும், நாங் கள் எப்படிப் பிள்ளை சோகத்தால் பரிதவிக்கின் றோமோ, அதைப்போலவே நீயும் புத்திர சோகத் தால் இறப்பாய்; இப்போது எங்களையும் எங்கள் செல்வனோடு கொளுத்திவிடு' என்று கூறித் தவத்தின் மகிமையால் பிராணனை விட்டனர். தசரதன் அவர் கள் கூறியபடியே செய்து விட்டுச் சாபத்தைப் பெற் றுக்கொண்டு அரண்மனையை யடைந்தான்.

இங்கு இது இவ்வாறிருக்க, தேவலோகத்தில் தேவதைகள் எல்லோரும் இராவணன் என்னும் ராக்ஷஸனால் மிகுந்த துயரத்தை யடைந்து, ஒருநாள் திருப்பாற்கடலை யடைந்தனர். அங்கு ஆயிரவாய்ப்

பாம்பின்மேல் யோக நித்திரை செய்து கொண்டிருக்கும் திருமாலைக் கண்டு வணங்கி, "தேவாதி தேவ! செந்தாமரைக்கண்ணா! லக்ஷ்மி சமேதா! ஆதிசேஷ சயனா! ஓ மாதவா! நாங்கள் இராவணனால் படும் துன்பம் இவ்வள வவ்வளவல்ல; நீர் இப்போது எங்களைக் காப்பாற்றா விட்டால், எங்களுக்கு வேறு கதியில்லை' என்று முறையிட்டனர். அதைக் கேட்ட திருமால் 'நாம் தசரத சக்கரவர்த்தியின் திருக்குமாரனாய் அயோத்தியில் பிறந்து அந்தப் பாபி இராவணனைத் தொலைத்து உங்கள் துன்பத்தைப் போக்குகிறோம்; நீங்கள் யாவரும் உங்களிடத்திற்குச் செல்லுங்கள்' என்று கூறினார்.

பிறகு சில நாட்கள் செல்லத் தசரத மஹாராஜன் கலைக்கோட்டு முனிவரின் உதவியால் புத்திரகாமேஷ்டியாகம் செய்து நான்கு புத்திரர்களைப் பெற்றான். அவர்களுக்கு ராமர், பரதர், லக்ஷ்மணர், சத்ருக்னர் என்று பெயரிட்டனர். குழந்தைகள் யாவரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, ஆசிரியனிடத்தில் சகல கலைகளையும், வில் வித்தைகளையும் கற்றுச் சிறந்து விளங்கினர். ஒரு நாள் விசுவாமித்திர முனிவர் தசரதன் சபைக்கு வந்து, ராமபிரானைக் காட்டிற்கு அனுப்பும்படிக் கேட்டார். அதைக்கேட்ட அரசன் ஒருவாறு மனத்துயரமடையவும் அருகிலிருந்த வசிஷ்டர் அரசனை நோக்கி 'அரச! நின் மகற்கு அளவில்லாத செல்வங்கள் தானாகவே எய்துங் காலம் வரப்போவதினால், நீ அதை மறுக்காதே என்று கூறிய தேறுதலினால், முனிவ

ரோடு ராமபிரானையும் லக்ஷ்மணனையும் அனுப்பினன். காட்டில் ராஜகுமாரர்கள் இருவரும் ராக்ஷதர்களைக் கொன்று விசுவாமித்திரர் செய்த யாகத்தைக் காப்பாற்றினர்கள். பிறகு அரச குமாரர்களை அழைத்துக்கொண்டு விசுவாமித்திரர் மிதிலையை அடைந்தார். அங்கு ராமர் சிவபிரானுடைய வில்லை ஒடித்துச் சீதையைக் கலியாணம் செய்துகொண்டார். பிறகு இலக்குமணர் ஊர்மிளையையும், பரதர் மாண்டவியையும், சத்ருக்னர் சுருதகீர்த்தியையும் மணந்து கொண்டனர். பின்னர், எல்லோரும் அயோத்தியை அடைந்தார்கள். வழியில் இராமபிரான் பரசுராமரைப் பங்கம் செய்தார்.

பிள்ளைகளின் கலியாணத்தைக் கண்டுகளித்த தசரதன், இராமபிரானுக்குப் பட்டங்கட்ட எண்ணினன். அவ்வெண்ணம் கைகேசியால் தடுக்கப்பட்டுப் பரதன் ராஜ்யத்தை யாளவும், ராமன் காட்டிற்குச் செல்லவும் முடிந்தது. இச்சங்கதியைத் தெரிந்து கொண்ட இராமபிரான் மனைவியோடும் தம்பியோடும் எல்லோரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு காட்டிற்குச் சென்றான். தன் அருமைக் குழந்தை காட்டிற்குச் சென்றதைக் கேள்விப்பட்ட தசரதன் தன் சாபத்தை நினைத்தும், புத்திரன் மேல் இருந்த ஆசையாலும் உயிரை நீத்தான்.

## ஸ்ரீராமபிரான் சரிதம்.

இராமபிரான் காடடைந்ததைக் கேள்விப்பட்ட பரதன், மிகவும் வருத்தம் அடைந்தான். எல்லோ

ரையும் அழைத்துக்கொண்டு ராமன்சென்ற திசையை நோக்கிப் புறப்பட்டான். ராமபிரானை அடைந்து, ‘அண்ணு! நீர் இல்லாமல் இராஜ்யம் அழகு அழிந்து விட்டதே! உடனே நாட்டிற்கு வந்து செங்கோலைக் கையிலேந்தி ஆட்சிபுரியும்’ என்று அவர் பாதங்களில் விழுந்து வணங்கினுன். அதைக்கேட்ட தாசரதி, ‘தம்பி! நாட்டில் தந்தையார் சௌக்கியமா? மற்று முள்ளவர்களும் எப்படி இருக்கின்றூர்கள்?’’ என்று விசாரித்தான். அப்போது பரதன், தசரதன் இறந்த சங்கதிகளைக் கூற, அவ்வார்த்தைகளால் மிகுந்த துக்கத்தை யடைந்த ராமபிரான் அவ்விடத் திலேயே தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன் களைச் செய்து முடித்தான். பிறகு இராமன் பரதன் வேண்டுகோளை மறுத்து, தனது பாதுகையை அவ னிடம் கொடுத்து, அதற்குப் பட்டங்கட்டி ராஜ்யத்தை ஆளும்படி நியமித்து, அவ்விடத்தை விட்டுப் பஞ்ச வடி தீரத்தை யடைந்து வசிக்கலாயினன். பரதனும் பாதுகைகளைப்பெற்று, அயோத்திக்குச் செல்லாமல், நந்திக் கிராமத்திலிருந்து ஆட்சிபுரிந்து வந்தான்.

இராமபிரான் பஞ்சவடியை அடைந்து சிலநாள் கள் ஆனபின், அவ்விடத்திற்குச் சில இராக்கதர் கள் வந்து தொந்தரவு செய்ய ஆரம்பித்தார்கள். அவர்களை யெல்லாம் இராமபிரான் கொன்றுன், ஒரு நாள் இராமனும் இலக்குமணனும் ஒரு மானைத் துரத்திக்கொண்டு வெளியே சென்றிருந்தபோது, இலங்கைக்கரசனுகிய இராவணன் சந்நியாசி வேடத் தோடு வந்து, சீதையைத் தூக்கிச்சென்று இலங்கை

யில் சிறைவைத்தான். திரும்பிவந்த இராமலக்ஷ்மணர்கள் சீதையைக் காணமல் கலங்கிக் காடெல்லாம் தேடிக்கொண்டு போனார்கள். அப்போது வழியில் சடாயுவைக்கண்டு, சீதையின் சமாசாரம் தெரிந்து, அவரை வைகுந்தத்துக்கு அனுப்பி, குறுக்கிட்ட கபந்தனைக் கொன்று, அவன் சாபத்தைத் தீர்த்து, ரிஷியமுக பர்வதத்தை யடைந்தார்கள். அங்கு அனுமாரால் ராமபிரான் சுக்கிரீவனைச் சிநேகம் செய்து கொண்டு, வாலியைக் கொன்று, சுக்கிரீவனுக்குக் கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டி வைத்தான். பிறகு சுக்ரீவன் ஏற்பாட்டின்படிச் சீதையைத்தேட வானர வீரர்கள் நாலாபக்கங்களிலும் புறப்பட்டனர். அவர்களுள் அநுமாரிடத்தில் ராமன் தன் கை மோதிரத்தைக் கொடுத்து, 'அப்பா அனுமானே! சீதை லங்கையில் இருப்பதாகத் தெரிகிறது; நீ அவ்விடத்தில் சென்று என் மோதிரத்தைச் சீதையிடம் கொடுத்து, அவள் சமாசாரத்தை அறிந்து ஜாக்கிரதையாகச் சீக்கிரம் வந்து சேருவாய்' என்று கூறினன். ஆஞ்சநேயரும் அப்படியே இலங்கையை அடைந்தார். அசோகவனத்தில் சீதையைக் கண்டார். புலிக்கூட்டத்தின் மத்தியில் அகப்பட்ட மானைப்போலவும், பிராட்டியார் காட்டுத் தீயில் அகப்பட்ட இளந்தளிர் போலவும், அழகு குறைந்திருப்பதைப் பார்த்துப் பிரமித்தார்; ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டே ஒருவரும்அருகிலில்லாச் சமயம்பார்த்துக் கீழே இறங்கி வந்து, சீதாதேவியினிடத்தில் கணையாழியைக் கொடுத்து, அவளைத்தேற்றி, அவளால் கொடுக்கப்பட்ட அடையாளத்தைப் பெற்றுக்

கொண்டு, இலங்கையைக் கொளுத்தி இராமபிரானி டஞ் சேர்ந்து நடந்தவற்றைத் தெரிவித்தார்.

உடனே சுக்ரீவன் வானர சேனைகளை ஆயத் தஞ் செய்தான். பிறகு இராமன், இலக்குமணன், அநுமார், சுக்ரீவன் முதலியவர்கள் தெற்குச் சமுத் திரக் கரையை அடைந்தார்கள். அங்கு இராம பிரான் கடலுக்கு அணைகட்டினன். அப்போது ராவணன் தம்பியும், விபீஷணன் என்னும் பெயரை யுடையவனுமான அசுரச்சிரேட்டன் ராமனைவணங்கி அபயம் வேண்டினன். ராமபிரான் அவருக்கு அபய மளித்து, அவனேடும் வானரர்களோடும் அணையின் மூலமாக இலங்கையை யடைந்தான். இலங்கையில் ஏழு நாள்கள் இராவணனுக்கும் இராமருக்கும் பெரிய சண்டை நடந்தது. அந்தச் சண்டையில் இராம பிரான் பிரம்மாஸ்திரத்தால் இராவணனைக் கொன்று, விபீஷணனுக்கு இலங்கையைப் பட்டாபி ஷேகஞ் செய்வித்தான்.

பிறகு இராமபிரான் சீதையை அக்கினிப் பிர வேசம் செய்வித்துத் தன்னேடு அழைத்துக்கொண்டு, சேனைகளோடும் அயோத்தியை யடைந்தான். தமை யன் காட்டைவிட்டு நாட்டை அடைந்ததைக் கண்டு பரதன் அடங்காச் சந்தோஷங் கொண்டு அவரிடம் ராஜ்யத்தை ஒப்புவித்தான். பின்னர் நல்லதோர் நாளில் ஸ்ரீராம பிரானுக்கு பட்டாபிஷேகம் நடந் தது. ராமனும் ராஜ்யத்தை வெகு நன்ருய் ஆட்சி புரிந்து வந்தான் இப்படிச் சில நாள்கள் செல்ல, இரா

மன், வேறு ஒருவன் நாட்டில் ஒரு வருஷம் இருந்த சீதையை, ராமன் அழைத்துக்கொண்டு வந்து விட்டான் என்று குடிகள் குறை கூறுவதாகக் கேள்விப் பட்டான். அதனால் அவன் சீதையை இலக்குமண னோடு கூட்டிக் காட்டிற்கு அனுப்பிவிட்டான். இலக்கு மணனும் சீதையைக் காட்டில் விட்டுத் திரும்பிநகரை யடைந்தான். சீதை காட்டுக்குச் செல்லும்போது கருப் பவதியா யிருந்தாள்.

இலக்குமணன் பிரிந்த உடன், சீதை தனிமை யாக அழுது கொண்டிருந்தாள். அவள் அழுகைக் குரலைக்கேட்ட வால்மீகி அவளிடம் வந்து அவளைத் தேற்றித் தன் ஆச்சிரமத்திற்கு அழைத்துச் சென்று, அங்கேயே வசிக்கும்படிச் செய்தார். அவ்விடத்தில் சீதை வசித்துக்கொண்டு வரும் போது ஒருநாள் இரண்டு ஆண்குழந்தைகளைப் பெற்றாள். அக்குழந் தைகளுக்கு வால்மீகர் குசன் லவன் என்று பெயரிட் டார். குழந்தைகள் தகுந்தவயது அடைந்த வுடன் ரிஷிச்சிரேஷ்டர் அவர்களுக்கு நான்குவேதம், ஆறு சாஸ்திரம் முதலிய கல்விகளை யெல்லாம் கசடறக்கற் பித்தார். குசன் லவன் இருவரும் எல்லாவித்தைகளி லும் சிறந்து விளங்கினார்கள். இதோடு, வால்மீகி தான் செய்திருந்த ராமாயண காவியத்தையும் அவர் களுக்கு முறைதவறாமல் கற்றுக்கொடுத்திருந்தார். ஒரு நாள் இரண்டு சிறுவர்களும் ஸ்ரீராமபிரான் சபா மண்டபத்தை யடைந்து தாளவகைகளோடு ராமா யணச் சுலோகங்களைப் பாடினர். அதைக் கேட்ட ராமபிரான் மிகுந்த சந்தோஷமடைந்து, ‘குழந்தை

காள்! நீங்கள் யார்? உங்கள் பெற்றோர்கள் யார்? யாரிடத்தில் கல்வி கற்றீர்கள்" என்று கேட்டார். பிள்ளைகளும் தங்கள் குலம் முதலியவைகளையும் ஆசாரியனையும் சொல்லி, விடை பெற்றுக் கொண்டு ரிஷி ஆச்சிரமத்தை அடைந்தார்கள். பிறகு ராமபிரான் வேண்டுகோளின்படி வால்மீகர் சீதையையும் சிறுவர்களையும் அரசன் சபைக்கு ஒருநாள் அழைத்து வந்தார். சீதையைக் கண்ட நாட்டுச்சனங்கள் யாவரும் அவளை வணங்கினார்கள். அப்போது வால்மீகர் சீதையைப் பார்த்து 'அம்ம! நீ உன் கற்பின் பெருமையை விளக்கிக் காட்டு' என்று கூறினர். உடனே சீதாதேவி பூமி தேவியை நோக்கி 'ஹே பூமிதேவி! நான் என் கணவனைத் தவிரக் கனவிலும் வேறு ஒருவரையும் நினையாதவள் என்பது உண்மையானால், உடனே நீ என்னை உன்னிடம் அழைத்துக்கொள்' என்று தலைமேல் குவித்த கைகளோடு கூறினள். அப்போது பூமி படீரென்று வெடித்துச் சீதைக்கு இடம் கொடுத்தது. பூமிதேவியால் கொடுக்கப்பட்ட சீதை மறுபடியும் பூமியிலேயே புகுந்து விட்டாள். அதைக்கண்ட யாவரும் ஆச்சரியமடைந்து, சீதையைக் கொண்டாடினார்கள். ராமபிரானும் சில நாள் கழித்துக் குசலவர்களிடத்தில் ராஜ்யத்தைக் கொடுத்து விட்டுத்தன் தம்பியர்களுடன் திவ்ய சரீரத்தோடு ஸ்ரீ வைகுண்டத்துக்குச் சென்றனர். வானரர்களாக வந்திருந்த தேவதைகளும் தங்கள் தங்கள் உலகத்தை யடைந்தனர்.

6

## குசச் சக்ரவர்த்தி சரிதம்

ராமபிரானல் குசனுக்குக் கொடுக்கப்பட்ட ராஜ்யம் குசாவதி என்பது. லவனுக்குக் கொடுக்கப்பட்டது லவபுரம் என்பது. குசன் தன்நாட்டை வெகு நன்ருக ஆண்டுவந்தான். ஒருநாள் இரவில் அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போது, ஓர் அழகிய பெண் அவனிடத்தில் வந்தாள்; அவன் அவளை நோக்கி, 'பெண்ணே ! நீ யார் ? இங்குவந்த காரண மென்ன' என்று கேட்டான். அப்போது அந்தப்பெண் 'அரச! நான் அயோத்தி மாநகரின் தேவதை; இராமபிரான் தன்னுட்டுக் குடிகளோடு மோக்ஷ உலகத்திற்குச் சென்றது முதல் அந்த நகரம் பாழடைந்து விட்டது. பெண்கள் இருந்து ஆடிய இடங்களில் எல்லாம் பேய்கள் இருந்து ஆடுகின்றன. பட்டாடைகள் இருந்த இடத்தில் பாம்புத் தோல்கள் இருக்கின்றன. சூராதி சூரர் வீற்றிருந்த இடங்களில் கோட்டான்கள் இருந்து கூவி யழுகின்றன ; ஆகையால் நீ தயவுசெய்து அயோத்திக்குச் சென்று அரசனுக வேண்டும்' என்று பிரார்த்தித்தாள். அதைக்கேட்ட குசனும், தான் இருந்த குசாவதி என்னும் நகரை ஒருவனுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டு, அயோத்தியை அடைந்து அரசுபுரிந்து வந்தான். அது முதல் பாழடைந்திருந்த அயோத்தியும் பிரகாசமாய் விளங்கிற்று.

ஒருநாள் குசன் தன் மனைவிகளுடன் சரயூ நதிக்கு நீராடச் சென்ருன். அப்போது அவனுக்கு அவன் தந்தையால் கொடுக்கப்பட்ட ஜைத்ரம் என்

னும் ஆபரணமானது தண்ணீரில் நழுவி விழுந்து விட்டது. குசன் அதை வெகு நேரம் தேடினன். ஆனல் அது கிடைக்கவில்லை. உடனே அவன் அவ்வாபரணத்தை யாரோ நாகலோகத்திலிருக்கிறவர்கள் எடுத்துக்கொண்டு போயிருக்க வேண்டுமென்று எண்ணினன்; தன் வில்லையெடுத்து வளைத்து அம்பை அதில் பூட்டினன். அப்போது குமுதன் என்னும் நாகராஜன் ஓடி வந்து 'ஐயா! இந்த ஆபரணம் என் தங்கையின் கையில் கிடைத்தது. அவள் அதை உம்முடையதென்று தெரிந்து கொள்ளாமல், எடுத்துக் கொண்டு வந்து விட்டாள்; தயவு செய்து அவ்வாபரணத்தைப் பெற்றுக்கொண்டு, என் தங்கையையும் கலியாணம் செய்து கொள்ளவேண்டும்' என்ருன். குசச் சக்கரவர்த்தியும் சந்தோஷமடைந்து அவளை மணம் செய்து கொண்டான். அவள் பெயர் குமுதவதி என்பது.

சில வருஷங்கள் சென்றபின் குமுதவதிக்கு அதிதி என்று ஒரு குமாரன் பிறந்தான். ஒரு நாள் குசன் துர்ச்சயன் என்னும் அசுரனேடு சண்டைசெய்து, அவனைக் கொன்று, தானும் இறந்தான். அதை அறிந்த குமுதவதியும் தன் கணவனேடு நெருப்பில் விழுந்து பிராணனை விட்டாள். பின்பு இருவரும் சுவர்க்கம் அடைந்தனர்.

## அதிதி மகாராஜன் ஆட்சி

குசன் சுவர்க்கத்தை யடைந்தவுடன் அதிதி அரசனைன். அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்யுங்

காலத்தில் சிறைப்பட்ட பகை யரசர்களும் மற்று முள்ளவர்களும் வெளியில் விடப்பட்டனர். அவன் ஆளும்போது குடிகள் வெகு சௌக்கியமாக வாழ்ந்து வந்தார்கள். அவன் ஆறில் ஒரு பங்கு வரி வாங்கி வந்தான். அவன் தான் நீதிதவறாமல் ஆட்சி செய்வ தோடு தன் கீழ் உள்ளவர்களையும் நீதிநெறி தவறாமல் இருக்கும்படிச் செய்து வந்தான். இப்படிப் பல காலம் ஆண்டபின் அதிதி கடவுளின் பாதகமலங்களை அடைந்தான். அவனுக்குப் பிறகு அநேக அரசர்கள் அயோத்தியை நீதி தவறாமல் ஆண்டு பரமபத மடைந்தனர்.

ரகுவம்சம் முற்றும்.

---

## *மேக சந்தேசம்.

எல்லா வளங்களும் நிறைந்து தெய்வத்தன்மையுடன் விளங்கிய அளகாபுரி யென்னும் நகரத்தை அறநெறி வழுவாது அரனடியனாய் அனைத்துலகுங் கொண்டாட வரசு புரிந்து வந்தான் குபேரன் என்னும் இயக்கர் தலைவன். அம்மன்னன் தன் குடிகளுடைய இன்ப துன்பங்களைத் தன்னுடையனவாகக் கொண்ட அருட் பெருந்தகை.

எவ்வகையிலும் நாட்டிற்கு நன்மையே புரியும் நற்குணம் வாய்ந்த அவன், ஒரு நாள் காலப் போக்

---

* மேகசந்தேசம்—மேகவிடு தூது; இது தமிழ் நூல்களிற் பல விடத்துங் காண்க.

கின் நிமித்தம் தன் உய்யான வனத்தை அடையப் புறப்பட்டான். அப்போது அவனுடைய அமைச்சர் முதலாயினோரும் உடன் போயினர். அம்மன்னன் அங்கே சென்று தன் மனமகிழ உலாவிய பின்பு ஓர் அழகிய மேடையில் அமர்ந்திருந்தான்.

அக்காலத்தே, ஒரு கடமை தவறிய இயக்கன் அங்கு வரக்கண்டான். அவன் ஒழுக்கந் தவறியதை முன்னமே அறிந்த குபேரன் சீற்றத்துடன் அவனை நோக்கி, அடா! குலத்தைக் கெடுக்கத் தோன்றிய கோடரிக்காம்பே! நீ செய்து வருங் காரியங்கள் நம் மரபினர் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று; ஆகை யால், நீ ஒரு கணமேனும் எனதரசாட்சியில் இருக்க வேண்டாம்; இந்நாட்டை விட்டு அகன்று உயிர் தப் பிப் பிழைப்பாய் என்றனன். அதுகாறும் அச்ச மென்பதை அணுவளவு மறியாத அவ்வியக்கன்,மன் னன் கூறிய வார்த்தையைக் கேட்டு, மன்னர் மன்ன செல்வத்திற் சிறந்த நுமக்கு என்னுடன் பகைமை செய்வது பொருந்துமோ? எதிர்த்தோரை வாட்டுதலே இறைவர் கடமை. தாம் பிறர் வேணுமென்று கூறிய பழிமொழியைச் செவி கொள்ளற்க, நானோ பரம ஏழை, எனக்கு இவ்வண்ணம் கட்டளையிடுவது தகாது. அடைந்தோரை அகற்றல் சிறிதும் அடாது. நீர் இத் தருமமார்க்கத்தைத் தப்பி, என்னை அகலும்படிக் கட்டளையை வற்புறுத்துவீரேல், நம்பினோரை நாசஞ் செய்த பாவம் நும்மைச் சேரும்' என்று கண்ணீர் பெருக்கி நின்றான்.

அவ்வியக்கன் இரக்க மொழிகளைக் கேட்ட குபே ரன், அவனை உற்றுநோக்கிப் பரிந்து பகர்வான்,

"நன்மை குறைந்த வியக்கனே! யான் நின்னை அப்பாற் போகும்படித் தெரிவித்தது நின் ஒழுக்கத்தைச் சரியாக்குவதற்கே யன்றி, நின்னைத் துன்பத்துள் துடிக்கும்படியாக விடுவதற்கன்று. நீ மனம் வருந்தாதே. ஆயினும் ஒருவருடம் எங்காயினுஞ் சென்று வசித்து வருவதே தகுதி; இல்லையேல் இப்பொழுதே நகர்நீங்கி உரிய இடஞ்சென்று, இன்புற்று வாழ்வாயாக" என்று அவனை அப்புறம் போகச் சொல்லினன். போகும்படிச் சொல்லிய வியக்கன், வணங்கி நின்று, 'கருணைவள்ளால்! என் வருத்தத்தைக் கண்டும் இங்ஙனம் என்னைக் கலங்கும்படியாக விடலாமோ! இது அரசர்களுக்குத் தருமமோ' வென்று மறுபடியும் கதறினன்.

அவற்றைக்கேட்ட குபேரன், 'நீ ஒழுக்கத்தின் சிறப்பினை அறியாய் போலும்; அது உயிரினும் மேம்பட்டதன்றோ; அதனை இழந்தவர்களுக்கும் உண்மையுலகிடமுண்டோ? நினக்கு வனப்பிருந்தும் என்ன பயனைச் செய்யும்? அதற்கேற்ற குணமும் ஒழுக்கமும் இல்லாவிடில் என்ன பயன்? நீ நல்லவர்களின் சேர்க்கையை யடைந்தாலன்றோ நின் பிறப்புப் பயன்படும். இன்றேல் நீ பெற்ற வனப்பு, மதியில்லாவானம் போலும், கண்ணில்லா முகம்போலும், தாமரையில்லாத் தடாகம் போலும் பொலிவழியும். ஆதலால் விரைவில் இந்நகரம் விட்டுச் செல்ல வேண்டுவதே நினக்கேற்ற தண்டனை என்றான். அதன் பின்பு அவ்வியக்கன் தலைகுனிந்து, விடைபெற்றுச் சென்று தன் மனைவியை யணுகி, நடந்தவற்றை யெல்லாம் நவின்றான்

இஃது இவ்வாறாக, தன் கணவன் உரைத்த கொடிய வார்த்தையை உன்னி உன்னி வாட்டமுற்ற அவனது மனைவி இல்லத்தினுள் சென்று கவலையுற்று ஒரு புறத்தே வாளாவிருந்தனள். அப்போது, யக்ஷன் தன் மக்களையும் மனைவியையும் நோக்கி, தான் எண்ணுறுதிழைத்த தீங்கை உன்னி உன்னிக் கண்ணீர் விடுவானாயினன். அவனுடைய மனைவி தன் கணவன் மனவாட்டத்தைக் கண்டு, "என் ஆருயிர்த் தலைவ! மனம் வாடல் எதற்கு? விதி வலிது; வருவது வந்தே தீரும்; அதற்காக வருந்துவது அழகன்று" என்று பற்பல கூறித் தேற்றினள்.

பின்னர், யக்ஷன் தன் மனைவியை நோக்கி, 'அன்னம் போலும் மென்னடைப் பாவாய்! இன்னும் நீ என்னுடன் வருதல் கூடாது; கல்லும் முள்ளும் காலில் உறுத்தும்; ஆதலால், நீ நம்மக்களை நன்றாய்ப் பாதுகாத்துக் கொண்டிரு; நான் ஒரு வருடத்தை யொரு பகலாகக் கழித்து வந்து விடுகிறேன். யான் சொல்லிய வண்ணம் நீ செய்ய வேண்டுவது முறையன்றோ' என்று கூறினன்.

அந்த வார்த்தைகளைக்கேட்ட யக்ஷி முகம் புலர்ந்து, திகைத்து நின்று, "என்னே! தேவரீர் காடு சென்றால் அடியேன் மாத்திரம் வீட்டிலிருக்க வேண்டுமோ? வாழ்வும் தாழ்வும் இருவருக்கும் ஒன்றன்றோ? பிரிவு என்பது நம்மில் எவ்வாறு ஏற்படும்? மலரினின்றும் மணம் வேறுபடுமோ? தண்ணீரிலிருந்து தண்மை வேறுபடுமோ? தீயினின்றும் வெம்மை வேறுபடுமோ? இவை தனித்தனியே பிரிதலுண்டானால் அடியேனும்

தேவரீரை விட்டுப் பிரிதல் கூடும்; உயிர் பிரியின் உடல் எங்ஙனம் இயங்கும்? இது தேவரீர் அறியாத விடய மன்றே" என்றனள்.

இவ்வுறுதி மொழிகளைச் செவியிலேற்ற யக்ஷன், சிறிதுநேரம் பேசாமலிருந்து பின்பு, "பெண்மணீ, நீ யுரைப்பன யாவும் உண்மையே. ஆயினும், வனவாசம் என்பதை நீ அறியவில்லை. உலகில் மானிடர்கள் சிறிது துன்பம் நேர்ந்தாலும், 'இதென்ன! வனவாசமாக இருக்கின்றதே' என்பதை நீ கேட்டில்லையோ? நீ என்னோடு காட்டில் நடக்க எவ்வாறு இயலும் என்பதனையே பெரிதும் ஆலோசிக்கின்றேன். அந்த உண்டியின்றி, காய் கனி முதலியவற்றை யுண்டு வருந்தல் வேண்டுமே! மற்றும் வனவிலங்குகளின் பேரொலிகளுக்கு அஞ்சும்படியாக நேரிடுமே! ஆகையால், நீ இல்லிலிருப்பதே நலமென்றான்"

அம்மொழி, புண்ணிற் கோலிட்டதுபோல யக்ஷ மகளின் செவியில் நுழைதலும், வேடர் வலையிற்பட்ட மானென உளந்துடித்து, " என் இன்னுயிர்த் தலைவ! நாயகரைப் பிரிந்து அரிவையர் தனித்திருத்தல் அற நெறியாகுமோ? பெண்டிர்கள் இளமையைத் தன் பெற்றோரிடத்தும், கடிமணத்தின் பின்னர் கணவரிடத்தும், அதன் பின்னர் உயிர்வாழ்ந்திருந்தால் மைந்தரிடத்தும் தங்கி யிருத்தல் வேண்டுமென்றல்லவோ மனுநெறி முறையிடுகின்றது. அதையும் மறந்தீர் போலு" மென்றாள்.

அதன் பின்னர், மனைவியின் இரக்க மொழிகளைக் கேட்ட யக்ஷன் மன முளைந்து, 'பெண்ணரண

ங்கே! நின்னைப் பரிவப்படுத்தவேண்டு மென்னும் எண்ணத்தை யுடையேனல்லேன். ஆயினும், நின் துயர் கண்டு வியந்தேன். இதுவே இல்லறத்தின் உண்மை என்று தெரிந்தேன். இனி, என்னைக்கோபியாதே? நம் மக்களை அனுதரவு செய்வது நன்றன்று. அவைகளை ரக்ஷிப்பதே நமது கடமை. பறவைகளும் தன்னியற் கையாகப் பறக்கும் வன்மையுண்டாகும் வரையில், தன் குஞ்சுகளுக்கு வேண்டுவன கொண்டுகொடுத்துக் காப்பாற்றவில்லையோ ? நீயும் என்னுடன் வந்தால் அவைகளைப் பாதுகாப்பவர் எவர்? இவ்வொருவருடம் ஒரு பகலே யாகுமென்று தேறுதல் சொல்லினன்.'

பின்னர், யக்ஷன் காட்டிற் புகுந்தான். அங்கே, ஒரு ரமணீயமான ராமகிரி ஆச்சிரமம் அவனுக்குத் தோன்றியது; அதைச் சுற்றிலும் கதிரவன் கிரணமும் உள்ளே புகாமல் தழைத்துயர்ந்த சோலைகள் பல விருந்தன. அவைகளின் கீழே சென்று தங்கினல் தன் மனவாட்டம் ஒருவாறு நீங்குமென்று அவன் உன்னினன். ஆயினும், அவன் தேகம் மிகவும் வாட்டத்தை யடைந்தது; அவன் அணிந்திருந்த கையாழியுந் தானே விலகியோடியது. இயக்கன் படும் இன்னலைக் காணப் பெருதவன் போல், இரவியும் மேலைக்கடலிலாழ்ந் தான். அக்காலத்து அந்திவேளையும் சந்தடியில்லாமல் வந்து, பேரிருள் சூழ்ந்து கொண்டது. அப்போது யக்ஷன், "என்னே ! நம் விதியிருந்தவாறு! இதற்கு யாம் என் செய்வோம்." என்று எண்ணி வாளா இருந்தனன். அதற்குள் மதிய மெழுந்தது; மாநிலம் வெளுத்தது. உடுக்குலங்கள் மின்மினிபோல ஒளிவிட்

டன; எங்குஞ் சில்லென்ற காற்றுப்பைய வீசத் தொடங்கியது. சித்தர்களுஞ் சித்தங் குலேந்து, இங் ஙனங் குளிர்ந்த காற்று வீசுவதன் காரணமென்ன வென்று சிந்திக்கலாயினர். ஆகாயம் நிர்மலமாக விருந்தாலும் கார்கால மாகையால், ஆடித்திங்களில் ஓடித்திரிந்து மலேயில் தங்கி, கரையைத் தந்தத்தால் தகர்த்து விளேயாடலேச் செய்து விந்தையுடனிருக்கும் மதம் பொருந்திய யானேயைப்.போல, கறுத்துப் பருத் துக் கனேத்து வரும் ஒரு மேகத்தைக் கண்களாற் கண் டான். அதன் பெருந்தகைமையை நோக்கினன்; அதன் குளிர்ச்சி கண்டு கண்களில் தண்ணீரைத் தேக்கினன். தெய்வத்திருவருள் இதுவாயின், யான் என் செய்வேன் என்று தனக்குத் தானே சமா தானஞ் செய்து கொண்டான். இனி இம்மேகத் தின் கொடுமையால் நம்கதி என்னவாகுமோவென்று கலங்கினன். ஏழடுக்கு மாளிகையினுள்ளிருக்கும் மாந் தர்களே மேகத்தின் கோஷத்திற்கஞ்சுவார்களே என்றல்,என்போலுந் தனிமையானவர்கள் எவ்வாறு பயமடையா திருக்க முடியும்? ஆயினும், இம்மேகத் தைப் பெரியோர் வள்ளன்மைக் குணமுடைய தென்று வகுத்துக் கூறியுள்ளார்களே. இப்போது என்னிலேமையோ பரிதாபகரமாக விருக்கின்றது. எனது மனத்துயரை யாருடன் சொல்லி ஆற்றிக் கொள்ளுவேன்; ஆனல், ஒன்றுண்டு; நமது முன்னே ரில் பலர் காரைத் தூது விட்டுத் தன்மனக்கஷ்டத் தை நீக்கிக் கொண்டிருக்கின்றனர்; அதுபோல நாமேன் ஆற்றிக் கொள்ளக் கூடாதென்று எண் ணித் திகைத்தான், மறுபடியும், இதென்ன மூடர்

களின் செய்கை என மனம் மாறுபட்டான்; அப்பால், பித்தர்களின் மனம்போல் எண்ணுது மெண்ணி ஏங்கினன். ஒரு பொருளின் மீது பேராசை வைத்தவர்களின் புத்தியானது, அதைப் பெறும் வரையில் இது செயின் முடியும் முடியாவென் றெண்ணுமல் பகுத்தறிவும் பறந்து போய் விடுவது போல, இவனும் அறத்தைக் கைவிட்டு அன்பு மாத்திரம் வைத்து இல்லற வாழ்க்கையில் இருந்தவனுகையால், தன்னில்லக் கிழத்தியின் குசலத்தை அறிந்துகொள்ள விருப்பமுடையவனய், ஆகாயத்திற் செல்லும் மேகத்தை நோக்கி, 'கொண்டலே! உன்னைத் தொழுகின்றேன். உனது நிறத்தைக்கண்டு மகிழாதாரில்லை; உனது நிறத்தின் பெருமையைக் கண்டல்லவா உலகமளந்த திருமாலும் நின்னைப் போலாயினன்: நீயோ குலத்தாற் சிறப்புடையை. குணத்தால் யாவரையுங் குளிரச் செய்யுந் தன்மையுடையை. தேவர்கோனுக்குப் பணியாளாகியவன், உனது கொடைக் குணத்தைக் கண்டல்லவா குவலயத்திற் கற்ருர்க ளுன்னைக் கொடையாளிகளுக்குப் பல விடங்களி லுவமையாகக் கூறினர். அன்றியும், உனது பெருமையைப் பிறரும்,

> "பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
> பிறர்க்குதவி யாக்குமவர் பேறும்—பிறர்க்குதவி
> செய்யாக் கருங்கடல் நீர் சென்று புயல் முகந்து
> பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு"

என்று புகழ்ந்தனர். இப்படிப்பட்ட பேருபகாரத்தைக் கைம்மாறு கருதாமற் செய்யும் மேகமே! நானே நாடிழந்து நாயகி யிழந்து நலங்குலைந்து கானகவாசி

யாக விருக்கிறேன். யாசக மென்னும் வார்த்தை யே செவிப்படாத வள்ளன்மை நிறைந்த பட்டணத் திற் குடியாக விருந்தும், எனது மதியீன மாகிய வொழுக்கக் குறைவால் பிறரை யாசிக்கும்படியான நிலைமையி லிருக்கிறேன்; ஆகையால், நான் நின்னி டம் ஒரு பெருங்கொடை விரும்புகின்றேன்.

இழிந்தோர்க ளிடத்துச் சென்று வேண்டுகோ ளால் பயனைப் பெற்றாலும் பெருமையுடையதல்ல. நீயோ வாடிய பயிரைத் தேடிப் பொழியுந் தகைமை யுடையை. நின் வரவுயாவருக்கும் நல்வரவன்றோ! நின் வரவில்லையேல் தவமுந் தானமுமெங்கே? நித்திய நை மித்தியங்களெங்கே? மண்ணோ ரெங்கே? விண்ணோ ரெங்கே? வேதமெங்கே? வேலை எங்கே? இல்லற மெங்கே? துறவற மெங்கே? எல்லாம் இல்லாமலன்றோ போய்விடும். உன்னைக்கண்ட போது அகமகிழாத ஆன்மாக்களுமுள்ளனவோ? இவ்வகையான வைபவங் களையுடைய நீ,என்விஷயத்தில்கொஞ்சம் கிருபைபுரி ந்து அளகாபுரிக்குத் தூது செல்லவேண்டுகின்றேன்; தூதென்பதைச் சாமான்யமாக எண்ணிவிடாதே! அஃது செய்யக் கூடியவர் நான்மறை யுணர்ந்தோரே. அன்றியும், முன்பு கண்ணன் பாண்டவருக்குத் தூது சென்றகாதையும்,பரமசிவன் அடியாருக்காகப்பரவை யாரிடந் தூது சென்ற காதையும் அஞ்சனாதேவி புதல் வன் அனைத்துலகுந் தொழா நின்ற வஞ்சனவண்ணத் தையுடைய தாசரதி புதல்வனுக்காகத் தூது சென்ற காதையும் அகிலமறியுமே. அன்னோர்கள் செய்த பணியை அடியேன் விடயத்தில் நீயும் செய்ய வேண்டு

கின்றன னென்ருன். அன்றியும், உன் வரவு உத்தமிகளின் உயிரை யொடுக்கும். உன்னதமான விடத்திலிருப்பவருக்குப் பேரானந்தத்தைக் கொடுக்கும். நீ போகும் பெருமையை யாராலே வருணிக்க முடியும். தென்றற் காற்று மிருதுவாக வீசி உன்னைச் சுமந்து கொண்டு செல்லும்; சாதகப் பறவைகள் உன் வரவு கண்டு மகிழும். நாரைகள் நிரை நிரையாக் கூடிக் குலாவி உன்னையே பின்பற்றித் தொடரும். நீ இப்போது அளகாபுரிக்குச் சென்று, அங்கு அன்பு மறனும்' பிசகாமல் இல்லறம் நடத்தி வந்த என்னில்லக் கிழத்திக்குத் தேறுதலைச் சொல்லி, நான் ஒவ்வொரு தினமும் எண்ணிக்கொண்டு வருவதாய்ச் சொல்வாய். ஆயின், நின்ற நாள் யார்க்கும் உணர்.வரிது என்றுஞ் சொல்லிவிடு. என் மனைவியின் மனத்துயரத்தை மாற்றும் வழியுனக்குத் தெரியாதா? ஆசையென்னுங் கட்டு அகலாமல் பாதுகாத்துக் கொள்ளும் வண்ணம் நற்புத்தியைப் புகட்டு. புலத்தைப் பலிக்கும்படியாகச் செய்யும் நினது பேரிடியின் கோஷத்தைக் கேட்ட வன்னங்கள் தாமரைத் தண்டின் கீழுள்ள தான கிழங்கை யுண்டியாக மதித்து மூக்கில் கௌவிக்கொண்டு கார்காலத்தில் மானதஸரஸை அடையும் பொருட்டாக விரிசடைக் கடவுள் வீற்றிருந்தருளும் வெள்ளியங்கிரி வரையில் உன்னையே தொடரும். ஆகையால், நீ முன்னம் தயரத விராமனுடைய காற்றுகளாற் பரிசுத்தப்பட்டதும், சான்ேறார்களெல்லாம் சிரம் வணங்கித் தொழப்பட்டதுமான இந்த ராமகிரியை நாடிவந்து இறுகப் புல்லி விடைபெற்றுச்செல்லுதல் வேண்டும். கார் காலத்தில்

நீ இங்கே வந்து நண்பனைத் தழுவி, நாற்புறஞ் சுற்றி வெகுகாலம் விட்டுப் பிரியாமல் கண்ணீர் விட்டுக் கலங்கி யுள்ளன்பை வெளிப்படுத்துகிறாயல்லவா? உன்னைக் காட்டினும் உபகார புருஷர்கள் எவரிருக்கின்றார்கள்; நீயோ செல்லவேண்டியவிடம் பல காதங்களுக் கப்பாலுள்ளது. அதை நினைத்த மாத்திரம் செல்லக்கூடிய வன்மை யுனக் குண்டாயினும், இளைப்புங் களைப்பும் யாவருக்கும் உண்டாவது சகஜம்; அங்ஙனம் நேருங்கால், நீ மலையினுச்சிகளிற் றங்கிக் களைப்பைப் போக்கிக்கொண்டும், இளைப்புண்டாய பொழுது தூய்மையான நதிகளின் ஊற்று நீரை அள்ளி யள்ளிக் குடித்துப் பசியைத் தீர்த்துக் கொண்டும் மெல்ல மெல்லச் செல்ல வேண்டும். நீ ஒரு மலையின் உச்சியிலிருந்து மேலே பறந்து செல்லுந் தோற்றத்தைக் கண்ட சித்தர் குழாங்கள் நடு நடுங்கிச் சிகரமே முன்போல மேலெழுந்து பறந்து செல்லத் தொடங்கியதோ வென்று பயமடைவார்கள். அட்டதிக்கு யானைகளின் அகம்பாவத்தையும் அடக்கும் அருமையாக நீண்டு பருத்த உருவத்துடன் உத்தரத்தை நோக்கி நீ விரைந்து செல்லல் வேண்டும். எங்ஙனம் அணியாகத் தரித்துக்கொண்ட மயிற்றோகை கண்ணனை அழகுபடுத்தியதோ அது போலவே பலவகையதான நவமணிகளின் ஒளியைத் தன்னிடங் கொண்டு பிரகாசத்தைச் செய்து பூமியைத் தொட்டுக் கொண்டிருக்குந் தன்மைவாய்ந்த வானவில்லானது உனக்கு மேலான பேரழகைச் செய்து நிற்கும். உன்னுடைய பரமகிருபையால்தான் உண்ணுதற் காதாரமான வயல்கள் விளைகின்றன

வென்று நினைத்துக் கிராமத்திலிருக்கும் மாதர்கள் பரிவுடன் நின் வரவைப்பருகுவார்களைப் போல எதிர் நோக்கி அன்பு பாராட்டுகிறார்கள். இப்படியே செல்லுவாயானால், இடையில் ஆகாயத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் ஆம்ரகூடம் என்னும் மலை உனக்கு நல் வரவளிக்கும். அம்மலையைச் சூழ்ந்துள்ள நாற்புறமும் பல மூங்கிற் காடுகளுண்டு. அவைகள் தாமே ஒன்றோடொன்று உராய்ந்து தீப்பட்டு அழிந்தொழியா நிற்கும். அங்கே நீயும் உனது நண்பனாகிய வாயுபகவானுக்கு. உதவி புரிபவன் போலச் சென்று தருமத்தை எண்ணித் தீயை அவிப்பாய். இழிந்த குலத்திற் பிறந்தவனாகவிருந்தாலும் நன்மை செய்த நண்பனைக் கண்டால் மரியாதையும் விருந்துஞ் செய்தனுப்பாமல் விட மாட்டான். உயர்ந்தவனா விடுவான்? பெண்களின் கரிய கூந்தலுக்குவமானமாகச்சொல்லும் அழகினையுடைய நீ மலைச்சிகரத்திலே உறைந்திருக்கும்பொழுது அம்மலையின் தோற்றம் ஒப்புயர்வில்லாமல் விளங்கும். அங்கிருந்து அப்பாற் செல்லுவாயானால், வழியில் விந்தியபருவதம் தோன்றும். அதன் முடியிலிருந்து மலைபோலப் பெருகி அடியில் பேராறாகவோடும் நருமதாவைக் காணலாம். அந்நதி புண்ணிய நதிகளில் ஒன்றெனச்சிறப்பித்துக் கொண்டாடிவருவது. யானையின் மீது அம்பாரிபோட்டு அலங்கரித்திருப்பதையொப்ப அந்த ஆறு அந்த மலையில் விளங்கா நிற்கும் யானையின் மதஜலப்பெருக்கால் நிறைந்து இடையிடையே பல தருக்களாற் றடுக்கப்பட்டு நிலைத்துத் திருகித் திருகிச் செல்லும் அந்நதியின் நீரைச் சாவதானமாக வேண்டியமட்டும் அருந்தி யப்பாற் செல்ல

லாம். அப்பொழுது காற்று உன்னை விரட்டாது. பொருளில்லாதவனை யல்லவா எல்லாரும் விரட்டு வார்கள். பொருளுள்ளவனை அவ்வாறு விரட்ட முடியுமா? உனக்கு வழி காட்ட மானினங்கள் முன்னே ஓடும். சித்தர்களும் உனது குளிர்காற்றைக் கண்டு களிப்பார்கள். உன்னுடைய பேரிரைச்சலைக் கேட்ட பதிவிருதைகளும் பர்த்தாவின் துணையை நாடுவார்கள். உன் வரவுகண்ட மயில்களுங் களித்து விளையாடித் தோகையை விரிக்கும். இவ்வண்ணமாகச் செல்லுவையேல், உனக்கு முன்னர் தசார்ணதேசம் புலப்படும். அத்தேசம் தாழம்பூக்களுக்குத் தாயகமானது பல வெளிகள் நிறைந்து பரந்தது. கற்பகச் சோலையையுங் கண்டு நகைபுரியும் பல சோலைகள் நிறைந்தது. அவைகளில் நிமிர்ந்துள்ள விருக்ஷங்கள்தோறும் பல பறவைக் கூடுகளைக் காணலாம். அதன் பிறகு சிறிது செல்லுவாயேல், ஆங்கொரு அழகிய நகரந் தோன்றும். அந்நகரமே அந்நாட்டின் தலைநகரமான விதிசையாகும். அவ்விதிசா பட்டணத்திற் கருகாமையில் சிறு அலைகளால் அழகினையுடைய புருவம்போல விளங்கும் வேத்திரவதி நதியைக் காண்பாய். அந்நதிக்கரையில் அளவற்றதான பூஞ்செடிகள் பூத்திருக்கும். ஒவ்வொரு செடியிலும் பல வண்டுகள் ரீங்காரஞ் செய்து கொண்டு பூப்பறிக்க வரும் பூவையர்களின் கண்ணைக் கண்டு நாணித் துயரத்துடன் அங்குமிங்கும் ஓடித்திரியும். அப்பூக்கொய்யவந்த பூவையரும் கிள்ளிய களைப்பால் வாடி நிற்பர். அதைப்போக்க உன் நிழலே சாலச் சிறந்தது. அந்நிழலைக்கண்டு அவர்கள் ஆனந்த மடைவார்கள்.

துன்ப மடைந்தவர்களுக் கெல்லாம் இன்பத்தைக் கொடுக்கும் எழிலியே! உனது திறமையோ இவ்வளவென்று எடுத்துச் சொல்லுவதற்கு இயலாததாயினும், நீ செல்ல வேண்டிய நகரம் நேர்முகமாக வில்லாமையினல், வெகுதூரம் சுற்றிச் செல்லவேண்டியதாக விருக்கும். நல்லோர்கள் பிறருக்குத் துன்பம் நேர்ந்தால், அதைப் போக்கத் தங்கள் தேகச் சிரமத்தை எதிர்பாரார்களல்லவா? அதுபோல நீயும் என் மேல் கிருபைசெய்து, உஜ்ஜயினி நகரத்தினுட் புகுந்து அரண்மனையின் மாடியிற்றங்காமல் அப்புறஞ் செல்லக்கூடாது. அப்புறத்தினுள் நுழைந்தபின்னர் நீ அங்ஙனஞ் செல்லாவண்ணம் அகலவும் முடியாது. அந்நகரத்தில் வசிக்கும் ஆடவரும் பெண்களும் உன்னைக்கண்டு மகிழாமலிரார்கள். உனது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சாகுந்தளம் முதலிய பறவைகள் எந்நாளும் நீங்காமல் விந்தியா நதிக் கரையிலேயே குடிகொண்டிருக்கும். நீ அந்நதியைக் கண்டும் இன்புறலாம். அந்நதியோ கற்புள்ள நாயகி கணவனுக்குக் குறிப்பறிந் துரைக்குமதைப்போலத் தண்ணீர் குறைந்து, பெண்களின் கறுத்து நீண்டு தொங்கும் பின்னலைப்போல அருவியிட்டு ஓடிக் கொண்டிருக்கும். அதன் துயர் நீக்கிச்செல்லுவாய். அந்நதிக்கரையின் இருமருங்கும் ஆகாயமளாவிய பல்வகையான தருக்கள் வரிசை வரிசையாக நிறைந்திருக்கும். அவைகளுக்குப் பின்னர் கண்களைக் கவரும்படியான பூஞ்சோலைகள் நறுமண மகலாமல் எப்பொழுதும் பூக்களைச் சொரிந்து கொண்டிருக்கும்.

அதற்குச்சற்றுதூரங் கடந்து செல்லுவையேயாயின் அவந்திதேசந்தெரியும். அதனுட்புகில், தலைநகரமாகிய உஜ்ஜயினியைக் காண்பாய். அது பல்லரசர்களும் பாங்குடனுண்டுவந்த பொன்னுலகு. அவ்வுஜ்ஜயினியோ இடையறாத வெள்ளப் பெருக்கினையுடைய சீப்ரா நதியாற் சூழப்பெற்று, எக்காலமும் குளிர்காற்றால் யாவருக்கும் விருந்து செய்து கொண்டேயிருக்கும். அந்நகரத்தின் பேரழகைக்காண ஆயிரங் கண் படைத்த*உன் நாயகனும் அவாக்கொள்ளுவான். அந்நகரத்தின் ஆவணவீதி, அகன்ற வாரிதியும் தன் பொருளை இழந்து வெறுந் தண்ணீராயிற்றென்று ஊகிக்கலாம்படியாகவிருக்கும். அந்நகரமோ பல் வகையான அரண்களாலுஞ் சூழப்பட்டு, ரதகஜதுரக பதாதிகள் நிறைந்து, பகைவர்கள் உள்ளே வர முடியாமலிருக்கிறது. அதில் குபேரனைக் காட்டினு மேழைகளைக் காண்பதருமை. எங்கு பார்த்தாலும் யாகதூமம் கிளம்பிக்கொண்டேயிருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் வாசனாதி திரவியங்கள் நிறைந்து, அகிற் புகை வானத்திற் படர்ந்து, நும்மனத்தையும் மறைத்துக்கொண்டு விளங்கும். அதுகண்டு மயில்கள் தன் சோலைகளில் சிறகு விரித்து ஆடும். குயில்கள் இசை பாடும். வண்டுகள் பண்சேர்த்து வாசிப்பவர்க்கு இசை கூட்டுவதுபோல ரீங்காரஞ் செய்து கொண்டிருக்கும். இப்படிப் பலவகையானவைபவங்களும் நிறைந்துள்ள அங்கே மகாகாளம் என்னும் புண்ணிய தலமொன்றிருக்கிறது. அத்தலத் தெழுந்தருளி யிருக்கும் எம் பெருமானைத் தரிசனஞ் செய்துகொண்டு, தேவகிரிக்

*நாயகன் - இந்திரன்

குச் செல். அவ்விடத்தில் தமிழ் விளங்கும். அதை வணங்கி விடை பெற்றுக்கொண்டு குருக்ஷேத்திரம் செல்வாய். அக்குருக்ஷேத்திரந்தான் முன்பு பாண்டு வின்குமாரர்களாகிய பஞ்சபாண்டவருக்கும் திருத ராட்டிரன் குமாரர்களாகியகௌரவர் நூற்றுவருக்கும் யுத்தம் நடந்த விடம். அருச்சுனனுக்கு அரிய கீதை யை அரி உபதேசித்த விடம். அங்கிருந்து எங்குந் தங்காமற் சென்றால், அருகாமையில் இருக்கும் பிரம்மாவர்த்தம் என்னுந் தேயத்தைக் காண்பாய். அதனருகில் ஊலகேத்துங் கங்கையும் யமுனையும் கலந்து ஓடும். அந்த வைபவம்கண்ணுற் கண்டவற்கே காதலைக் கொடுக்குமே யல்லாமல் மற்றவர்களுக் குச் சொல்லமுடியாது. ஒருகால் நேரில் கண்டால் மறுபடியும் அவர்கள் இயற்கை வருணனைக்கு வே றொன்றையுஞ் சிந்தியார். அந்த விடத்திற்குச் சமீ பத்தில்,அரன் திருவடிச் சாயல் பெற்றுள்ள இமயம லையைக் காணலாம். அப்பால் மானதஸரஸ் என் னும் புட்கரணி தெரியும். அதில் இறங்கினையானல் ஒரு நாளும் அடையாத பேரின்பத்தை அடைவாம். அம்மா ஸரஸின் வளப்பத்தையே தனக்காதாரமா கக் கொண்டிருப்பது அளகாபுரி. அவ்வளகை தான் எந்நகரத்திற்கும் செல்வச் செருக்கினுக் குவமானமா கக் கூறுவது. அதை இராவணனுடைய தமையனா கிய குபேரன் அரசாட்சி புரிகிறான். அவனது அர சாட்சியில் என்னைத்தவிர மற்றவர்களுக் கொரு வித மான துன்பமுங் கிடையாது. எனக்கு உன்னைத் தவிர வேறொரு உண்மையான நண்பனுங் கிடையாது. ஆனல், நான் ஒன்று உனக்கு உறுதியாய்ச் சொல்லு

வேன். நீயோ அந்நகரத்திற்குப் புதியவன் அன்று. உனக்குத் தெரியாத நகரம் உன்னதத்திலுமில்லை. அவ்வளகா புரியிலுள்ள மாளிகைகள் எல்லாம் உன்னை எவ்வாற்றாலும் ஒத்திருக்கும். அங்கு எல்லாப் பூக்களும் கால வரையறையில்லாமல் விகஸித்து விளங்கும். தடாகங்களில் அன்னங்கள் அனவரதமும் அம்புயத்தையகன்று செல்லா. அங்கு இரவு பகலிரண்டிற்கும் வித்தியாஸமே கிடையாது. அன்பாற் பெருகுங் கண்ணீரல்லாமல் அனர்த்தத்தாற் பெருகுங் கண்ணீர் அந்நகரத்திற் கப்பாலுமில்லை. வெயிலின் வெப்பமல்லாமல் வேறு வெப்பமில்லை. தலைவனுக்குந் தலைவிக்கும் உண்டாகும் பிணக்கினைத் தவிர வேறு பிணக்கமே கிடையாது. யக்ஷர்களுக்கு முதுமையே தெரியாது. அச்சாதியினர் பஞ்சமா பாதகங்களில் ஒன்றாகிய கட்குடித்தலை இன்பமாகக் கையாண்டு வருபவர்கள். மதுவுண்டு மகிழ்ந்து மனோகரமாகப் பாடும் மாண்மையுடன் விளங்கும் இயக்க மாதர்கள் கங்கையிற் சென்று நீராடிக் களிப்பார்கள். மெல்லிய வெண்பட்டாடையை வகைவகையாக வுடுத்திக் கொண்டிருப்பார்கள். அம்மாதர்களின் தேககாந்தி இரவையும் பகலாக்கும். அந்த அளகாபுரியின் மாளிகைகளின் மேல் உற்றந்து செல்லும் மேகங்கள், தண்ணீர் தெளித்துப் பின்னர் அப்புறம் வரமுடியாமல் சிறைப்பட்ட திருடனைப்போல் சாளரங்களில் எட்டிப்பார்த்துக் கொண்டேயிருக்கும். மன்மதனை எரித்த விரிசடைக் கடவுள் வீற்றிருக்கும் கையிலை காதூரத்திலிருப்பதால், காலன் அந்நகர் அணுகுவதில்லை. கற்றாரும் அவணவிட்டுப் போவதுமில்லை.

அழகிய சாலைகளில் பூக்களாலும் அணிகளாலும் விளங்கும் மாதுகிரோமணிகள் அங்குமிங்கும் உலாவுவதால் வெளியிடமெல்லாம் விலைமதித்தற்கரிய ஆபரணங்கள் இறைந்து கிடக்கும். நிதிபெற்றுள்ளவர்கள் நேர்மைக் கழுவாரோ? நேத்திரம் பெற்றவர்கள் பார்வைக்கழுவாரோ? அத்தன்மையைப்போல அவர்கள் கற்பக விருக்ஷத்தைப் பெற்றிருக்கும்போது என்ன குறைவிருக்கிறது? அவர்கள் வேண்டியபடியே எல்லாம் அளவின்றி அது அளிக்கிறது, அவைகளையெல்லாம் நீ காண்பதற்கு மிக்கதொருபாக்கியத்தைச் செய்திருந்தனையே அதுவல்லவோ சிறப்பு' என்று புகழ்ந்தான்.

இவ்வண்ணம் அளகாபுரியின் பெருமையையெல்லாம் விடாமல் எடுத்துச் சொல்லி, பின்பு தனது மாளிகையின் இருப்பினையும் தன் மனையாளின் மாட்சியினையும் குறித்து இயக்கன் மேகத்திற்கு வற்புறுத்துவான். 'ஹே! கருமுகிலே! நீ செல்லத்தயாராக விருக்கும் அந்த அளகாபுரி மன்னர் அரண்மனைக்கு அருகாமையில்வடபுறமாக விருப்பது அடியேன் குடிசில். அக்குடிசிலோ அண்டினவர்க்கு அமுதளிக்கும் அழகமைந்து தலை வாயிலின் தகுதி வானவில்லை நிகர்த்திருக்கும். என் கிருகத்தைச் சுற்றி நான் குழந்தை போல் வளர்த்து வந்த பன்மலர்ச் சோலைகள் செழித்து இருக்கும். அச்சோலையின் உட்புறத்தில் பளிங்கு மண்டபம் ஒன்றிருக்கும். அதற்கெதிரில் ஒரு தடாகம் விசாலமாக இருக்கும். அதில் என் உயிர் விளையாடிக் கொண்டிருக்கும். நான் அங்கே

இல்லாததால் அத்தடாகம் சோபை இழந்திருக்கும். அத்தடாகக் கரையில் என்மனைவி என்வரவு நோக்கிக் கொண்டிருப்பாள். அவள் மேனி உன்னைக் கண்டால் பனிக்காலத்தில் வாடும் தாமரையைப்போல வாடும். வருத்தத்தை யடைவாள். பேதமையால் பெருமூச்செறிவாள். நான் வராத வாதனையால் வதங்குவாள். நீ அவளைக் கண்டு வருந்தாதே. ஆயின் எனது நிலைமையை அவளுக்குணர்த்துவாய். அவள் கையிலிருக்கும் வீணையும் எனது வரவாற்றாமையை நினைந்து தந்திகளும் அந்தி வேளையைப்போல் ஒலி குறைந்து இன்னிசையைச் செய்யாது. அவள் கற்பிற்கரசியாதலால் என்னைக் காணாத துயரத்தால் துடி துடித்து ஏங்குவாள். எண்ணாததும் எண்ணிப் புலம்புவாள். அநேக நாளாய் என்னைப் பாராததால் அவள் கண்களில் கண்ணீர் பெருக்கி உறங்குவாள். அன்னவளைக் கருணையில்லாமல் உனது பேரிடியால் வருந்தும்படியாகச் செய்யாதே. அவள் அடையும் துன்பம் என்னையுஞ் சேர்ந்ததல்லவா? இல்லறமென்பது அதுவல்லவா? ஆகையால், இளைத்தவர்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் முகிலே! நீ அவள் விஷயத்திலும் என் விஷயத்திலும் கருணை புரிதல் வேண்டும். இன்பமும் துன்பமும் யாவருக்கும் பொதுவாக வரக்கூடியதுதானே! அவைகள் சகடக்கால்போல மாறி மாறி வரக்கூடியதே. ஆயின், உலகில் கடவுள் அல்லாமல் யாவர்தான் இன்ப துன்பங்களை அநுபவியாமலிருக்கமுடியும்? கடவுளர்களும் ஒருகாலத்தில் உற்ற மனைவியரையும் பிரிந்து இருக்கவில்லையா? பிரிந்த காலத்தும் சீதாபிராட்டியின் நிலைமை அசோகவ

னத்தில் ஏதாயினுங் குறைவுபட்டிருந்ததோ? அதனல் பத்தியன்றோ அதிகரித்தது. அது போல கற்பிற் சிறந்த எனது மனைவியும் அப்படியே துன்புற்றாலும், இன்னும் நான்கு மாதங்களில் அவைகள் எல்லாம் தானே நீங்கிவிடும் என்று அவளுக்கு நீ மனவுறுதி கூறி, அன்னவள் சொல்லுகின்ற விடையை எனக்குப் பகர்வாய். இதனினும் நீ செய்யும் பேருபகாரம் ஒன்றுமே இல்லை. நீயோ தெய்வத் தன்மை வாய்ந்தவனுகையால், உனக்கு என்னல் சொல்ல வேண்டுவது ஒன்றுமேயில்லை. உன்னை நோக்கி உலகம் தவஞ் செய்வதை நான் அறிவேன். நீ என் விஷயத்தில் வஞ்சனை செய்யாமல் மலைகளிற் றங்காமல் இத்தருணங் காப்பாற்றுவாய் என வேண்டிக் கொண்டான்.

## மாளவிகை

இஃதொரு அற்புத நாடகம். நாடகமென்பது நானிலத்தில் மிகுந்த நாகரிகர்களினுற் கொண்டாடப் பட்டுவரும் சாத்திரத்தில் ஒரு பகுதியாம். இது, கையில் நூலெடுத்துப் படித்தற்கு அவகாசமில்லாத வேலைக்காரர்களுக்கும், படிக்கத்தெரிந்தவர்களுக்கும், நல்லறிவு புகட்டும் நோக்கத்தோடு வகுக்கப்பட்டது. இது கேட்போருக்குங் காண்போருக்கும் இன்பம் பயவாவிடின், சாதாரணமானவர்கள் அதை விரும்பிச் செல்லாராதலின், இது இன்பச்சுவை மிக்கு இயல்வதாயிற்று. உலகத்தின் இயல்பினை உள்ளதை உள்ளவாறே புனைந்து காட்டுவது நாடகமே யல்லாமல் வேறொன்றில்லை. இச்சிறப்பினை அறிந்தே பிறநாடுகளிலுள்ள பிறபாஷைப் புலவர்கள் நாடகங்களை மிகவும் மேன்மையுடையனவாக மதித்து நாளும் போற்றி

வருகின்றனர். இவ்வளவு பெருமை வாய்ந்த நாடகத்தின் தோற்றமென்னே? 'நாடகம் முதன் முதலிலிருந்து பல்லரசராலும் போற்றப்பட்டு மதவிஷயத்தைச் சார்ந்து மகிமை பெற்று நிலவிவந்ததென்றே தெரிகிறது. அது, கடவுளாலயங்களில் நடைபெறும் திருவிழாக் காலங்களில் மிகுதியும் நிகழ்த்துவதினின்றும் உண்டாயிற்றென்றே மதிக்கற்பாலது.

இங்ஙனம் பெருமையுடன் வளர்ந்து வந்த நாடகப் பயிற்சியும் நாளுக்குநாள் வீழ்நிலை யடைந்தது. அதற்குக் காரணம் என்னேயோவெனின், ஒழுக்க நிலை வகுக்கப் புகுந்த நம்மனோர் அதை ஒருபுறம் ஒதுக்கி வைத்ததேயாம். வடமொழியில் பல நாடகங்கள் இருப்பினும் கல்வி முதிர்ச்சி யடைந்தவர்களால் பொன்னேபோல் போற்றி வருவது இக்காளிதாஸர் செய்திருக்கும் நாடகங்களேயாம். அவைகளின் பெருமையினைக் கண்டு தான் முற்றத்துறந்த முனிவர்களும் நாடகத்தைச் சுகரூபமான வேள்வியென்று விரும்பிக் கூறினர். ஆதியங்கடவுளான விரிசடைக் கடவுளும் இதன் பெருமையை உலகினர் அறிந்தனுபவிக்க லாஸ்யம் என்னும் நடனத்தை நடித்துக் காட்டிப் போந்தனர். உமாதேவியாரும் தாண்டவம் என்னும் நாட்டியத்தை நாளும் நடிக்கின்றனர். அவ்வளவு சிறப்பு வாய்ந்துள்ளதான நாடகங்களில் இதுவு மொன்றாகும். ஆயினும், இம் மாளவிகாக்கினி மித்திரம் காளிதாஸர் கல்வி முற்ற முன்னர் செய்தமைத்த நாடகமென்றே வடமொழி வல்ல புலவர் குழுவினர்

கூறுகின்றனர். அதற்கு, புலவர் இதில் அமைந்துள்ளதான சொற்களே தக்க சான்றென்கின்றனர். அதன் அருமையை உள்ளபடி உணர ஆவலுள்ளவர்கள் வடமொழியில் பயிற்சியுள்ளாரிடங் கண்டு தெளிவதே சிறந்தது.

இந்நாடகமும் புற்றிலுறையும் பன்னகம்போல் பதுங்கியிருந்ததை அறிந்த ஒரு குழுவினர் அதை யெடுத்தாளவேண்டுமென்று முயன்று முன் வந்தனர். அக்காலை நாடகத்திலும் நாடக நடையிலும் நன்றாய்ப் பண்பட்ட விதூஷகனொருவன், தன்மாட்டு அன்புள்ளவொரு நடிகனைப் பார்த்து, 'நடிக்கும் வன்மையுடைய நண்பரே! நீர் நேற்றைய தினம் சாயுங்காலம் என்னுடன் ஒரு நாடகத்தை நானிலம் மகிழ நடிக்கப் போவதாகத் தெரிவித்தீரே. அஃது எந்நாடகமோ' வென்றனன். அதற்கு நடிகன், "ஏதோ பழைய கவிவாணர் பான்மையாகத் தொடுத்துச் சித்தரித்திருக்கும் நாடகங்களிலொன்றைத்தான் எம்மனோரைக் கருவிப்படுத்தி நடிக்கலாமென்று உத்தேசித்துள்ளே" னென்றான். உடனே விதூஷகன் "அப்படியாயின், யானொன்று கூறுவல். இப்பொழுது மகாகவி காளிதாஸரால் மாளவிகாக்கினிமித்திரம் என்றொரு நாடகம் செய்யப்பட்டிருக்கின்றது; அதைக்கற்று நானிலம் மகிழும்படிச் செய்யுமே" என்று பகர்ந்தனன்.

அதுகேட்ட நடிகன் கலகலவென்று கைகொட்டிச் சிரித்து' "என்ன விதூஷகரே! உமது புத்தி

யின் போக்கு இன்றுதான் உமது கல்வித் திறமை யினை வெளிப்படுத்தியது. இவ்வுலகமோ நாடக மென்றால் இகழுகின்றது. அதிலும், இன்று மனம் போனபடி எழுதி இன்பரஸங்கள் சிறிதும் இல்லா மல் புதிதாகச் செய்தமைத்துள்ள அக்காளிதாஸன் நாடகத்தையா நடிக்கச் சொல்லுகின்றீர்? அதற் கென் மனஞ் சிறிது மிடங்கொடுக்கவில்லை. அவர் நாடகத்தில் பத்தி யென்பது ஒரு சிறிதும் இல்லை என்று மேதாவிகள் கூறுகின்றனர். இக்காளிதா ஸக்கவியைக் காட்டிலும் வெகுகாலம் பழமையான பாணன் முதலிய பெரும்புலவர்கள் இயற்றிவைத்தி ருக்கும் ஏற்றமான பல நாடகங்களிருக்க, நவீன கவி யாகிய அக்காளிதாஸன் நாடகத்தில் கற்றோர்க்கு இருதயங் களிப்படையுமோ? நானிலத்தோர் மகிழ் வரோ? எல்லாம் உணர்ந்தவ ரென்று உம்மை யுல கங் கூறுவது 'தலையில் ஒருமயிர்கூட இல்லாதவனைச் சவுரி ராஜன் என்று' நாமகரண மிட்டழைப்பது போலல்லவா விருக்கின்றது. நன்று நன்று. நும் மாற்றம் பிறர் ஒப்புக்கொள்ளக் கூடியதன்' றெனக் கடிந்து பகர்ந்தனன்.

சூத்திரதாரர் புன்னகை புரிந்து, 'மாணிக்கத் தின் மேன்மை வாரணமறியுமா''? மாளவிகாக்கினி மித்திரத்தின் மேன்மை மாண்பிலார் அறிவரோ? நீ உன் இயற்கைக் குணத்தையே காட்டிவிட்டனை தையே காட்டிவிட்டனை. ஏன் உலகோர் ஆட்டக் காரனென்று இழித்துக் கூறமாட்டார்கள்? நவரத்தி னத்தில், பெயரால் பேதமுண்டே யல்லாமல் ஒளி

யாற்பேதமு முண்டோ? விலை மதிக்கத் தெரியாதவன் ஒன்று மற்றொன்றாகத் தான் சொல்லுவது வழக்கம். அது அவனுடைய மதிக்கிழுக்கென்று யான் சொல்லேன். ஆனால், அது அவனுக்கு அனுபவ மின்மையின் குற்றமேயாகும். கற்றவர்களில் சிறியவரென்றும் பெரியவரென்றும் பேதமுண்டோ? அது போல நூல்களில் பழைமையான தென்றும் புதுமையான தென்றும் பாகுபாடுகள் தானுண்டோ? இப்படிப் பேதாபேத உணர்ச்சி யில்லாமல் கூறுகின்றவனைக் கற்றறிம்க்கள் கசடனாகவன்றோ பாவிப்பார்கள். 'அரைக்குடந்தளும்பும் நிறைக்குடம்தளும்பாது' என்று சொல்லும் பழமொழியைப்போல, நீ எல்லாந் தெரிந்தவனாகப்பாவனை செய்துகொண்டு பேசுவது உனது குணத்திற்கு இழிவேயாகும். கல்வியிற் கரை போய புலவர்கள் உன்னைப்போலச் சொல்லத் துணியார்கள். அவர்கள் இரண்டினையுஞ் சீர்தூக்கிப் பார்த்து, எது உயர்ந்ததோ அதையே மெச்சிக் கொண்டாடுவார்கள். ஒன்றின்மேல் மாத்திரம் அபிமானம் வைத்துக்கொண்டு மற்றவைகளைத் தூஷிக்க உன் போ லொருப் படமாட்டார்கள். வனத்திருந்து வான்றவஞ் செய்தமுனிவர்கள் வகுத்துரைத்த நீதி சாத்திரங்கள் பலவிருக்க, வள்ளுவர் செய்திருக்குறளைக் குற்றங் கூறியவர் எவரேனு முண்டோ? வேலை போல வேதங்கள் கோஷித்துக் கொண்டிருக்க, வியன் புவியில் நாலாயிரப் பிரபந்தத்தினையும், தேவார திருவாசகங்களையும் இழிவுபடுத்திக் கூறும் நாவலரும் ஈங்குளரோ? ஒருவகையான கல்வியிலும் முழுத்திறமை இல்லாதவர்களன்றோ பிறர் அருமையாகச் செய்தமைத்

தனைக் கொண்டாடாமலும், தெரிந்தவர் சொன்னல் நம்பிக்கை கொள்ளாதவர்களாகவும் இடர்ப்பட்டு நிற்பர். நீ எதிற் சேர்ந்தவனென்று எனக்குப் புலப்படவில்லை. ஆனலொன்றுண்டு: உலகம் முழுமகனையும் ஒரு காரியத்தில் மேன்மையாகக் கூறும். யாதெனில், 'முதலையும் மூர்க்கனுங்கொண்டது விடா', வென்னும் மூத்தோர் சொற்கிணங்க, மூடன், பிறர் எதை மேன்மையாகச் சொல்லத் தன் காதில் கேட்டிருக்கின்றனே, அதுவே சிறந்தவற்றிற் சிறந்ததென நாளும் தன்னறிவின்மையாற் கூறிக்கொண்டே வருவான். நீயோ கடையிற் கூறியவனை அநேகமாக ஒத்திருக்கின்றனை. ஆயின், அறியாதவனை அறியும்படியாகச் செய்துவித்து அவன் அறிவை விசாலப்படுத்துவதன்றே ஆசாரியருக் கழகு. நுண்ணறிவு உடையவனை நூலோனுக்குவித்தல் என்ன பெருமையுடைத்து? நீ என் மேற் கோபங்கொள்ளாமலிருப்பின் அந்நாடகத்தை ஒரு காதையாகக் கதறுகின்றேன் காதலுடன் கேள்'' என்று சொல்லத் தொடங்கினன்.

முன்னம், பலவளங்களும் மிகுந்து, கண்டார் ஆவலுடன் தன்னடிக் கீழே வாழவேண்டும் என்னும் இன்பத்தையே நாளும் அவர்களுக்குக் கொடுக்கும் பெரியதோர் தன்மையுடையவனாய் விளங்கிவந்தான் அக்கினி மித்திரன் என்னும் அரச சிகாமணி. அவனது அரசாட்சியில் துன்பமென்பதே கிடையாது. அவன் அரசால் விதிசை நகரம் வீறெய்தித்துறக்க நாட்டையும் நகும் பொற்புடைத்தாய்ப் பொலிந்துவிளங்கியது.

அவன் நாடக விலக்கணத்தில் நவிலொணுத் திறமை வாய்ந்தவன். அவன் பதினாறுவது ஆண்டிலேயே நாட்டாரும் நகரத்தாரும் கொண்டாடும் படியான திறமையுடன், தானே நடிக்குந் திறமைவாய்ந்தவனுக விருந்தான். அவன் இயற்கை வனப்பையும் செயற்கை வனப்பையுங் கண்டு ஆனந்தப்படும் இயல்பு வாய்ந்தவன். அவன் திருமுகமானது கருங்கடன் மிசைவரூஉம் இளஞாயிறுபோல் விளங்கிற்று; நெற்றி நிமிர்ந்து பரந்து பசும்பொற் றகட்டைப் பதித்தாலொத்தது; 'இரண்டு கதுப்புக்களும் தெள்ளிய தாமரை வாவியைப்போல் தெளிவாய் நடுவிற் சிறிது திரண்டு புடைத்து மெல்லிதின் ஒத்து ஒழுகிப் பளிங்கிற் றேன்றிய பவழம்போற்சிவந்து ஆண்பெண் என்னும் இருபாலார் கண்களையுங் கவரு நீர்மையன; இரண்டு செவிகளும், கதுப்பென்னும் வாவிமருங்கில் கொழுவிய வெண்டாமரை முகிழ்ந்து விரிந்தாற்போல வயிரங் குயிற்றிய காதணி யிடப்பட்டு, அடியில் அரும்பிய முல்லைக் கொடியை ஒத்திருந்தன: மோவாய், சிறிய பொற்கிண்ணத்தை அமைத்தது போன்றிருந்தது; இதழ், இங்குலிக நிறத்தை யூட்டிக் கொவ்வைப் பழத்தை அமைத்தாற்போலச் சிவந்து திரண்டு கைவல்லானெருவன் கடைந்து, வழுவழுப் பாக்கிய பவழத்துண்டைப் போலப் பிரகாசித்தது; செழுமையான முத்துக்களை நிரல்படக் கோத்து வைத்தது போலத் தோன்றி, நகுந்தொறும் நிலவுகான்று விளங்கும் எயிற்றின் அழகு சொல்அளவிற் பொருந்தும் அளவினதன்று; மேல் இதழில், மிகவும் கறுத்துத் துளிர்த்து அவ்விதழைக் கவிந்து மின்னும்

சிறிய மீசைக்கும், கீழ் இதழுக்கும், இடையில்தோன்றும் பற்களின் ஒளி நீல மணியாலும் பவழ மணியாலும் நன்கமைத்த வாயிற் கதவைக் கதுமெனத் திறக்க மதியின் பிரகாசத்தையே ஒக்கும்; மூக்கோ நெற்றியைத் தொடர்ந்து, அத்தொடருமிடத்தே சிறிது குழிந்து, பின் மேன்மேல் ஒத்து உயர்ந்து நீண்டு நுனியில் சிறிது வளைந்து மிக அழகாக விருந்தது; இரண்டு விழிகளும் வெள்ளித்தாமரையிதழ் ஒன்றன் நடுவில் நீல நிறத்தை வடித்து எழுதித் தெளித்துப் பொருந்த அமைத்தவாறுபோலச் சிறந்து தம்மை யுடையவனது அன்பின் திறமும் அருள் திறமும் விளங்கவெடுத்துக் காட்டுங் கருவிபோற் கவின்றன; இரண்டு புருவங்களும் கரிய சிறிய மயிர் செறிந்து சாய்ந்து ஒழுக நிமிர்ந்து வளைந்தன; குஞ்சி, கறுத்து நெய்ப்புடைத்தாய்க் கரிந்து சுருண்டு நீண்டு வளர்ந்திருந்தது; கழுத்தின் பின்புறம் ஏற்றினத்திற்குள்ள கழுத்தைப்போல விம்மியிருந்தது; இரண்டு தோள்களும் மற்போர் விற்போர் பழகுதலான் முழவு போற் றிரண்டு சரிந்து ஒழுகிக் குன்றின் குவட்டைப் போற்றிண்ணியதன்மை யுடையவாயின; கைகள் இரண்டும் அரச விலக்கணத்தைக் குறிப்பனவாய் நிமிர்ந்து நின்றால் முழங் காலையுங் கடந்து நீண்டிருந்தன; மார்பு, பொறி வரி மூன்றும் அகன்று தனக்கு நிகரில்லாமல் விளக்க முடைத்தாயிருந்தது; அடிகள் செந்தாமரை வண்ணத்தைக் கவர்ந்து வலியவாய்ப் பொலிந்தன; அவனது நடையானது ஆண்மை மிகுதியால் மதயானையைப் பின்னிடையச் செய்தது. இவன் குறித்த எழிலின் முதிர்ச்சியினைப் போலவே

நிரம்பிய நாடகக் கல்வி யறிவும் அவன் பொருந்தி யிருந்தான்.

இத்துணைப் பேரழகுவாய்ந்த மன்னனுக்குக் கற்பிலுங் கல்வியிலும் வனப்பிலும் மிக்கவளான தாரணிதேவி தாரமாகச் சமைந்திருந்தாள். அவள் கணவனைக் காதலுடன் காலை மாலை என்னு மிரண்டு வேளைகளிலும் தப்பாமல் தலை வணங்கி யுபசரித்து வரும் உத்தமோத்தமி. தன் கணவன் ஆணையை அனவரதமும் எதிர்பார்த்திருக்கு மியல்புடையாள். தன் வீட்டு வேலைகளை அகங்கார மமகார மில்லாமல் விசாரணை புரிந்து தவறில்லாமல் நடத்திவருந் தகைமை யுடையாள். தன்னடிப்பட்ட தோழியர்களைத் தங்கை தமக்கை போலப் பாவித்துக் கொண்டாடுங் குணமுடையாள். தான் கற்றிருக்கும் வித்தையைப் பிறருக்குச் சொல்லிக் கொடுப்பதில் மிகவும் இன்பமுடையாள். அடுத்தவர்களை ஆதரிக்கும் ஆவலு மன்பு மிக்கவள். கலைவாணரிடத்தில் அளவு கடந்த காதலை யுடையவள். இவ்வளவு குணம் மிகுந்தவளைத் தாரமாகக் கொண்டு இல்லற தருமத்தில் கொஞ்சமும் பிசகாமல், அரசுடன் அன்புற்றிருந்தான் அக்கினி மித்திரன்.

இங்ஙனமே சில்லாண்டுகள் கழிந்தன. ஒருநாள் அக்கினி மித்திரன் வேடிக்கையாகச் சித்திரசாலையுட் பிரவேசித்தான். ஆங்கு அவனது கண்கள், தொங்கவிடப்பட்டிருக்குஞ் சித்திரங்களின் மேற்சென்றன. அவன் ஒவ்வொன்றாகப் பார்த்து வரும்போது, அங்கு

ஒரு வனப்பு வாய்ந்த சித்திரம் வரைந்து தொங்குவதைக் கண்டான். கண்டவன் சிறிது நேரம் வரையில் இமயவரைப்போல விளங்கி நின்றான். இருந்தவன் பரந்த கண்களைப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த தன் தனயையின் மேற் செலுத்தி 'இது யாருடைய சித்திர'மென்றான். அதற்கு, அப்பெண், 'இவள் மாளவிகை' என்று சொல்லினள். அரசன் மறுபடியும் அச் சித்திரத்தை மனக் கவர்ச்சியுடன் நோக்கினன். அவன் குறிப்பினை அறிந்த குலமகளாகிய, தாரணீதேவி, இது தரும விருத்தமானச் செய்கையாகவிருக்கின்றதெனத் தன்மனத்தே விசனங்கொண்டு, அம் மாளவிகையின் உருவத்தை அவன் மறுபடியுங் காணுதிருக்கும்படியாகப் பல சூழ்ச்சிகள் செய்தாள். அன்று முதல் அரசன் அச்சித்திரத்தில் வரைந்துள்ள பெண்மணியைக் காணவேண்டுமென்னும் பேராவல் கொண்டிருந்தான். ஆனல், அச்சித்திரம் வெகு நாட்கள் வரையில் அவன் கண்களுக்குப் புலப்படாமலே ஒளித்து வைக்கப்பட்டிருந்தது.

இங்ஙனமிருக்கையில், மாளவிகையின் தம்பி வீரசேனன், தன் தங்கையான மாளவிகைக்குச் சித்திரஞ் சங்கீதம் பரதம் என்னும் மூன்றினையும் முறையே கற்றுக்கொடுப்பாரை நாடெல்லாந் தேடி, கடைசியாகத் தாரணீதேவியாரின் கல்வி நலத்தைத் தெரிந்து அத்தேவியாரிடம் அவளை மாணவியாக்க் கொண்டு விடுத்தான். அக்கணத்தே தேவியாருக்கு மனதில் பல்வகையதான தோற்றங்களுண்டாயின. ஆயினும், அவைகளை யெல்லாம் அவள் ஒரு பெருட்

படுத்தாமல், வித்தியாதானஞ் செய்வதல்லவோ கற்றோர்க்குச் சிரேஷ்டை விளைவிக்கக் கூடியதென தருமத்தை யுன்னி மாளவிகையைத் தன்னிடம் சீடனாக அமர்த்திக்கொண்டாள். மாளவிகை தன்னிடம் மாணவியாக வந்தது முதல், அவள், அவளிடத்தில் மிக்க வன்புபாராட்டித் தன்மக்களினும் பதின் மடங்கு அதிகமாகப் பாவித்துச் சித்திரம் வரைவதிலும் சங்கீதம் பாடுவதிலும் அவளுக்கு நிகர் ஒருவரும் இல்லை என்று சொல்லும் படியாகச் செய்து வந்தாள். அவற்றை நாட்டொடங்கி மாளவிகையும் குருபக்தி குறையாமல் குறிப்பறிந்து பணிவிடை செய்துவந்தனள். அன்னவள் ஒழுக்கத்திற்கும் குணத்திற்கும் மெச்சிய தாரணீ தேவி, அவளை நாட்டியத்திற் கைதேர்ந்தவரான கணதாஸரிடம் பரதத்தை வழுவில்லாமற் கற்று வரும்படியாக வனுப்பி வைத்தனள். அப்பொழுதையிலிருந்து மாளவிகை உபாத்தியாயன் உரைப்பதை யெல்லாம் உள்ள தமைத்துச் சிந்தனை செய்து, தன்போன்றவர்களோடு இடைவிடாமற் பழகிப் பல்காலுந்தான் கற்றவற்றிலேற்படும் ஐயப்பாடுகளை அப்பொழுதப்பொழுது அவர்களுக்கு எடுத்துச் சொல்லி, அவர்களாலும் ஆரியனாலும் ஐயமகற்றிக் கொண்டு, அனைவரும் புகழும் வண்ணம் அடக்கத்துடன் இருந்து வந்தாள். கணதாஸரும் மாளவிகையின் குணத்திற்கு மிகவும் ஆச்சரியமடைந்து தான் கற்ற கல்விகளனைத்தையும் கவடில்லாமல் அனுக்கிரகித்து வந்தார். அவள் அன்னம் போல் பயில்வனவற்றைப் பயின்று நீக்குவனவற்றை நீக்கிச் சின்னாட்களில்

ஆரியனும் அச்சமடையும்படி வல்லவளாயினள். அப்படியவள் கல்வியிற் சிறப்புற்றிருந்தாலும் நான் என்னும் அகங்காரத்தை விடுத்து, தம்மினும் கற்றோர் பலரிருப்பார்கள் என்னும் பெருமித வெண்ணத்தையே மனதில் வைத்துக் கொண்டு, காய்ந்தாலும், மழை பெய்தாலும், புயலடித்தாலும், தனிமையாக உபாத்தியாயர் வீட்டிற்கு செல்லுவதியற்கை. சிற்சில சமயங்களில் தான் சித்திரம் வரைவதற்காக, அங்கே இயல்பாக வுண்டாயிருக்கும் விநோதங்களை ஆனந்தமாகப் பார்த்துக்கொண்டிருப்பாள். அவள் தன்னிருப்பிடம் வந்தவுடன் தான் கண்ட விஷயம் பிறர்க்கு நன்றாய் விளங்கும்படிச் சித்திரத்திலமைத்து வைப்பாள். இப்படிப் பலவிதமான படங்களை இடைவிடாமற் சேர்த்து வைத்திருந்தாள்.

தாரணீதேவி தன்னிடம் அடைக்கலமாக விடுத்திருக்கும் நங்கையின் கல்விப் பெருக்கை அறிவதற்காகத் தனது உயிர்த்தோழியாகிய வகுளாவலிகையைக் கணதாஸரிட மனுப்பினள். ஆனல், தாரணீதேவியின் எண்ணமோ " பிறருக்கு உதவி செய்தால் தெய்வம் நமக்கு உதவி செய்யும்" என்றதை நம்பி, எந்த நாளிலும், எந்தத் தேசத்திலும் எந்தப் பெண்களுக்கும் தன்னலியன்ற மட்டும் எந்த விதத்திலாவது பரோபகாரம் செய்வதையே உறுதியாகக் கொள்ளும் இயற்கையுடையது.

இப்படிப் பரோபகார சிந்தையே குடிகொண்டிருக்குந் தாரணீதேவியார், 'என்னிடத்தில் பாடுந்திறமை பட்டும் ஆண்டவனருளால் கெடாதிருக்குமே யா

யின் அதை வரப்பிரசாதமென் றெண்ணி, நானின் புறுவ தல்லாமல் என்போன்ற பாவையர்களையும் உலகில் அபிவிருத்திசெய்து வருவேன்' என்று எக்காலுஞ் சொல்லிக்கொண்டிருப்பாள். அதுபற்றியே, அவள் அடிக்கடி பல சங்கீத வித்துவான்களை வரவழைத்து, அவ்வித்தையின் அருமை பெருமைகளைக் கண்டு கேட்டு ஆனந்திப்பாள். அவள் உள்ளே யொன்றும், வெளியே யொன்றுமாக இல்லாதிருக்கும்படித் தன்னிடமிருக்கும் பெண்களுக்கு நற்புத்தி கூறுவாள். அவள் எதைச் செய்யவேண்டுமானாலும் குறையறச் செய்ய வேண்டுமென்பதே கருத்தாகக் கொண்டவள். அந்தக் காலத்தில் பரதசாத்திரப் பயிற்சி மிகவும் அவமதிக்கப் பட்டிருந்ததினால், அதை நன்னிலைக்குக் கொண்டுவர வேண்டு மென்கிற பெருமுயற்சியே அவளது மனதை வாட்டி வந்தது. இவ்வண்ணம் இவள் ஏழைகளுக்குத் துணைபுரியும் எண்ணமுடையவளாதலால், அந்நாட்டாரெல்லோரும் அவளைத் தங்களுடைமை யென்று பாராட்டி அவளுடைய க்ஷேமத்தில் நாட்டமுடையவரானார்கள்.

இதற்குள், வகுளாவலிகை தன் எஜமானியின் சொற்படியே ஓடோடிச் சங்கீத சாலையினுட்புகும் போது, மாளவிகையும் கணதாஸரும் மற்றைய கற்றுச் சொல்லிகளும் வேடிக்கையாகச் சம்பாஷித்துக் கொண்டே வெளியே வந்தனர். உடனே வகுளாவலிகை, கணதாஸரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து 'புலவர் திலகமே! என்னைத் தாரணீதேவியார் உம்மிடத்திலிருந்து மாளவிகையின் நிலைமையினை உள்ளபடியே அறிந்துவர அனுப்பினாள்' என்றாள்.

கணதாஸர் புன்னகை புரிந்து, 'நான் மாளவிகையின் புத்தி நுட்பத்தைக் குறித்துச் சொல்ல வன்மையுமுடையேனே? ஆயின், நான் கல்வியைச் சொல்லிக் கொடுக்குந் திறமையுடையவனாக விருந்தாலும், அதைக் கிரகித்துக் கொள்ளுந் திறமை மாணவருக்கு வேண்டாவோ? காட்டில் எத்தனையோ வாசனை மலர்களிருப்பினும், ஒரு தாமரை மலரின் சிறப்பு மற்றவைகளுக்குண்டோ? என்னிடத்தில் இதுவரையில் படித்துத் தேறியவர்கள் எண்ணிலர். இப்பொழுது படித்துக் கொண்டிருப்பவரும் அநேகருண்டு. இவ்விஷயங்கள் நந்தேவியார் அறிந்ததே. அப்படியிருக்க, நான் முன்னம் பண்ணிய புண்ணிய மிகுதியாலோ, அல்லது நந்தேவியார் செய்த நற்பயனாலோ, இவ்வுலகஞ் செய்த புண்ணியத்தாலோ, கலைவாணியே அவதாரமாக வந்ததுபோல வேறுருவத்துடன் மாளவிகை எனக்கு மாணவியாக வாய்த்தனள். ஆனால், பார்வதி தேவியாருக்குக் கலைகளெல்லாம் முன்னம் கோடைக்காலத்தில் அன்னங்கள் தாமாகவே மானதஸரஸை வந்தடைவது போலவும், ஒருவன் முற்பிறப்பில் சேர்த்துவைத்த புண்ணியம் மறுபிறப்பில் தானாகவே வந்து அவனை அடைவது போலவும் வந்து சேர்ந்தனவென்று கூறியது இம்மங்கையர்க்கரசிக்கும் உவமான மாயிற்றென்று சொல்லினர். அன்றியும், அம்மாளவிகை நான் காட்டிய பாவனைகளை நோக்க மறிந்து எப்படி நான் கற்பிக்கின்றேனோ அதை யான் கற்பிப்பதைவிட பதின்மடங்கு மிக்கத் திறமையாகவும் அழகாகவும் பிறர் அற்புதமடையும் படியாகவும் அமைத்துக் காட்டுவதில் அம்மாதர் சிரோ

மணியே எனக்கு அரியளாயினள். முத்துச் சிப்பியில் விழுந்த நீர்த் துளியானது எங்ஙனம் முத்தாகி மூவுல கும் போற்றும்படியாக விருக்கிறதோ அதுபோல அவள் செவிப்படும் ஒவ்வொரு பாவனையும் உலகங் கொண்டாடு மென்பதற் கையமே யில்லை என்று கொண்டாடினர்.

இது இப்படியிருக்க, அரசன் தன்னிடம் தங்கை யைக் கடிமணஞ் செய்து கொடுக்கவேண்டு மென் னும் பேரவாவுடன் வந்த மாதவசேனனைத் தன் பெரிய தகப்பனின் குமாரனாகிய விதர்ப்பதேசத்தை யாளும் யக்ஞசேனன் நீதியுணராமல் சிறைப்படுத் தின னென்பதைக் கேள்விப்பட்டு மனம் மிகவும் நைந்து, இதென்ன அநீதம், இப்படித் தருமாதரும வுணர்ச்சி யில்லாத வரசருக்கும் இவ்வுலகில் பெருமை யும் கியாதியும் நிலவுகின்றதே என்றெண்ணிக் கடுங் கோபத்துடன் நீ இக்கணத்தே மாதவ சேனனைச் சிறைத் துன்பத்தினின்றும் விடுவிப்பதே நன்மை யென்று யக்ஞசேனனுக்குக் கடிதம் எழுத, அவன் அக்கினிமித்திரனுக்கு, 'அரசே! நீர் என்மீது கொண்ட எண்ணம் பலியாது. சிநேகம் சிநேகத்தைத் தரும். துரோகந் துரோகத்தைத் தரும். நீ என்னிடம் இருப் பது போலவே உன் பிரஜைகளிடத்தும் அன்போடும் நம்பிக்கையோடும் இரு. நீ எனக்கு மாத்திரம் பகை வனல்ல. ஒருவன் தேசத்தில் வாழும் ஜனங்களெல் லாருக்கும் நண்பனாக விருத்தல் வேண்டும். நீ உன்னை நன்றாக ஆலோசித்துப்பார். அப்பொழுதுதான் பிறர் குற்றம் விளங்கும். உன்னிடத்தில் எல்லாரும் அன்

பும் ஆதரவு முடையவர்களாக வேண்டுமானல், நீயும் அவர்களிடத்தில் அப்படியே அன்பு பாராட்டவேண்டும். மாதவசேனனையின் தங்கையைக் காணவில்லை, நான் தேடிக்கொண்டிருக்கிறேன். நீங்கள் என் மைத்துனனைச் சிறையில் வைத்திருக்கிறீர்கள். அவனைச் சிறையிலிருந்து மீட்டு உங்களிடம் அனுப்புகிறேன்' என்று எழுதினன்.

அக்கடிதத்தைக் கண்ட வரசர் பெருமானுக்குக் கோபங் கொதித் தெழுந்தது. விண்ணவரும் மண்ணவரும் அச்சங்கொண்டார்கள். அவன் அண்ட முற்றும் பேரொலி நிரம்பும்படிக் கொக்கரித்தான். தொடைதட்டி தோள் புடைத்து இரைத்த குரலொலி எண்டிசையும் பரவிற்று. 'அறிவில்லார் என்னுடன் மாறுகொள்வார். அவர் தனது உடல் வலியும் துணை வலியுந் தோள்வலியும் யோசியார். இதுவரையில் என்னுடன் மாறுகொண்டவர்களில், எவர்தான் இவ்வுலகில் புகழுடன் விளங்கியிருக்கிறார்கள்? உலகத்தின் உண்மையினை அறியாத இப்பேதையனு என்னை அறநெறி பிசகினவனென்று குறிப்பாற் கூறுந் தகுதியினை யுடையவன்? இன்னும் அரைக்கணத்தில் அவனை அரசாட்சியினின்றும் இருந்தவிடந் தெரியாமல் பஞ்சைப்போலப் பறந்தோடும்படியாகச் செய்கிறேன். அமைச்சே! நமது சேனைகள் அவ்விளவரசன் நாட்டை நோக்கிச் செல்லட்டு' மென ஆணையிட்டான்.

இதற்குள் அக்கினிமித்திரன் ஏவிய தூதுவன் போலச் சூரியன் வடதிசையினின்று தென்திசைக்

கண் சென்றனன். கார்மேகங்கள் வானமெங்கும் படிந்தன. சூரியனுடைய வெப்பமாகிய கதிர்கள் குளிர்ந்தன. வெள்ளியமேகங்கள் சூல் கொண்டன. நீலநிறந் தங்கிய வானம் இருண்டது. மின்னல்கள், இன்னர் வீசிய வாளென வேற்றுமை யுணரப்படாத போர்க் களத்தில் ஒழுகுகின்ற மதநீரையுடைய யானை கள் அவ்வாள்களினல் புண்படுவதுபோலத் தோன் றும். கரு நிறமாகிய பெரிய யானையை நிரைத்து வைத்தாற் போலக் கருப்பங்கொண்ட மேகங்கள் நிறைந்து, பெரிய கருங்கடல் நீரை வலிமை மிகுந்த வானத்தின் கண் வைத்துள்ளதுபோலப் பேரோசை மிகுந்தன. அப்போது அமைச்சன், அரசனை நோக்கி, 'அரசே! முயலைப் பிடிக்க இவ்வளவு ஆடம்பரத்துடன் செல்ல வேண்டுமா? காலமும் கார்காலமாக விருக்கின் றது. நமது சேனை நரிபிடிக்க இவ்வளவு பிரயாசையும் படவேண்டுமா? " அந்த யக்ஞசேனன் இப்பொழுது தான் அரசப் பதவியைப் பெற்றான். இன்னும் அவன் அந்நாட்டாரின் பேரன்பை அடையவில்லை. குடிகளின் ஆதரவில்லாத வரசாட்சி அபிவிருத்தி யடையாதென்பதை அறியீரோ? குடிவலி யிருந்தால் அவ்வரசனை எளிதில் வெற்றிபெற முடியாது. இப் பொழுதவன், அத்துணையதான வலியொன்று மில் லாமலிருக்கின்றான். அவனை எதிர்க்க இவ்வளவு பெருஞ்சேனைக் கடல்போலத் திரண்டு செல்லுவது வியர்த்தமேயாகும். நம் சேனதிபதியார் சென்றாலே அந்தப் புதிய செடியை வேருடன் களைந்து வெந்நீர் வார்த்து வெற்றி முரசறைந்து வரலாமே யென்றான். அரசன் அவ்வண்ணமே செய்யக் கட்டளை யிட்டான்.

அக்கினிமித்திரன் எவ்வகையான சூழ்ச்சி செய்தாயினும் அம்மாளவிகை என்னும் கற்பினுக்கரசியைக் காணவேண்டுமென்னும் மயக்கமே மேற்கொண்டிருந்தான். அவ்வுண்மையினை உள்ளபடியறிந்த விதூஷகன் அதை நிறைவேற்றி வைப்பதற்காக ஒரு அரிய தந்திரத்தைச் செய்யத் தொடங்கினன். அதற்காக அவன் செய்யத் துணிந்த முயற்சிகள் பல. அப்பால் கணதாஸருக்கும் மற்றொரு ஆடலாசிரியனாகிய அரதத்தருக்கும் பகைமை யுண்டாகும்படியாகத்தானே செய்துவிட்டான். அதுகாரணமாக அவ்விருவர்களும் ஒருவரோடொருவர் நகமும் தசையும்போல் இருந்ததுபோய்ப் பருந்தும் புறவும் போலாயினர்கள். அவர்களுள், ஒருவரை யொருவர் காணுவிடத்து, யான் பெரியன் அவர் சிறியன் என்று ஒருவர் மற்றொருவரைப் பற்றி மாறு கொண்டு மனம் போயின வண்ணமே தூஷித்து வந்தார்கள். ஒரு நாள் இருவரும் அரசன் அரண்மனையிற் சந்திக்க நேர்ந்தது. அப்போது அர்தத்தர், கணதாஸரைப் பார்த்து, 'நும்பெருமை நான் அறிவேன்; பிறர் அறிய மாட்டார்கள். கூர்மையான நகமும் வாள்போன்ற பற்களும் இழந்த சிங்கம் பிறரிடம் என் செய்ய முடியும்?' என்றனர். அதற்குக் கணதாஸர், 'மிருகேந்திரன் என்னும் பெயர் மாறுமா? தள்ளாமை என்பது எவருக்கு மியற்கைதான். நான் அனுபவம் முதிர்ந்த அபினய ஞானமுள்ளவன். நீரோ இன்னும் பரதத்திற்கும் பாவனைக்குமுள்ள பேதமுணராத ஞானமுடையவர். என்னைக் கண்டவிடத்துந் தூஷிப்பதற்குக் காரணமென்னையோ' வென்றார். அப்போது அரதத்தர்

'காரணமில்லாமல் காரியமில்லை; அதை யான் வெளிப்படையாக உம்முடன் சொல்லிக் கொள்ளுவதற்குத் தயாராகவில்லை' என்று கடிந்து பேசினர்.

இங்ஙனம் இரண்டு ஆடலாசிரியரும் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டிருப்பதை, அயலிருந்து கண்டவர்கள் 'இதென்ன விபரீதமாக இருக்கின்றதே. அறிவே ஆபரணமாகப் பூண்ட இவ்வித்துவான்கள் இரண்டுபேரும் இங்ஙனம் இதாயிதம் தெரியாமல் முரண்படுவார்களோ? இப்படிப் போர் புரிவது புல்லர்களின் தொழிலென்பதைப் புத்தியில் தெளியார்களோ? என்று நகைத்துக் கைபுடைத்துப் பரிகசித்தனர்.

இதற்குள் 'சண்டி மிரண்டாற் காடிடங் கொள்ளா' தென்னும் பழமொழியைப்போல மிகவுங் குரூரம் அதிகரிக்க, இரண்டுபேரும் அரசன் அவைக்களம் புகுந்தனர். அவைக்கண் வீற்றிருந்தவர்களெல்லாம் இன்று ஏதோ விசேஷ மிருக்கின்றது; இருசுடரு மொன்ருய் எழுந்து வந்ததுபோல இவ்விரு ஆடலாசிரியரும் இவண் வருகின்றனரே. இன்றேசெவிக்கின்ப முண்டாகும் காலஞ் சம்பவிக்கும் என்று சந்தோஷமாக விருந்தனர். ஆங்குப் பெருமையுங் கம்பீரமுங் கொண்டு பூவுலகிற்குப் புரந்தரன்போல வீற்றிருக்கும் அரையன் திருமுகத்தைப் புலவர்கள் கண்டு, தாங்கள் மாறுபட்டதை எடுத்துச் சொல்ல வஞ்சி அடிபணிந்து தலைகுனிந்து முகப்பொலிவழிந்து நின்றனர். அரசர், அவர்களின் வரவினைப்பார்த்து, 'புலவர்காள்! என்ன

நும்மிருவர் முகமும் வெளுத்திருக்கின்றது? கருக் கொண்ட மேகத்தைப்போல் எப்பொழுதும் பிறருக்கு இன்பத்தையே கொடுத்துக்கொண்டிருக்கும் உங்க ளுக்கும் துன்ப முண்டாவதின் காரணமென்னே? நீங் கள் கற்றுள்ள வித்தை நெருங்கியவர்களுக்கும் இன் பம் பயப்பதாகவிருக்க, உங்கள் மனம் எப்படித் துன் பத்தில் தோய்ந்த' தென்று உசாவினன். அதற்குக் கணதாஸர், 'மன்னர் திலகமே! புலவர் பகைமையினே நீ யறியாயோ? இவ்வரதத்தர் என்னை பலர் கூடிய விடத்தில் பேசொணாத, அபத்த வார்த்தைகளை யெல் லாம் சோனைமாரிபோற் பொழிந்தார்.

" தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு"

என்னும் நியாயம்போல அவர் கூறிய தீச்சொற் கள் என்னை வாட்டுகின்ற'தென்றனர். பக்கத்திலிருந்த அரதத்தர், 'இவர், தனக்கும் எனக்கும் கடலுக்கும் கால்வாய்க்கும் எவ்வளவு வேற்றுமை யுளதோ அவ் வளவு வேற்றுமை யுண்டென்று ஏளனஞ் செய்தார்; அவ்வுபமான வுபமேயங்கள் என்மனதை வற்புறுத்து கின்றதென்றனர். அவர்களது வாதத்தைக் கேட்ட மன்னன் மனம் மிகவும் ஆச்சரியத்தை யடைந்தது. இவ்விருவர்களும் மாறுபட்டு நியாயசபைக்கு வந்த தின் காரணம் அருமையினு மருமை. இதில் ஏதோ இரகசிய மிருக்கிறது; அதைப்பின்னர் அறிந்து கொள்ளுவோம். ஆயின், இவ்வழக்கை நம்மால் தீர்க்க முடியாது. அவர்கள் கற்ற கல்வியிற் கரை கண்ட வர்களுக்கே அவ்வழக்கைத் தீர்ப்புச் சொல்ல முடி

புமே யல்லாமல், மற்றவர்கள் அதைத் தீர்க்க முடியாதென்றெண்ணி, உடனே காவற்காரனைக் கூவி, தாரணீதேவியையும் பண்டித கௌசிகையாரையும் அழைத்து வரும்படியாகச் சொல்லினன். அவர்கள் இருவரும் அவ்வாறே அவைக்களம் வந்து சேர்ந்தனர். ஆங்கு முன்னமே வீற்றிருந்த அங்கத்தினர்களும் இவ்வழக்கின் தீர்மானத்தைக் கண்டு களிக்கப் பேராவல் பூண்டு வானத்தை எதிர் நோக்கும் சாதகப் பறவையைப்போல எதிர்நோக்கி யிருந்தனர்.

அரசன் பண்டித கௌசிகையாரையும் தாரணீதேவியாரையும் பார்த்து, நீவிர்தான் இப்புலவர் வழக்கை ஆராய்ந்து அறிந்து தகுந்தவண்ணம் பரிசீலனை செய்யவேண்டும். 'பாம்பின் கால் பாம்பிற்கே தெரியும்' என்னும் பழமொழிக் கிணங்க, அவர்கள் வித்தியா விஷயம் உங்களுக்கே புலனாவதன்றி எனக்குப் புலனாவதின்று. அன்றி, மற்றொரு குற்றமும் மாணிலம் என்மீது சாற்றும். அரதத்தர் என்னைச் சார்ந்தவரென்றும், கணதாஸர் தேவியைச் சார்ந்தவரென்றும் பலரு மறிந்துள்ளரே. அவ்வாறிருக்கையில், நான் எங்ஙனம் தீர்ப்புச் சொன்னாலும், அரசன் நடுவு நிலைமைமாறி நியாயம் வழங்கினன் என்று பலர் வசைமொழிக்கு ஆளாகவேண்டியிருக்கும். ஆகையால், இவ்வழக்கை நீதிதவறா வண்ணம் விசாரணை புரிந்து தீர்ப்புச் சொல்லவேண்டிய அதிகாரம் பண்டித கௌசிகையாரிடமே கொடுக்கப்பட்டதென்றான்.

அதுகேட்ட அவையினர், அரசன் கூறிய யாவும் அனைவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. ஆனால், இந்தக் கௌசிகையாரோ பெண்பாலரா யிருந்து துறவைக் கைக் கொண்டொழுகுபவர். இவருக்குத் தமர் பிறர் என்னும் தாரதம்மியம் இல்லாவிடினும், வேந்தன் ஆணைக்குப் பயந்து தரும விருத்தமாகத் தீர்ப்பு செய்து விடுவாரோ என்னவோ வென்று தான் சந்தேகிக்கக் கூடியதாக விருக்கின்றதென ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டனர்.

தாரணீதேவி யெழுந்து, 'அவையோர்காள்! நும் மிடத்து அடியாள் செய்யும் விண்ணப்ப மொன்று ளது. நம் அரசரும் அதின் உண்மையை உள்ளபடி யறியாதவராகி இடர்ப்படுகின்றனர். இப்புலவர்கள் வழக்கு உற்று நோக்குவார்க்குக் 'கைப்புண்ணிற்குக் கண்ணாடி வேண்டுமா' என்பது போலும், கரதலா மலகம்போலும் விளங்கக்கூடிய தொன்றேயாகும். பரதசாத்திர மென்பது அவரவர்களின் மனோல்லா ஸத்தைப் பொருந்தியதேயாகும். அந்தச் சாத்திரத் தில் பிற சாத்திரங்களைப்போல் வாதத்திற் கிடமில்லை. அதில் பிரயோகமே பிரதானமானது. எவர் நான் பரதத்தில் வன்மை வாய்ந்தவர் என்று சொல்லிக் கொள்ளுகின்றார்களோ அவர்களையும், அவர்கள் கற் றுச் சொல்லியவரையும் அவையினர் காணும்படியாக அபிநயஞ் செய்யச்சொல்லினால், திறமை வெளிப் படுகின்றது. இதில் இவ்வளவு சிரமப் படுவானேன்? அவையில் உள்ளோரும் அதற்குச் சம்மதித்தனர். அரசனும் அதுவே சாலப் பொருத்த முடையதென

ஆமோதித்தான். அப்போது கணதாஸர் தாரணீ தேவியின் மதிமுகத்தைப் பார்த்தார். அருகில் நின்றிருந்த வகுளாவலிகை, 'அம்மணீ! இதெல்லாம் நம்மரசர் வேணுமென்றே நடத்திவரும் சூழ்ச்சி யென்பதை உமக்குத் தெரிவிக்கிறேனெ'ன்று சொல்லினள். அதுகேட்ட தாரணீதேவியாருக்கு மனம் வேறுபட்டது. உடனே தேவியார் 'ஆம்' இவ்வாறு நிகழ்ந்ததற்குக் காரணம் நம்மரசர் பெருமகனுகவேயிருக்கவேண்டும். ஏனெனில், முன்னம் மாளவிகையின் சித்திரத்தைக் கண்டு இவள் யாரென வினவினவராயிற்றே என்று ஐயமுற்றனள். அதன் பிறகு தாரணீதேவியார் இந்த தர்மசங்கடத்திற் கென்ன செய்யலாம், நாம் கொண்ட எண்ணத்தை எங்ஙனம் விலக்குவது என்று நினைத்து ஒருவிதமான எண்ணமும் உள்ளத்தி லுதிக்காமல் கௌசிகையாரை நாடி நின்றனள். அவர் தன்னை அவள் நோக்கியதின் குறிப்பை அறிந்து, "தேவியாரே! அறிவென்னுந் தோட்டியால் அடக்கக் கூடாதொரு அரியபொருளும் அகிலத்திலுளதோ? தன் காரியத்தின் நிமித்தம் தகாதவரையும் சரணுகதி யடைந்து காரியத்தைச் சாதித்துக்கொள்ளுவது மனிதருக் கியற்கையென்பதை அறியீரோ?! 'சாக்ஷிக்காரன் காலில் விழுந்து சாதித்துக் கொள்ளுவதினுஞ் சண்டைக்காரன் காலில் விழுந்து சாதித்துக்கொள்வது சௌகரியமன்றோ' வென்று குறிப்பாற்றன் னபிப்பிராயத்தை வெளிப்படுத்தினர். அதன் பொருளை யறிந்த தாரணீ தேவியார், ஏதோ புலவருடன் சம்பாஷணை செய்பவர்போலத் தனது முகத்தைத் திருப்பிக்கொண்டு, கணதாஸரை நோக்கி

'புலவர் பெரும! உலகினர் சொல்லும் நீதிவாக்கியத்தை நிலை நிறுத்தி விட்டீரே. உலகத்தை இன்புறச் செய்யும் நீங்கள் தத்துவத்தின் உண்மையறியாதவர்களாகிய அறிவீனர்கள்போல் அனைவருங் கண்டு அருவருப்பு அடையும்படியாகச் செய்து விட்டீர்களே. உங்களைப் போற்றி வாழ்வதன்றோ எங்களுக்கு மேன்மையைத் தருவது! அதைமறந்து இழிசனர்களைப்போல ஒருவரோடொருவர் மாறுபட்டு வழக்கிட்டு மன்னவன் அவைக்களம் புக்கனரே. இஃது நும்போலியருக்கடுக்குமோ? முன்னம்பண்ணிய புண்ணிய மிகுதியாலன்றோ அபரிமிதமான ஞானத்தைப்பெற்று அனைத்துலகுந் தொழநின்றீர். வெகு காலமாகச் சேர்த்து வைத்திருக்கும் பொருளை ஒருவன் இழந்துவிடச் சம்மதிப்பானோ? முற்றத்துறந்த முனிவர்களும் முடிவணங்கும் பெருமையைப் பெற்றிருப்பதெல்லாம் நீவிர் அடைந்துள்ள ஞானத்தாலன்றோ? அத்துணைச் செல்வத்தை அரைநொடியில் அரசவையில் இழந்துவிட்ட பின்னர், நீவிர் கற்ற கல்வியைக் கணிசிப்பவர்களு முண்டோ? ஒருகுடத்து அமுதத்திற்கு ஒரு துளி விடம் போதாதோ? திங்கள் மறுவாற்றுஞ் சான்றோ ரஃதாற்றாரென்று கூறும் அறநெறியை மறந்தனீரோ?' நன்மை தீமை இதுவென்று நாடி பிறர்க்குரைக்கும் திறமை பெற்றுள்ள வுங்களுக்கு யான் உரைக்கும் உரையுமுளதோ?' வென்று தன் புத்தியால் அவர்கள் சண்டையைத் தடுக்க முயன்று பார்த்தாள். அவளது முயற்சிகள் முழுவதும் பயன் படாமல் விழலுக்கிறைத்த நீர் போலாயிற்று. தேவியின் முகமும் திடீரென மேகத்தால்

மறைக்கப்பட்டச் சந்திரனைப் போலப் பொலிவு குன்றிற்று.

தேவியாரின் முகத்தில் மாறுபாடு கண்ட கௌசிகையார் 'அம்மணீ! நீ சொல்லியதெல்லாம் உண்மையே. நீயோ கல்வியைக் கசடறப் படித்துத் தேறியவள். கற்றவர்களும் ஆச்சரிய மடையும்படியாகப் பேசும் வன்மை வாய்ந்தவள். ஆனால், 'பேதமையென்பது மாதர்க் கணிகலம்' என்று கூறிய பழமொழி உன்விடயத்தில் பொருந்தாதாயினும் பொருந்தும்படியாகக் காட்டி விட்டனையே. உலகில் கோழிக் காய்ச்சலும், புலவர் காய்ச்சலுக்குப் புறம்பானதென்பதை யறியீரோ? முன்பு தமிழ்க் கல்வியில் தலைமைபெற்ற ஔவைப் பிராட்டியாரும்கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரும் பல விடயங்களிலும் பேதபுத்தியையுடையவர்களாய், ஒருவருடன் ஒருவர் பேய்க் காய்ச்சல் கொண்டு மாறுபட்ட செய்தியை மாநிலமறியுமே. அது உமது நினைவிற்கு வரவில்லையோ? புகழேந்தியார் சிறைபுகுந்து சீர்மைகெட்டு நின்றது, உமது நினைவிற்கு வரவில்லையோ? ஆனால், புலவர்களில் இரண்டுவகைப் பகுதியினருண்டு. சிலருக்கு வித்தை தமக்கு மட்டும் நன்றாகத் தெரியும். சிலருக்குத் தான் கற்ற வித்தையைப் பிறருக்கு நன்றாய்ச் சொல்லிக் கொடுக்கத் தெரியும். இவ்விருவகைச் செல்வத்தையும் எவர் ஒருங்கே பெற்றிருக்கின்றனரோ, அவரே புலவர்களிற் சிறந்தவராகக் கொண்டாடற் குரிமையுடையார். ஆனால், இவ்விரண்டு வன்மையும் ஒருவரிடம் அமைந்திருப்பது மகாவருமை.

ஒருவன் பலர் கொண்டாடப் பிரசங்கம் புரிவான். மற்றொருவன் பதின்மரைக் கண்டால் பயமடைந்து தான் கற்ற கல்வியைக் குடத்துள்ளிருக்கும் விளக்கினைப்போல அடக்கி வைத்துக்கொண்டு வையகத்தில் புகழ்ச்சியில்லாம லிருப்பான். இங்ஙன மிருக்கும் போது புலவர்களுள் காய்ச்சலில்லாமலிருக்குமா? இதைப்பற்றி நீர் ஏன் மனக்கஷ்ட மடைதல் வேண்டும்?' என்றனர்.

அவ்விருப்பமற்றவார்த்தைகளைக்கேட்ட தாரணி தேவியார், கணதாஸரை மறுபடியு மழைத்து, நீர் கொண்டிருக்குங் கோபத்தை என் பொருட்டாக விடும். இப்பொழுது இவ்வழக்கு வேண்டாம். அந்த அரதத்தரே மேன்மையுடையவராக விருக்கட்டும். 'பணிந்தார் பத்தும் பெற்றவரன்றோ' அஃதிழந்தார் அனைவரினுங் கீழ்ப்பட்டவரென்பதை மறந்தீரோ? அன்றியும் நம் முதுமக்கள்,

"பற்றிலா தொன்றினைப் பற்றின லல்லது
கற்றதனு லென்ன பயன்" என்றது போலப் பிறப்புக்களில் மேன்மையானது மானுடப் பிறப்பென்றும், அம்மானுடப் பிறப்பின் சிறப்பும் அறிவுடைமையினுல் தான் என்பதும் யாவருக்குஞ் சம்மதமாம். பிரபஞ்சத்தில் நடைபெறும் விஷயங்களின் காரணங்களைச் சரியாக அறிய மனுஷன் அசக்தனேயாயினும், அவைகளைப் பகுத்தறியுந் தன்மை இவனிடத்தில் உண்டு. அஃதில்லையானல், இவனை மிருகம் பறவை என்கிற விரண்டு சாதிகளினும் தாழ்ந்தவ

னென்று சொல்லவேண்டும். ஏனென்றால், இவன் கருவிகளின் உதவியினால் செய்யக்கூடிய அற்புதங்களெல்லாம், அவைகள் சுபாவத்தில் செய்யுந் திறமையுடையனவாக இருக்கின்றன. இவன் வீணை முதலிய கருவிகளினால் ஒரு சபையைச் சுகப்படுத்த வல்லவன். அவைகளின் இயற்கைக் குரலே உயர்ந்த சங்கீதத்தில் உண்டாகும் சப்தத்திலும் இனிமையானது. இப்படிப்பட்ட பெருமைகளையுடைய பிறவிகளினின்றும் பிரித்து எண்ணப்பட்டுச் சிலாக்கியம் அடையுந் தன்மை மனிதனுக்கு வருவதெல்லாம் அந்தஅறிவுடைமையினாற்றானென்பது தெளிவாக விளங்கும். அவ்வளவு சிலாக்கியமான அறிவைப் பெற்றாலும், அதை விருத்திபண்ணித் தான் அறியவேண்டிய விஷயங்களை ஒருவன் அறியாமல் மூடமாயிருந்தால் பயன் சிறிதும் இல்லை. நீரோ சகலவிதமான கல்வியையுங் கற்றிருக்கின்றீர். நீர் உமக்கு ஈடும் எதிர்ப்பு மில்லாதவரோடு வாதமிட்டுத் தாதுகலங்குதல் தக்கதோ? "கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக், கபடமென்றுநட்டுதற்கோ" என்றபடி, நீர் போதனைகள் பிரசங்கங்கள் செய்யும்பொழுது, அகங்காரம் சிறிதுமின்றி மெய்க்கல்வி உதயமாகு மிடத்தைப் பார்த்துப் பார்த்து மனங்குழைந்து அருள்வழி நின்றதைக் கண்டு, தூயகல்வி கற்றானென்றும் மெய்ப்புலவன் என்றும் யாவராலும் புகழப்பட்டு, உபசாந்தமடைந்த பெரியோர்களாலும் நன்கு மதிக்கப்படுவதை விட்டுச் சிற்றினத் தவருடன் சண்டையிட்டுச் சீர்மை கெட்டு நிற்கின்றீரே" என மறுபடியும் குறிப்புரையாகச் சொல்லினள்.

கணதாஸர், 'அம்மணீ! நீர் சொல்லும் சொல்லிற்கும் எதிருண்டோ? ஆயினும், எவன் எதிரியின் சொல்லிற்குப் பயந்து அவனாற் சொல்லப்படும் நிந்தனைக்குச் செவிசாய்த்துச் சும்மாவிருந்து, தான் கற்றுள்ள கல்வியைப் பணம் பறிக்குங் கருவியாக மட்டும் வைத்திருக்கிறானோ, அவன் கல்வியை விற்றுக் காலங்கழிக்குங் கசடனென்பதைக் கவனத்தில் வையாமல் என்னிடஞ் சொல்லத் துணிந்தீரே, இது எனது அபாக்கியமேயாகுமென்று கண்களிற் றண்ணீர் துளும்ப நின்றனர். தாரணீதேவியார் அதற்குப் பதில் கூற நாவெழாமல் சற்று நேரம் நிதானித்து, 'கணதாஸரே! நான் உம்மிடம் நடனங்கற்க அடைக்கலமாக விட்டுள்ள மாளவிகை, இன்னும் கல்வியின் அடிமுடி யறியாதவள் தானே. அவளும் உம்மிடம் வந்து ஆண்டு நிறைவேறவில்லை. அவளுக்கு இதற்குளென்ன வன்மையும் பாவனையுந் தெரிந்திருக்கப் போகின்றது? அன்னவளைக் கொண்டுவந்து அலங்கோலப்படுத்தப் போகின்றீரோ? அதுமாத்திரம் வேண்டா'மென்று சொன்னாள்.

கணதாஸர், 'வெந்த புண்ணில் வேல்பட்டுருவியது போல' அவ்வசனத்தைக் கேட்டவுடன் முன்னடைந்திருந்த துயரத்தினும் பதின்மடங்கதிகமான துயரத்திலாழ்ந்தார். தேவியின் கட்டளைக்குப் பிரதிகூற முடியாமல், 'அம்மணீ! என்னை அவமானப்படுத்த வேண்டுமானால், இன்னொரு முறை அவ்வாறு கூறுங்கள். என்னிடம் பரத நாட்டியங் கற்றுவரும் மாணவிகளுக்குள், அவள் ஒருத்தியே மிகவுந் திறமையுடை

யவள். அவளை விட்டு நான் சபையில் என்ன பெருமையடையப் போகின்றேன்' என்றனர். அதற்குத் தேவியார் 'உமது இஷ்டம்போல் செய்யும். அவ்விஷயத்தில் கௌசிகையாரை அழைத்துக்கொண்டு அப்பாற்சென்று, உம்வயின் கல்விகற்ற மாணவிகளின் திறமையைக் காட்டச் சொல்லு'மென்றனள். அப்போது, கௌசிகையார் எழுந்து,'எவ்வளவு சமர்த்தனைக விருந்தாலும் ஒருவரால் அது நிச்சயிக்கப்பட முடியாதது. நீயும் வரல்வேண்டும்' என்றார். கணதாஸரும், நீர் கட்டளை கொடுக்காவிடில் என்னைக் கைவிட்டது போலாகும். பின்னர் நான் இப்பிழைப்பை வைத்து வாழ்வதினும் உயிர் துறப்பதே மேன்மையாகு' மென்றனர். அப்போது தேவியார் மனம் 'இருதலைக் கொள்ளி எறும்புபோல' ஒன்றுஞ் சொல்ல முடியாமல் தத்தளித்தது. அப்பால், நம்மாலாவதொன்றில்லை; அன்று அயன் விதித்த விதியை மாற்றுபவர்களும் உளரோவெனத் தானே தன் மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு கணதாஸரின் வேண்டுகோளுக் கிணங்கினள்.

அதன்பிறகு அனைவரும் அவைக்களத்தை விட்டு அரங்கசாலைக்குச் சென்றனர். அப்போது தேவியார் தமது கணவனுரைப் பார்த்து, 'அரசே! உமது சூழ்ச்சி உலகமறியும். 'கிணற்றுத்தவளை நாட்டு வளப்ப மறியாதென்று' எண்ணிவிடல் வேண்டாம். நீர் இவ்வளவு கஷ்டம் இவ்வற்ப காரியத்தில் எடுத்துக் கொண்டிருந்தால் இவ்விராஜ்யம் இந்திரனுலகினும் எழில் பெற்று விளங்குமே' என்றனள்.

ஆக்கினிமித்திரன் அவ்வாறுகூறியதற்குக்காரண மென்னையோ என்று வினவினன். அதற்குத் தாரணி தேவி, உலகமாளு மரசன் அனைவரிடத்தும் உள்ளும் புறமும் ஒத்திருத்தல் அசாத்தியம். அதருமத்தில் மாத்திரம் அணுவளவும் பொருந்திச் சிந்தித்தல் கூடாது. ஆயினும், புலவர் காய்ச்சல் இயற்கையென்பது உமக்குத் தெரிந்ததுதான் என்றாள். அப்பொழுது மணி மூன்றிற்கு மேலிருக்கும். அரங்கின் சுற்றுப் பக்கங்களிலெல்லாம் அருமறை யுணர்ந்த பெரியோரும், பரதசாத்திர மறிந்த பாவலரும், அரதனமணிந்த அரிவையரும் நிறைந்திருந்தார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் இன்னிசைக் கருவியுடன் இரண்டு ஆடலாசிரியர்களும் மாணவிகளை அழைத்துக் கொண்டு அரங்கமேறினர்.

அப்போது அரசன் கௌசிகையாரை நோக்கி, 'அடிகாள்! யாருடைய வித்தையை முதலிலளவிடவெண்ணுகின்றீரென்று கேட்டான். அதற்கவர், 'கணதாஸர் வயதில் மூத்தவராகையால் அவருடைய கல்வியே முதன்முதல் அளவிட வேண்டியது தருமம். அப்புறமே அரதத்தரின் கல்வி பரீக்ஷித்தற்குரியது என்றனள். பின்னர், ஆசாரியன் கட்டளை பெற்ற மாளவிகை, பிடியானை நடைபெயர்வது போல அரங்கின் மேலேறி நடிக்கத் தொடங்கினள். அவளது திறமையினைக் கண்டு அங்கிருந்தவர்களெல்லாம் வியந்தனர். நடனம் முடிந்ததும் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் நான்கு குணங்களும் வேலி போற் சூழ்ந்துகாக்க, அவள் ஒரு புறத்தில் பதுமை

போல நின்றாள். அப்பால் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து செல்ல முயன்று நாலடி எடுத்து வைத்தாள். ஆங்கிருந்த விதூஷகன் மாளவிகா! உன்னுடைகத்தில் அநேக பிசகுளது, நில் என்று சொன்னான். அவள் ஆசாரியன் முகத்தை நோக்கினாள். தான் செய்த நடனத்தில் பிசகுளதென்ற சொல்லைக் கேட்டுத் தலைகுனிந்தாள். அத்தருணத்தில் அரசன் அவள் அழகைக் கண்டு ஆனந்தமடைந்தான். அந்தக் குறிப்பை யறிந்த தாரணிதேவி, 'விதூஷகன் வார்த்தையிலும் பெருமையுளதோ' வென்று கணதாஸரிடஞ் சொல்லினாள்.

அதற்குக் கணதாஸர், 'தேவி! அரசனுடைய பழக்கத்தால் அவருக்கும் அறிவுண்டாயிருக்கலாம். 'பூவுடன் சேர்ந்த நாறும் மணம் பெறும்' என்னும் பழமொழி கேட்டிலிரோ' வென்றார். தேவியாரின் மனப்பான்மையை அறிந்த கௌசிகையார், 'நீர் சொல்லியதுண்மைதான். எத்துணை நாள்தான் கல்லானது தண்ணீருள் மூழ்கிக்கிடந்தாலும் மெல்லிய பதார்த்தமாகமாறுமோ? இன்று மாளவிகை செய்து காட்டிய அபிநயங்கள் சாத்திர விசாரணை செய்தவருக்கே இது பிசகு இது பிசகல்ல வென்று சொல்லுவதற்கு எட்டாதிருக்க, இவ்விதூஷகனா தப்பென்று சொல்லத் தகுதியுடையவன்? நன்றாகவிருக்கிறது உலகம். கட்டிய வீட்டிற்குக் குற்றங்கள் கூறுவதும் பாடிய செய்யுளில் அழகில்லை என்று சொல்லுவதும் இயற்கையே. ஆயின், மாளவிகை செய்து காட்டிய பாவனைகள் பொருத்தமுடையனவே. இல்லை

றத்தாற்கு ஏற்றத்தைக் கொடுக்க வல்லதே' என்று சொன்னார்.

அதன் பிறகு அரசனும் நடனத்தைச் சிறப்பித்துக் கூறினன். கணதாஸர் ஆனந்தமடைந்து, 'இன்றுதான் நான் கற்றதனாலாய பயனையடைந்தேன். சுடச் சுடச் சுடர் விட்டொளிருந் தங்கத்தைப் போலத்தங்கள் முன்னிலையில் விளங்கிய வித்தையே பரிசுத்தமான வித்தை' என்று கணதாஸர் சொன்னார். அப்பால், அரசன் விதூஷகரை நோக்கி, 'நீ இம்மாளவிகையின் நடனத்தில் கண்டு பிடித்த குற்ற மென்னையோ? கல்வியில் வல்லவரான கௌசிகை ஆமோதித்திருக்க, உன் போன்றவர்கள் குற்றம் கூறுவது அநீதமாகுமே என்று ஒன்றும் உணராதவன் போலக் கேட்டனன்.

விதூஷகன் அரசன் சொல்லிய வார்த்தையில் அதிருப்தியடைந்தவன் போல முகங்கறுத்து, 'என்னை இவ்வளவு கேவலமாக எண்ணல் வேண்டாம். கல்வி கற்றதினலேயே ஒருவர் பெருமையடையமாட்டார். கேள்வியும் அனுபவமுந்தான் கற்றலினுஞ் சிறப்புடையது; நானே சுமார் நாற்பது வருடகாலமாகத்தமது அவைக் களத்திலிருந்து அநேக வித்துவான்களின் ஞானத்தையும் கண்டு கேட்டு அவர்கள் பல்லைப் பிடித்துப் பார்த்திருக்கிறேன் எனக்குண்டாகிய திறமை இவ்வெளுத்த மயிரினையுடைய புலவருக்கில்லை என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். பணியாரச் சுவையுணராதவிவர் பாவனையின் சுவை

புணர்ந்தாரென்று சொல்லுவதை நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்' என்று எல்லாரும் நகைக் கும்படியாகச் சொல்லினன்.

கௌசிகை, விதூஷகன் சொல்லிய மாற்றங் கேட்டு முகங்கறுத்துத் தம்மிருக்கை விட்டெழீஇக் காவலனை நோக்கி, 'காவல! இத்துணை வரையில் நான் கொண்டிருந்த எண்ணம் வேறு, இன்று நான் அறிந்த குறிப்பு வேறு. உன் வஞ்சக நிலையறிந் தேன். இவ்வரங்கத்திற்கு நீயோ தலைவன் அல்லது யானோ தலைவன்; இவ்விதூஷகப் பேதையோ தலை வன்' என்று கடிந்து பேசினர். அரசன் கௌசிகை யாரின் கேள்விக்கு விடை கூற ஒன்றுந் தோன்று மல் தத்தளித்துக் கொண்டிருந்தான். அப்போது கௌசிகை அரசன் மௌனமாக விருப்பதை யறிந்து, 'ஹே! அரச! அம்மாளவிகையை நீ யாவ ளென்றுன்னினை? நன்று! நன்று! நின் மௌன விருதம். இன்னொருகால் அவளை அங்ஙனம் அவமதி யாக நினையேல். அது பற்றித் தீ வழி யொழுகேல். அம்மாளவிகை குற்றம் நிறைந்த நடனம் செய்தா ளென்றேற்படில், அப்போழ்து பார்த்துக் கோடலாம் என்றுருத்துப் பேசினர் கௌசிகையார். அது; கேட்ட காவலன் சிறிது புன்னகை புரிந்து "வடமொ ழிப் புலவீர்! நீர் மாளவிகையாள் நடனம் பிழையற் றதெனக் கூறுதலொழிமின். நம் விதூஷகன் கல் வியறிவில்லா விடினும் சாலவனுபவமுடையன்; அவன் கூறியதில் ஏதேனும் புதுமை யிருக்கும். எல் லாவற்றையும் ஆராய்ச்சி செய்த பின்னரன்றே

மெய்ம்மை வெளிப்படும் ? அவ்வாறு ஆராய்ச்சி செய்வதற்கு நம் விதூஷகன் வாய்மொழி யின்றியமையாதாமன்றே" என்று கூறி முடிக்கு முன்னே கௌசிகை, "அற்றேல் அவ்வாராய்ச்சிக் காலத்து மாளவிகையை மறுபடி இவண் கொண்டு வரலாம். அங்ஙனமிருப்ப அக்கற்பினளை சபைக்கு முன்னர் எதற்கு நிறுத்தி வைத்திருத்தல் வேண்டும் என்றனர். உடனே காவலன் "வடமொழி வாணரே அரங்கத்தில் குற்றமாக நடித்தவரை நீதி முறைநூல் அன்னணஞ் செறிக்கும்படி விதிபிருத்தலின் யான் அவ்வாறு நிற்கும்படிச் செய்தனன்; அது பற்றி விதூஷகனை வெகுளன்மின்" என்றனன். அது கேட்ட கௌசிகை நீதியையும், நீதி முறையையும், நீதிச் சாலையையும், நீதியந்தலைவனாகிய வரசரையும் தமக்குத் தோன்றியவாறு எல்லாம் இழித்துரைத்து வாய்க்கு வந்தவண்ணமாக வாய் நோவுங் காறுந் தெழித்தனர். காவலன் கௌசிகையின் வாய் வெளிப்பட்டனவனைத்தும், அறியாமையானெழுந்தன வென்றுணர்ந்தனனேனும், அவர் வரம்பு கடந்து சேறலைச் சிறிது அடக்குதல் கருதி கூறுவான். "கல்வி வல்ல கௌசிகையீர்! சற்றே யான் கூறுவதைச் செவிமடுத்தல் வேண்டும். நீர் மாளவிகையின் மாட்டுள்ள பக்ஷத்தால் இன்னணம் அரசமுறைக்கேற்ற வனைத்தையும் இழித்துப் பழித்துத் தெழித்து என்னையும் விதூஷகனையும் பெருவசைக் குள்ளாக்கினீர். நீரோ அரசனாணை இத்தனையதென்றறியீர்! உம்மால் நான் படைத்த புகழும் பெருமையும் சிறிது குறைந்தது. மன்னனாணை வழி

யொழுகு மெம்மனோர் கேட்கும்படி யிங்ஙனம் கூறியதி ைல் நீவிர் மாளவிகையைக் காட்டினும் நியாயமான குற்றவாளியாயினீர், மாளவிகையைப்போல அல்லா மல் இராஜத் துரோகியுமாயினீர். நீர் மெய்ம்மொழிப் புலவரென்ப துமக்கு உள்ளவாறே காரணங் கருதி யிட்ட பெயராயின் ஆராய்ச்சிக் காலங்காறும் அமைதி யுடனிருந்து, விதூஷகன் கூறியவற்றில் சீற்றங் கொள்ளாமலிருந்து ஆராய்மின். அப்பொழுது நுந் தம் நாவன்மையும் நடன சாத்திர வாராய்ச்சியின் சிறப்புங் காண்பல் எனலும், கௌசிகை, 'அரச! உன்னை யுலகம் நடுவு நிலைமை குன்றியவனென்று சொல்லவே நாவெழாது. நடுவு நிலைமையுடைய அர சன் ஒரு கண் சுண்ணும்பும் ஒரு கண் வெண்ணெயு மாகப் பாவிப்பானே? அங்ஙனஞ் செய்பவன் உல காளும் உரிமை நிலை பெற்று வாழ்வானே? ஈண்டு அர தத்தர் தம் மாணவிகளுடன் வந்துள்ளனரே. அவர் கல்வித் திறமறிய வொண்ணுவோ? அது அறிந்த பின்னரன்றோ இரண்டையுஞ் சீர்தூக்கிப் பார்க்க வியலும். அதன் பின்னரல்லவோ ஒரு தலை துணிந்து சொல்லமுடியும். உலகமும் ஒப்புக்கொள்ளும். அங் ஙனம் நீதியைப்பின்பற்றிச் செல்வாயல்லையேல் நீ யெந்தம் ஆற்றலை யெற்றுணரவல்லை. புரவலோய்!'' என்றனர்.

அக்கினிமித்திரன், 'அரதத்தரே! நீர் கற்றுக் கொடுத்திருக்கும் வித்தைகளை மாணவிகளாற் காட்டச் செய்யு மென்ருன். அப்பொழுது காலத்தைக் கணித் துரைக்குங் காவலன், 'அரசரேறே! நடுப்பகல் வேளை

வந்து விட்டது. அகிலலோகமும் ஆதித்தன் வெம்மை வஞ்சகர்களின் மனம்போலக் கொளுத்துகின்றது. அன்னப்பறவைகள் தாமரை இலையின்கீழ்த் தூங்குகின்றன. மாளிகைமேல் மாண்மையாய் வீற்றுலவும் புறாக்கள் வெப்பத்திற் காற்றுமல் மாடியிலிருந்து அயலிடஞ் செல்லுகின்றன. தண்ணீரிருக்குமிடத்தைத் தேடியோடித்தம் நாவறட்சியைத் தணித்துக் கொள்ள மயில்கள் நாடுகின்றன. மாடியின்மீது அருமையாக வளர்ந்து வந்த பூங்கொடிகளெல்லாம் கற்பிற் சிறந்த பெண்ணமுதங் காதலனைக் காணவிடத்து வாடுவதுபோல் வாடித்துவள்கின்றன. சூரியன், தங்கள் கியாதி பரவுவதுபோலத் தன் ஒளி வீசிப் பிரகாசிக்கின்றான்" என்று வருணித்தான். உடனே விதூஷகன், 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்பது போல உண்ணும் வேளை தப்பி விட்டதே. காலை விட்டுக் காலம் மாறியுண்டால் வைத்திய சாத்திர முணர்ந்தவர்கள் பல வகைப் பிணிக்கு மாளாகின்றேமெனச் சொல்லுகின்றார்களே என்று இடம் விட்டுப் பெயர்ந்தான். அரசன் அரதத்தரைப் பார்த்து, உமது கல்வித்திறமை அறிவது நாளையேயாகும் என்றான். அரங்கத்தில் வீற்றிருந்தவர்களுங் கலைந்தார்கள்; அரசனும் அரண்மனையையடைய வெழுந்தான். விதூஷகன் அப்போது அரசனை நோக்கி, 'அரசே! இம்மாளவிகை அழகில் மட்டும் சிறந்தவளென் றெண்ணல் வேண்டாம். கல்வியிலுஞ் சிறந்தவள்; பரதத்திலும் உவமையில்லாதவள்; கற்பிலும் கடினமான தீக்ஷையுள்ளவள்; இவளைத் தாரமாக வடைவது எளிமையான காரியமல்ல' வென்றான். அக்கினிமித்திரன், 'விதூஷகா! அப்

பாவையின் பாக்கியமே பாக்கியம்; அவளுக் கியற்கை யழகு மாத்திரம் அமைந்திருப்பதை யான் கொண்டாட வில்லை; அதுடன் கல்வியழகு மொருங்கே யமைந்திருப் பது மிக்க வாச்சரியத்தை விளைக்கின்றது. ஒருவர்க்கு அழகிருப்பதனால் பயனொன்றுமில்லை; அவ்வழகுங் கல்வியோடு கூடியிருந்தால் இம்மை மறுமை என்னு மிரண்டு விதமான பேற்றையுமளிக்குமென்று நீதி நூல்கள் முழங்குகின்றன. அதைக் கண்கூடாக இம் மாதரசியின் வயினே கண்டேன். அன்னதன்மை யினளாய விலக்கணங்களமைந்த வரிவையர் திலகத்தை யானடையவ் விருப்புற்றேன்; அதனிமித்தம் எவ்வகை முயற்சியாயினு மெடுத்துக் கொண்டு முடிவு செய்க வென்றனன்.

## மாளவிகையை மறைத்து வைத்தல்.

தாரணிதேவி தன் மணவாளனது மனோபாவத் தைப் பிறராலறிந்து, மாளவிகையை மனிதர்களுக்குக் கிலக்காகா வண்ணம் இருட்டறையில் மறைத்துக் காவற்படுத்தினள். அக்கினிமித்திரன் அன்னவளைக் காண வேண்டி, அரண்மனை முழுவதுந் துருவிப் பார்த் தான்; ஆயின், அம்மாதர் சிரோமணி அவன் கண் ணிற்குப் புலப்படவில்லை. அரசன் தான் அடைந்தி ருக்கும் பேரவாவினைப் பிறருடன் சொல்லுவதற்கு நாணி உள்ளத்தே வைத்துத் தேகம் மெலிவடைந் தான்.

இங்ஙனமிருக்க, ஒருநாள் இராணி இந்திராவதி யின் விருப்பத்தின்படியே அரசன் அடுத்ததொரு

நந்த வனத்திற்குச் சென்றான். அங்கே பலபறவைக் கணங்கள் இன்னிசை செய்து அரசனை வரவேற்பு கூறின. புஷ்பச் செடிகளில் விகஸித்திருக்கும் மலர் களெல்லாம் அவ்வரசன் பேரழகினைக் கண்டு கண்மல ரும் வனிதை வதனத்தை யொத்திருந்தன. அரசன் வரவினைக்கண்டு ஆனந்தத்துடன்எதிர்கொண்டழைக் கும் செல்வக் குடியினரைப்போலப் பல்வகைத் தருக் களும் தமது கிளைகளாகிய கையால் வீசி யழைத்தன. அங்கே வளர்ந்திருந்த பசும் புற்கள் அரசன் வரவி னைக் குறித்துப் பரப்பிய கம்பளம்போல மெத்தென் றிருந்தது. தன்னை யாளுமரசன் வந்துள்ளானே என்று விருந்துக் கழைப்பதுபோல வனதேவதை ஓடைகளிற் பெருகியோடும் தண்ணீரிலிருந்து காற்றா கிய கரங்களால் விசிறி கொண்டு வீசினாள். இப்படிப் பலவிதமான இன்பங்களை அனுபவித்துக்கொண்டு அரசன் தன் நண்பன் விதூஷகனுடன் வேடிக்கை யாக நந்தவனத்தில் உலாவித்திரிந்தான்.

இங்ஙனமிருக்க முன்பு தாரணீ தேவியாரால் மறைத்து வைக்கப்பட்டிருந்த மாளவிகை ஓடியாடி உலவாததினால், தனது தேகம் மிகவும் மெலிவடைந்து காலில் வலிகண்டு கலக்க மடைந்தாள். அவ்வலியின் காரணத்தை யுணர்ந்த தாரணீதேவி, 'குழந்தாய்! இது உன்போன்ற பேதைகளுக் குண்டாவ தியற் கையே! இதைப் போக்கிக்கொள்ள நீ மிக்க ஆயா சப்படவேண்டாம். இதோ நமது நந்தவனத்தில் ஆகாயத்தையளாவிப் பரந்துள்ள அசோக விருக்ஷத் தைக் காலால் உதைத்துவா; அது அவ்வுதைபட்ட

ஐந்து தினத்தில் பூத்துக் காய்க்கும். அதற்குத் *தோதகமென்று தொல்லை நூலோர் கூறுவர் என்றனள். மாளவிகை தன் எஜமானியின் சொல்லைச் சிரமாகப் பாவித்து அவ்வண்ணமே சோலைபுகுந்து, தான் கொண்டிருக்கும் எண்ணத்தைப் பிறருக்கு வெளிப்படுத்த நாணி, அரசனை நினைத்து வருந்தி, "அதிக அவாக்கொண்டால் நாம் விரும்புவது சித்தியாகுமா?" என்றுரைத்தாள். இவளது கண்ணிற்குப் புலப்படாமல் விதூஷகனு மரசனும் அநகாமையில் ஒளிந்து அவள் வாயினின்று வரும் வார்த்தைகளைக் கேட்டிருந்தார்கள். அப்போது தாதியான வகுளாவலிகை அங்கே தோதகத்திற்கு வேண்டுவனவாகிய சாமக்கிரியைகளைத் தட்டிற்றூங்கி வந்தாள். அவள் மாளவிகைக்குச் செய்யவேண்டிய அலங்காரங்களெல்லாஞ் செய்து காலுக்குச் சிகப்புப் பூசிவிடுத்தாள். அப்பொழுது அரசனைப் பிரிந்து வனசிங்காரத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டுவரச் சென்றிருந்த இராவதி அதே தோட்டத்தில் வேறொரு பக்கமாக வந்து கொண்டிருந்தாள்.

மாளவிகை அசோகத்தை யணுகி, 'அசோகமே! நீ அண்டினவர் அருந்துயரைப் போக்குவதனாற்றான் உனக்கு இந்தப் பெயர் வந்ததென்று காரணமாகக் கூறுகின்றனர். ஆகையால் நானும் உன்னை எனது துயர் நீக்கிக் கொள்ளும் வண்ணமே குறுகியுள்ளேன் என்னையும் வியனமற்றவளாக்க வேண்டும்,' என்று பிரார்த்தனை புரிந்து, தோதகஞ்செய்யத் தொடங்கி

* தோதகம் - வடநூலார் வழக்குப்படி அசோகம் பூக்கச்செய்தலாம்

ளுள். அவ்வமயம் பார்த்து அரசனும் விதூஷகனும் திடீரென அங்கே வந்தார்கள். மாளவிகை அவர்கள் வரவைக்கண்டு அச்சமும் நாணமுமடைந்து ஒருபுறமாகத் தலைகவிழ்ந்து நின்றனள். அரசன் மாளவிகையைப் பார்த்து, 'கல்வி மகளே! நீ இவ்வசோக விருக்ஷத்தைப் பூசிப்பதால் அடையும் பயனென்? முன்னிருந்தவர்கள் தெய்வத்தன்மை யுணராமல் கல்லையும் பாம்பையும் விருக்ஷத்தையும் தெய்வமென்று பாவித்துப் பரவி வந்தார்களெனப் பல சரித்திரங்கள் கூறுகின்றன. அதுபோலவே நாகரீகத்தினை உணர்ந்த நீயும் இம்மரத்தை வழுத்துகின்றனையே. இதென்ன வறியாமை? அன்பென்பது ஆறறி வுடையாருக்கு இயற்கையன்றோ' வென்று குறிப்புரையாடினன். இராவதியும் அங்கு வந்து, 'அவ்வண்ண மிருப்பதுதான் தகுதி; அதற்கும் 'பாத்திர மறிந்துதானே பிச்சையிடவேண்டு' மெனச் சினந்து பகர்ந்தாள். மாளவிகை இதென்ன ஆபத்திலகப்பட்டுக்கொண்டோமே என்று பயந்து அவ்விடத்தை விட்டுத் தன்னைப் பிறர் தெரிந்து கொள்ளாவண்ணம் ஓடி மறைந்தாள். இராவதியும் மிகவும் கோபமாக முகப்பொலி வழிந்து கறுத்து அரண்மனைக்குத் திரும்பினுள். ஆயின், இராவதியின் மனம் ஒரு நிலைப்படவில்லை. அவள் இடை வழியில் அரசன் முயற்சியையுந் தந்திரத்தையும் எண்ணி யெண்ணி மனம் புழுங்கிக் கொண்டே அரண்மனையினுட்புகுந்தாள்.

### மாளவிகையயடைதல்

இராவதி அரண்மனையடைந்து, தாரணீ தேவியினிடம் நடந்த விருத்தாந்தங்கள் யாவையும் எடுத்துக்

கூறினள். அதன் மேல் வகுளாவலிகையையும் மாளவிகையையும் ஒருவரும் அறிந்து கொள்ளாதபடிச் சிறைக்காவலில் வைத்து, ஆங்குள்ள சேவகர்களை நோக்கி, 'நீவிர் எவரேனுஞ்சரி, என்கணையாழியைக் காண்பித்தால் அல்லாமல், இவர்களை வெளியில் விடக்கூடா' தென்று கட்டளையிட்டாள். அதன் பின் மாளவிகை வேடன் வலைப்பட்ட மானைப் போலச் சிறைக்காவலில் அகப்பட்டுத் துன்பத்தாற்றுடித்துக் கொண்டிருந்தாள்.

இவ்வாறிருக்கையில் அரசன் அவள் கால் வலி எவ்வாறிருக்கின்றதென்பதைத் தெரிந்து கொள்ள விரும்பி அந்தப்புரம் போயினன். விதூஷகன், அரசன் தன்னுடன் செய்திருந்த சூழ்ச்சியை மனதில் எண்ணி, மறுபடியும் மாளவிகையை அரசன் காணும் படியாகச் செய்யவேண்டுமென்று, அரசன் முன்னிலையில் ஓடோடியும் வந்து, "நின் தேவியைக் காண வருவதற்குக் காணிக்கையாக அசோக மொட்டுகளை எடுக்கச்சென்றேன். ஆங்கு என்னையுமறியாமல் காளகோடி விடந்தீண்டி விட்டதே," என்று கதறிக் கொண்டு பூமியில் விழுந்தான்.

அங்கு வீற்றிருந்த கௌசிகை, 'விஷம் தீண்டினல் மாண்டு விட மாட்டாய். வீணே அதைரியமடையாதே. தீண்டின விடத்தை அறுத்தப்பாற்போடு, இல்லையேல் அந்தவிடத்தை அக்கினியால் சுட்டுப் போடெனச் சொல்லினள். அவ்வார்த்தையில் சிறிதும் நம்பிக்கை கொள்ளாத விதூஷகன், 'அரசே! உம்

மையே நம்பியிருக்குமென்னை இறந்துபடும்படி விட்டிடலாமோ' வென்று கண்ணீருகுத்தான். அது கண்ட வரசன் துருவ சக்தி யென்னும் வைத்தியரிடம் அவனைக் 'கொண்டுபோய் விடும்படியாகக் கட்டளையிட்டான். விதூஷகன் வெளியில் கொண்டுபோகப் பட்டவுடனே விஷவைத்தியன், "நல்லது இவனை இங்கே கிடத்தி விடுங்கள். இப்பொழுதுதான் விடங் கொஞ்சம் கொஞ்சமாகமேல் நோக்கிச் செல்லத் தலைப்பட்டிருக்கின்றது. இன்னும் ஒருமணி காலஞ் சென்றால் இவன் பிழைப்பது ஈசனுக்குத்தான் வெளிச்சம். இவன் இறந்தால் அரசனுக்குத்தான் கஷ்டம், மற்றவர்கள் இவனைப்பற்றி அவ்வளவு இரங்கார்கள். நீங்கள் வீணாக இங்குபேசிக் கொண்டிருப்பதினால் பயனொன்றுமில்லை; உங்களில் எவனாவதொருவன் விரைவாகச் சென்று, 'சர்ப்பமுத்திரையுடன் கூடிய ஏதாவது கொண்டுவரச் செய்யுங்கள்' " என்று வந்த சேவகர்களிலொருவனை அனுப்பினான். இராணி தன் கணையாழியின் பேரில் சர்ப்பவுருவம் பொறித்திருப்பதால், அதை யனுப்பினாள். அதன் மேல் விதூஷகன் சர்ப்பவிடம் நீங்கி யுயிர்பெற்றெழுந்தானென்னுஞ் செய்தியும் வந்தது. அரசன் தன் நண்பன் உயிர் பெற்றெழுந்ததைக் குறித்து ஆனந்தமடைந்திருந்தான்.

மறுநாள் பொழுது புலர்ந்தவுடனே அக்கினிமித்திரன் காலைக்கடன் கழித்து நித்தம் போல் நந்தவனத்தைச் சார்ந்தான். அங்கு விதூஷகனும் வந்து கூடினான். பின்பு இருவருஞ் சிறிது நேரம் வரையில்

உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது விதூஷகன், 'அரசே! நான் நேற்றைய தினஞ் செய்த தந்திரத்தால் இராணியின் கணையாழியைப் பெற்றுச் சிறைக்குளிருந்த மாளவிகையை வெளிக்கொண்டு வந்து விட்டேன். அப்படி வெளிக்கொண்டு வருகையில் சிறைக்காவல் புரிந்துவரும் மாளவிகை என்னைப் பார்த்து, 'எக்காரணத்தால் இன்று மாளவிகை விடுதலை செய்யப்பட்டா'ளென வினவினள்; அதற்கு நான் அரசன் பிறந்த தினத்தில் பீடை இருப்பதாகக் கணியாளர் மொழிந்து, சிறைக் காவலிலிருப்பவர்களை விடுவிக்கும்படியாகக் கட்டளையாயிற்றென்று சொல்லி ஏமாற்றஞ் செய்து வந்தேன்' என்றான்.

அவ்விதூஷகன் சாதுரியமாகச் செய்த காரியத்தை அரசன் மிகவுங் கொண்டாடினன்; 'உன்னைப்போல என்னிடம் உண்மையான அன்பு பாராட்டுபவர்களுமில்லை; நீயே எனக்கு இன்னுயிரினுஞ் சிறந்தவ'னென்று போற்றினன். பின்பு இருவரும் மாளவிகை இருக்கும் இடத்தினுக் கருகில் ஒளிந்திருந்தார்கள். மாளவிகை ஆங்கு தொங்கிக் கொண்டிருக்கும் அரசன் திருவுருவத்தைக் கண்டு, அருகிலிருக்கும் வகுளாவலிகையை நோக்கி, "அரசன் கண்ணோட்டம் அருகிலிருக்கும் சித்திரத்தில் அமைந்து கிடக்கின்றதே" யென்றாள். வகுளாவலிகை, 'என்ன பைத்தியம் பிடித்தவள்போல உளறுகின்றனையே. அச்சித்திரந்தான் நமது அன்னையாகிய இராவதி அம்மை

யார். அவரென்ன நம்மைப்போலச் சாமான்யமான வரா? அவரல்லவோ இப்போது நாம் போற்றிவரும் இராணியாக விருப்பவ'ரென்ருள். உடனே மாளவிகையின் முகம் வேறுபட்டது. பொருமைக் குணம் பொறுக்கென வெழுந்தது. அத்தருணத்தில் ஒளிந்திருந்தவரசன் மாளவிகையின் முன்னர் தோன்றி அவள் முகம் விகஸிக்கும்படியாதச் செய்தான். அதற்குள் இராவதியும் நிபுணியும் அங்கே வந்தார்கள். விதூஷகன் தன்னை மறந்து தரையிற் செத்த பிணம்போல மெத்த வுறங்கிக் கிடந்தான். இராவதி அரசனையும் மாளவிகையையும் பார்த்துச் சிறிது கடுமையான சொல்லைச் சொல்ல எத்தனித்தாள். அதற்குள், ஒரு தாதி ஓடிவந்து, அம்மணீ! வசுலக்குமி குரங்கினல் பயந்து தன்னை மறந்தாளென்று முறையிட்டாள். இராவதி அரசனை அங்கு செல்லும் வண்ணம் வேண்டிக்கொண்டனள். அவன் அவ்வாறே செல்ல, இராவதி வகுளாவலிகையும் மாளவிகையும் பார்த்து, 'என்ன நீங்கள் செய்யும் காரியம் தரும விருத்தமாக விருக்கின்றதே. தேவியின் கட்டளையை மீறி நடந்தால் பின்பு ஆபத்தாக முடியுமே. அதை நினைக்க நினைக்க என் மனந் துடிக்கின்றதே' யென்று மெல்லிய குரலாற் சொல்லினள். உடனே நந்தனவனத்தைக் காத்துவரும் தேவதை அசரீரியாய், 'இராவதி, நன்று கூறினை. ஐந்து நாட்களுக் குள்ளாகவே அசோகம் பூக்களை ஈன்றதே' என்று உரத்த குரலுடன் சொல்லிக்கொண்டு தேவியினிடஞ் சென்ருள். மாளவிகையும் வகுளாவலிகையும் அன்னவளைப் பின்படர்ந்து சென்ருள்.

மாளவிகையின் கடிமணத் திருவிழா.

தாரணீதேவி தன்னிடம் வனதேவதை சகிதம் வந்த வகுளாவலிகையும் மாளவிகையும் மனமுருகும் படியாகக் கண்டு களிகூர்ந்து ஆசீர்வதித்தாள். மாளவிகையின் வித்துவச் சம்பத்தைச் சொல்லிச் சொல்லி யகமகிழ்ந்தாள். இதற்குள் சேனைத் தலைவனை வீரசேனன் விதர்ப்பதேயத் தரசனை வெற்றியடைந்து மாதவசேனனைச் சிறையிலிருந்து விடுவித்ததை அக்கினிமித்திரனுக் கறிவித்தான். தாரணிதேவி பூத்த அசோகமரத்தைப் பார்த்து வரும்படி அரசனை அங்குயனுப்பியிருந்தாள். அன்று மாளவிகை பூர்ணசந்திரன் பொலிவினையும் பின்னடையும் படியாகப் புதிய தொரு பிரகாசத்துடன் பல்வகை யாபரணங்கள் பணிசெய்ய விளங்கினாள். தேவியே வீரசேனன் அக்கினிமித்திரனுக்கு அனுப்புவித்திருந்த திருமுகத்தைக் கண்டு ஆனந்தத்துடனிருந்தாள். பின்னர் சற்று பொழுதையுல்லாஸமாகக் கழிக்கலாமென்று இருவரும் நந்தவனத்தை நாடினார்கள். ஆங்கு விதர்ப்ப நாட்டுப்பெண்களிருவர் கையில் வீணையை வைத்துக் கொண்டு விந்தையாகப் பாடிக் கொண்டே அவ்விடம் வந்தார்கள். அவர்களிருவரும் மாளவிகையைக் கண் கொட்டாமற் சிறிது நேரங் கவனித்து விட்டுப் பின்பு, “இவள் நம்முடைய அரசன் குமாரியல்லவா?” என்று தமது கண்களிற் றண்ணீரை அருவி போற் பெருக்கினார்கள். அரசன் அம்மாதர்களை நோக்கி, ‘மாதர்காள்! நீவிர் எத்தேயத்தவர்? எக்காரணத்தால் கண்ணீர் விடுகின்றீர்கள்?

என்று வினவினான். அதற்கவர்கள், "அரசே! இவள் மாதவசேனன் அருமைச் சகோதரி. விதர்ப்ப தேசத் தரசன் அவனைச் சிறைக் குட்படுத்திய போது, அமைச்சனாகிய சுமதி என்பவன் இவளை அவ்விடம் விட்டு அழைத்துக் கொண்டு போயினான். அதன் பிறகு என்ன நடந்ததோ அது ஈசனுக்குத்தான் தெரியு'மென்று சொன்னார்கள். அப்பொழுது கௌசிகை, "பின்னர் நடந்தவற்றை யெல்லாம் நான் ஒளிக்காமல் சொல்லுகிறேன். நான் அவர் களின் இரத்த சம்பந்த முடையவள்தான். அச்சுமதி எனக்கு உடன் பிறந்தவனேயாகும். அவன் என்னையும் மாளவிகையையும் அழைத்துக் கொண்டு வரும்போது இடைவழியில் கள்வர்களால் எதிர்க்கப் பட்டு எமனுலகஞ்சார்ந்தான். இம்மாளவிகை வீர சேனனால் வித்தை கற்றுக் கொள்ளுவதற்காக இங்கே அனுப்பப்பட்டாளென்பதைச் சிறிது காலத் திற்கு முன்புதான் நான் அறிந்தேன். நான் எனது பெருந்துயரை என்ன வென்றெடுத் துரைப்பேன்? எனது இளமைப் பருவத்திலேயே நாயகனை இழந் தேன். அதன் பின்பு என்னருமைச் சகோதரனை யும் கள்வர் வாயிலிட்டேன். இவ்விரண்டு சம்பவங் களும் உண்டாயின பின்னரே, எனக்கு இவ்வுலக வின்பத்தில் வெறுப்புண்டாயிற்று. அன்றே நான் என்னுயிரை இழந்துவிடத் துணிந்தேன். பின்னர் அது சரியல்லவென்று அறநெறியை மதித்து இத்துற வினை மேற்கொண்டேன் என்று தனது பூர்வ விருத் தாந்தத்தைக் கூறினாள்.

அரசன் அவ்வியன மொழிகளைக்கேட்டுக் கலங்கி இதெல்லாம் ஒருவரால் செய்யக் கூடியதல்ல. ஆகக் கூடியதுமல்ல. முன்னம் ஒருவன் செய்து வைத்தி, ருக்கும் புண்ணிய பாவங்களுக்குத் தக்க வண்ணமே மறுபிறப்பில் அனுபவிக்கும்படி அயன் அளந்து தான் வைக்கின்றான். இருளன் அரசனாக வேண்டு மென்றாலும் பூர்வ சுகிருதமில்லாமல் ஆவதில்லை. அரசன் அதமனாகவேண்டுமென்றாலும் பழைய தீவினை யில்லாமல் ஆவதில்லை. எல்லாம் அவரவர்கள் செய்த வினையின்படிதான் தோன்றும் என்று அவளைத் தேற்றித் தேவியாக விருக்கவேண்டிய இந்த மாள விகை வேலைக்காரியாக விருக்கவும் நேர்ந்த தல்லவா? தங்கத்தையா தலைக்கடையில் போடுவது? மாணிக்கத் தையா மறைவில் சூட்டுவது? வெண்பட்டாடையையா வாய்துடைக்க வைத்துக் கொள்ளுவது?" என்று காலகதியைக் கண்டிரங்குவான் போலக் கூறினான். அப்புறம் தாரணீதேவி கௌசிகையை நோக்கி, தாங்கள் எல்லா மறிந்தவராக விருந்தும் இப்படி யுண்மை யை யுரையாமல் ஒளித்து வைத்துக் கொண்டிருந்தீரே இது அறநெறியாகுமா வென்று அகம்நொந்து சொன்னாள். அதற்குக் கௌசிகை "இம்மாதரசியின் இராசிச் சக்கரத்தை நான் இரண்டு மூன்று தடவை களில் நன்றாய்ப் பார்த்திருக்கின்றேன்; அதில் இம் மாதர் சிரோமணி ஒரு வருஷம் வேலைக்காரியாக இருக்க கிரகரீதி இருந்ததால் நான் சும்மாவிருந்து விட்டேன். ஆயின், அவள் உன்னிடத்திலேயே இருக்கவேண்டும் என்று எண்ணித்தான் நம்மிடம் அடைக்கலம் புகுத்தியது. அவ்வனிதாரத்தினத்திற்கு

இன்னுஞ் சிறிது காலத்தில் வாழ்வுண்டா மென்னும் நிச்சயம் எனக் கெப்பொழுது முண்டென்ருள். உடனே அக்கினிமித்திரனுக் குண்டான வாசைக்குக் கரையேயில்லை. அவன் முன்பிறப்பிற் செய்த புண்ணியம் அன்று தான் வந்து லபித்ததென்று "எண்ணினன். விதர்ப்ப நாட்டை யக்ஞசேன வரசனுக்கும் அவனுடைய இளையனகிய மாதவ சேனனுக்கும் பகுத்துக் கொடுக்கும் வண்ணம் தன் அமைச்சனுக் கறிவித்தான்.

அப்போது அக்கினிமித்திரன் தந்தையார் அசுவமேதம் செய்து அரும்பெயரடைய வேண்டித் தன் பேரன் வசுமித்திரனை அரசர்கள்மேற் போக்கினன். அவ்வசுமித்திரன் பிறவரசர்களின் மேற் போர்த்தொடுத்துப் பெரும்பொருளைத் திரட்டித் தன் மூதாதையின் முன்னர் கொண்டுவந்து வைத்தான். அது கண்ட புஷ்பமித்திரன், எனது பாக்கியத்தை என்னவென்றெடுத்துரைப்பேன்? காவலர்களெல்லாம் காற்றிற்பட்ட பஞ்சு போலப் பறக்கடித்து வந்திருக்கும் இவ்வசுமித்திரன் யானைக்குப் பிறந்த சிங்கமல்லவோ வென்று கொண்டாடி, அக்கினிமித்திரனுக்குச் சொல்லி யனுப்பினன். உடனே அரசன் அகம் பூரித்து யக்ஞசேனனுடைய மைத்துனனையும் சிறைச் சாலையிலிருந்து விடுவித்தான். விதிசா நகரமும் ஒரு நாளும் இல்லாத பெருமகிழ்ச்கியை யடைந்தது. ஊரெங்கும் மங்கள வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தன. ஒவ்வொரு நாளும் பகைவருக் குடைந்த பார்த்திவன் மனம்போலக் கொதித்தெழுந்

தது கதிரவன் கிரணங்களை. என்று மில்லாமல் அன்று மேகத்தால் இடையிடையே மறைக்கப்பட்டு வெம்மையுங் குளிர்ச்சியும் விரித்துப் பரப்பினன். இவ்வளவு வைபவங்களையுங் கண்ட தாரணீதேவி மனம் பூரித்தது. உடனே அவள் தன் பக்கத்தில் இலக்குமியைப் போல் நின்று கொண்டிருக்கும் மாளவிகையைப் பார்த்து, ஞான மணிவிளக்கே! உனது குணத்திற்குங் குலத்திற்குங் குறை கூறுபவர்கள் இக் குவலயத்தில் யாவரேனுமுளரோ? நீ அல்லவா பெண்களில் நாயகம், பெற்றோருக் கருங்கலம், நடனத்தில் நவமணி. நீ நாடகமே உருவெடுத்து வந்த நங்கையற் றலைவியென்று வாழ்த்தி, அவையோர்கள் அதிசயிக்க அகங்குளிர்ந்து முகம் மலர்ந்து அருட் கண்ணீர் மடைதிறந்து பெருக்கி அரசனுக்கு அன்னவளை மணம்புரிவித்து மகிழ்ச்சி யடைந்தாள். அப்பால், மாளவிகையையும் அக்கினிமித்திரனும் அணியுலகம் அகம்பூரிக்க, இல்லற தருமம் இழுக்கா வண்ணம் இன்பத்துடன் ஆண்டு வாழ்ந்து வந்தார்கள்.

---

## சகுந்தலா.

### சகுந்தலையைக் காணல்.

ஒருநாள் நடுயாமத்தில் அத்தினபுரிக்கு அருகாமையில் ஓடும் மாலினி ஆற்றிற் கருகாமையிலுள்ள செறிந்த காட்டில் இருவர் மிக்க விரைவாகப் போய்க் கொண்டிருந்தனர். இருவருள் ஒருவர் வெளுத்துத்

திரைத்த மேனியும், முப்புரி தரித்த மார்பும், அடர்ந்து நீண்டு தொங்குந் தாடியு முள்ளவர். வயது ஐம் பத்தைந்து அல்லது அறுபதுக்கு மேலிருக்கும். மற் றொருவருக்கு வயது முப்பதிருக்கலாம். பார்வைக்கு அவர் உயர்குடிப்பிறந்த வுத்தமராகவே தோன்றி னர். ஆனல் அவரது உருவவமைப்பு அனைவரையுங் கவரக்கூடியதாகவே யிருந்தது; அவர்நெடிய உருவ மும், சிவந்தமேனியும். கறுத்து முருக்கிய மீசையும், கடைசல் பிடித்துச் சேர்த்து வைத்ததுபோல அழ கிய அவயவங்களு முடையவர் ; கம்பீரமான தோற்ற மும் வலியமைந்த தேககாந்தியு முள்ளவர்; காலிற் றொடுதோலும் காதிற் குண்டலமும், கரத்திற் கணை யாழியு மணிந்திருந்தார்; தலையில் தளதள வென்னுஞ் சோபையைக் கொடுக்கிற தங்க முடியும், மேலே வெண்பட்டங்கியும், முதுகில் அம்பறாத்தூணியும், தோளில் வில்லும் விளங்கின; இடையில் ஒரு பொற் கத்தி தொங்க வலது கரத்தில் உடைவாளொன்று ஒளி செய்து கொண்டிருந்தது; முகத்திலிருந்து முத்து முத்தாகத் துளிக்கும் வியர்வையும், தளர்ந்து மெலிந்த நடையும், சுருங்கித் துவண்ட கண்களும், அவர் களைத்திருப்பதைக் காட்டா நின்றன. இப் பொழுது எதிரிற்றோன்றுங் காட்சியைக் காண அவ ரின் முககமலங்கள் மலர்ந்தன. மாலினி நதிக் கரையோ விருபக்கத்திலும் வானதியிற் பூத்திருக்கு முடுக்குலத்தினைப் போல இருபக்கமும் நானுவிதமான செடி கொடிகளடர்ந்து பூத்திருந்தன. மான் கூட் டங்கள் துள்ளி விளையாடியும், மேய்ந்துகொண்டு மிருந்தன. சல சல வென்னுஞ் சப்தத்துடன் தெள்

வரிய நீரோட, அதன்கண் நீர்க்காகம், சக்கரவா கம், சாரசம் முதலிய நீர்வாழ்ப் புள்ளினங்கள் நீந்தி விளையாடிக்கொண்டிருந்தன. மேலே பச்சிலை தெரியாமல் மலர்களால் நிறைந்தோங்கி வளர்ந்தும், காய் கனிகளின் பொறையாற் றூங்கமாட்டாது தலை வணங்கித் தாழ்ந்துமுள்ள அநேக நன்மரங்களும், கீழே பசுமையாகக் காணப்பட்டுப் பஞ்சணையைப்போல வுள்ளங்காற்கும் மென்மையான பலவகைப் புற்களுஞ் செறிந்து, தென்றல் சில்லென்று மெல்ல வீசி இன்பத்தைத் தந்தன். பற்பல பூக்களுதிர்ந்து இரத்தினக் கம்பளம் விரித்தாற்போலத் தோன்றி எங்கும் நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. கும்பல் கும்லாகக் கூடிக் குரங்கினங்கள் அங்கு மிங்குந் தாவித் தாவிக் குதித்தோடின. கள்ளுண்ட வண்டினங்கள் களி கொண்டு ரீங்காரஞ் செய்துகொண்டிருந்தன. பலவகையதான நிறங்களையுடைய பூச்சிகள் மிகவும் விந்தையாகச் சிறைவிரித்துப் பறந்தன.

இங்ஙனம் விந்தையாக வுள்ள வமைப்பை யெல்லாம் அவ்வாலிபப் பருவம் நீங்காத வள்ளல் சுற்றிப் பார்த்துப் பெரியவரைநோக்கி, 'ஐயரே! நாம் முனிவர் வதிதரும் குடிலண்டையில் வந்தோம். இதோ பாரும், நம் வரவினைக் கண்டும் அஞ்சாது அசையாது அம் மான்கள் மேய்கின்றன. இந்தக் கிள்ளைகள் தம் பிள்ளைகட்கு எவ்வளவு அன்புடன் இரை தேடிவந்து ஊட்டுகின்றன. இக்குளக்கரையில் ஆங்காங்கே குசப் புற்கள் இறைந்தும், அதோ நம்மெதிரில் ஆகாயத்தினை யளாவி நிற்கும் மரங்கள் ஹோமப் புகையாற்

சூழப்பட்டுங் காண்கின்றன' என்று கூறினர். பெரிய வர் ஒன்றுந் தெரியாதவர்போலச் சற்று நிதானித் துப் பின்னர், "ஆம், ஆம், அரசர் திலகமே" என்ற னர்.

கொஞ்சதூரஞ் சென்றதும் ஒரு குடிசை அவர் களுக்குக் காணப்பட்டது. அரசகுமாரன் அந்தணரை ஆங்கு ஓரிடத்தில் நிறுத்திவிட்டுத் தாம்மட்டும் தனியே அக்குடிசையினருகாமையிற் சென்று பார்த் தான். அப்பொழுது அங்கே ஒருவருங் காணப் படாததால், "யார் இங்கே?' என்று உரத்துக் கூவி ஞன். உடனே பதினறு வயது முதிர்ந்த வொரு பெண்பாவை வெளியே வந்தாள். அவள் மரப்பட் டையையே அணியு மாடையாகவும் மலர்களையே பூணும் பூஷணங்களாகவு மணிந்திருந்தாள். அவள் அரசனுக்கு மிகவும் மரியாதையுடன் ஆதனமளித்து, அவரது ஆணையை எதிர் நோக்கா நின்ருள். அரசன், "அம்மா, முனிச்சிரேஷ்டராகிய கண்ணுவ முனி வரைக் கண்டு கைதொழ விரும்பி வந்தேன். அவ ரெங்க கன்றனரோ?" என்று வினவினர். அப்பெண் "ஐயா அவர் காய்கனிகள் கொண்டுவரும் நிமித்த மாகக் கானகத்துள் சென்றுள்ளார். நீர் சற்றுப் பொறுத்திருப்பின் அவரைக் காணலாம்." என்று தனது மெல்லிய குரலாற் குயிலைப்போல விடை இறுத்தனள். அரசன் அவ்வனிதா ரத்னத்தை அடிமுதல் முடிவரையி லுற்றுப் பார்க்கலாயினன். அவள் அழகிய திருமுகமும், சுருள் படிந்து படிப்படி யாக விருக்கும் மயிரும், கறுத்து நீண்ட கண்களும்-

சிறுத்து துவண்ட இடையு முடையவள். வெள்ளிய முத்துக்களனைய முறுவலும், அப்பற்களை மறைத்து விளங்கும் பவளமன்ன விதழ்களும், குமிழம் பூவை யொத்த நாசியும், கமலங்களெனச் சிவந்த கன்னங் களும் எடுத்துப் புகலுந் தரமுடைத்தன்று. அன்று பூத்தலர்ந்த பதுமமலர்கள் அப்பாவையின் கருங்கூந் தலை அழகு செய்தன. அவற்றுடன் அவளது மதுர மான வார்த்தையையும், வணக்கமுள்ள பெருமித நடையும், மரப்பட்டையாலாகிய வாடையும் அவள் அழ கிற்கு அழகு செய்வதாக விருந்தன. அங்குள்ள வன்னப் பறவைகள் அவள் நடைகண்டு அழிந்து அப் பாலிரிவதாயின. மான்கள் மருண்டு மருண்டு தன் னினத்தை நோக்கியோடும். பறவைகளெல்லாம் அவ்வழகு கண்டு ஆனந்திப்பதுபோல அங்குமிங்கும் பறந்து விளையாடிக் கொண்டிருந்தன.

அரசன், அப்பெண்ணரசியைத் திரும்பவும், "பெண்ணே! நீ யார்? உனது தந்தை யாவர்? கந்த மூலாதிகளைத் தின்று தவசிகளுடன் கூடிக் காலங்கழிப்பதன் காரண மென்னையோ? உனது உண்மைச் சரிதத்தை யுள்ளபடியறிய எனக்கு ஆவ லுண்டாகின்றது" என்றான். அப்பெண்ணருங்க லம், "ஐயா, யான் கண்ணுவ முனிவரின் குமரி, என்னைச் சகுந்தலை யென்பார்கள்" என்று சொல்ல அரசன் ஆச்சரியமடைந்து தனது நாசியின் மீமிசை சுட்டுவிரல் வைத்து, "என்ன விந்தை! முனிவரோ உலகப்பற்றை முழுவதும் ஒழித்தவர்; ஐம்பொறிகளை யும் அடக்கியவர்; இந்திரிய நிக்கிரகஞ் செய்தவர். அம்

முனிபுங்கவருக்கு நீ மகளானதெவ்வாறு? வடிவத்தால் தவப்பெண்ணைகக் காணவில்லையே! நீ கூறும் வார்த்தையில் ஏதோ சூதிருக்கவேண்டும்; சொல்லுபவர்கள் சொன்னாலும் கேட்பவர்களுக்குப் புத்தியில்லையா" வென்று கூறும் பழமொழியைப்போல என்னையும் பயித்தியக்காரனைக மதித்துச் சொல்லினையே" என்ருன்.

## சகுந்தலை கடிமணம்

சகுந்தலை மன்னவனை நோக்கி, "ஐயா, ஒருகால் என்னருமைத் தந்தையார் தம்மைக் காணவேண்டி வந்த ஒரு முனிவரிடம் என் பழம் பிறப்பின் வரலாற்றை யெடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தார். நானும் அவ்வமயம் அருகாமையில் இருந்தேன். நான் கேட்ட வண்ணமே இன்று தங்கட்குத் தெரிவிக்கின்றேன்.

அனைத்துலகும் அருமையாகக் கொண்டாடு மரசகுலத்திலவதரித்தும் அருமையான தவத்தால் "அந்தணர்க்கும் அரிய விசுவாமித்திரரைத் தாங்கள் தெரிந்து மறிந்து மிருக்கலாம். அவர் அகில வுலகினுக்கு மச்சாணியாக விமயச் சாரலில் தவஞ் செய்து கொண்டிருக்க, அவர் செய்யுந் தபத்தின்மீது பொருமை கொண்ட விந்திரன், அவரது தவத்தைக் கெடுக்க வெண்ணி, தேவதாஸிகளில் ஒருத்தியும், திருமாலின் ஊருவிற் பிறந்து ஒப்பற்ற அழகுள்ளவளுமாகிய மேனகையை யனுப்பினர். முனிவர் தம்மறிவழிந்து தவங்கலைந்து மேனகையின் மாட்டுக் காதல்

கொண்டார். பின்னர் முனிவருக்குத் தெளிவு பிறந்து தம் தவமானது அவமாயிற்றென்று வருந்தி, மேனகையை வெறுத்து வேறிடஞ் சென்றார். அம் மேனகைக்கு ஒரு பெண் மகவுதித்தது. அவள், தான் பெற்றெடுத்த குழவியைக் காணின் முனிவர் பிரானுக்கு முன்புபோலப் பேரன்பு பெருகு மென் றுன்னி, அதனைக் கையிலேந்தி அவரிருக்கு மிடந் தேடிப் போய், அவர் கண்ணிற்குக் காட்சியாகும் படிக் கிடத்தினாள். முனிவரோ அக்குழந்தையைப் பார்த்ததும் தம் கண் சிவக்கக் கோபித்து, மேன கையைக் கடிந்து திட்டிப் பயமுறுத்தித் தம் கண் களை மூடி யோகத்தில் அமர்ந்தார். மேனகை துக் கத்தால் துடித்து துன்பத்தால் மனமெலிந்து வேறொன்றுஞ் செய்யத் தெரியாமல், குழந்தை தனியே கிடந்து அழுதால் அதன் திருமுகத்தைக் கண்டாயினும் முனிவருள்ளங் கரையுமென்றெண்ணி, அதனை அங்கேயே கிடத்திப் போயினாள். ஆயினும், முனிவரோ மூடின கண்களைத் திறவாமல் தியானத் திலேயே இருந்தனர். இரக்கமென்பதை அவர் எள்ளளவும் கொண்டிலர். குழந்தை தரையின்மீதே கிடந்து அழுதுகொண்டிருக்க, சகுந்தலைப்பக்ஷிகள் மேலே நின்று அதன்மீது கதிரவன் கிரணம் படா மற் காத்தன. தெய்வகதியாக அவ்வழியே ஆற்றில் நீராடிவந்த கண்ணுவ முனிவருக்குத் தென்பட, அவர் அக்குழந்தையை எடுத்துத் தன் குடிசைக்குக் கொண்டுபோய் வளர்த்து வந்தார். கழுகுகள் காவல் புரிந்து வந்தமையினால் அப்பெண்ணிற்குச் சகுந்தலை யென்னும் நாமகரணமுண்டாயிற்று. அப்

பெயர் வாய்ந்தவள் நான். நான் இக்கண்ணுவ முனிவருக்கு மகள் முறையாயினதிதுவே. என்னைப் பெற்றெடுத்தவர் எவரென்றும் என் உறவின் முறையார் யாவரென்றும் அறியாமல், கண்ணுவரையே நாளதுவரையில் தந்தையாகவும், இக்கானகத்துச் செழித்துத் தழைத்துப்புகைந்து படர்ந்திருக்குஞ் செடிகளையே சேடியராகவும் மதித்துப் பழகி வருகின்றேன் '' என்றாள்.

அரசன் சற்றேனும் வாய்திறவாமல் சகுந்தலையை உற்று நோக்கிப் பார்த்துக்கொண்டே இமையவர் தன்மையை யடைந்தான். அவள் வாயிலிருந்து வெளிவரும் சொற்களைச் செவிசாய்த்துக் கேட்டு என்றும் அறிந்திராத ஓர் பேரானந்தத்தை யனுபவிப்பவனாயினன். அவ்வளவு பேரழகு வாய்ந்த மாதர் சிரோமணியின் குணத்தைக் கண்டு கண்டு மகிழ்ந்தான். உடனே அவள்மேல் ஆசை எழுந்தது. எவ்வாறாயினும் நாம் மணம்புரிய வேண்டுமென்னும் ஆவல் அவனுக்குண்டாயிற்று. சகுந்தலை, முனிவர் மகள் என்றதுபோய், அரசபுத்திரியெனக் கண்டான். ஆதலால், அவளிடத்து அவன் ஆசை கொள்ளுவது இயற்கைதானே. அரசன், "நங்கையர் திலகமே நான் உன்னை இரந்து வேண்டிக் கொள்ளுவதொன்றுண்டு. நான் உன்னை உண்மையாக இல்லக்கிழத்தியாக்கிக் கொள்ள விச்சை கொண்டேன். உன் கமலக் கண்களினின்றும் என் பார்வையைத் திருப்ப வலியற்றவனாயினேன். கருணைவைத்து என்னை மணம் புரி. நான் அத்தினபுரியை ஆட்சிபுரியும் அரசன். துஷ்யந்தன் என்னும் பெயரினன்'' என்றான்.

அதற்குச் சகுந்தலை தடை விடை தராமல் நாணத்தால் தலை குனிந்தாள். நற்குடிப் பிறப்பால் நடுக்கமெய்தினள். அச்சத்தாற் சிறிது அகன்று நின்றாள். பயிர்ப்பினால் பக்கத் தொதுங்கினள். ஆயினும், அவளுக்கு அவன்மிசை ஆசையுண்டாயிற்று. கதிரவனைப்போன்ற அவர் முகத்தால் அவளுடைய முகத்தாமரை விகசித்தது. சகுந்தலையோ முனிவர் வரவை எதிர்நோக்கி நின்றனள்.

துஷ்யந்தன் திரும்பவும், "மங்கையர் திலகமே! என்னை மணப்பையாயின் இம்மானில முழுவதும் உனதாகும். நீ வேண்டுவ பூணலாம். பட்டாடைகளை நினைத்த வண்ணமே தரிக்கலாம். அதிகஞ் சொல்ல நான் விரும்பவில்லை. என்னைச் சாமான்யமாக நினைத்து விடாதே. மதிக்குலத்துதித்த மன்னவனென்று மதியினல் மதிப்பாயாக. இக்கரத்தால் மற்றொரு மாதரைத் தொடேன்; மனதிலுஞ் சிந்தியேன்" என்றுரைத்து அவளருகிற் சென்று, அவளது கைகளைப் பற்றினன். மானபரணம் பூண்ட சகுந்தலை பிடித்த கைகளை யுதறி, "மன்னர் மன்னனே! நீர் என்ன எல்லாந் தெரிந்திருந்தும் எளியவர்களைப்போல நடக்கின்றீர். நான் உம்மிஷ்டப்படி நடக்க வியலாது. என் அரிய தந்தையார் ஆணையிலுள்ளேன். அவர் இவண் வருமளவுங் காத்திருந்து அவரிடம் தம்மிஷ்டத்தைக் கூறும். அவர், செல்லும் வண்ணம் நடந்து கொள்ளுவதே எனது கடமையாகும்;" என்று மன்னன் மனமகிழும்படியாகச் சொல்லினள். அச்சொல் குழலோசை

போலும் அவன் மனதை மருளச்செய்தது; அவன், மீளவும், 'மாதுசிரோமணியே, நீ என்ன, என்னை ஒன்றுந்தெரியாத மூடனுகவே நினைத்து விட்டனை? நான் அதருமார்க்கத்தில் அணுவளவுஞ்செல்ல இச்சிக்க மாட்டேன். நான் பிரவேசிக்கத் துணிந்தாலும் என்மனந் துணியாதென்பதை நன்கறிவாயாக; ஆனல், நான் குறிப்பறிந்து நடக்குங் கூர்மை யுடையேன். 'அகத்தினழகு முகத்திற் றெரியும்' என்னும் பழமொழிப்படி, உன் முகக்குறியால் நீயும் என்மேல் ஆசை கொண்டாய் 'என்பதை யறிந்தேன். உன் தந்தையார் எத்துணைக் காலங் கடந்து வருவாரோ? அதுவரையில் யான் காத்திருக்க வேண்டியதற்குக் காரணமில்லை. அரசர்களுக்குள் பெற்ருேர் சம்மதமில்லாமலே பெண் வேண்டிய வரனைத் தேடலாம். இஃது எண்வகை பழைய வழக்க மணங்களுள் ஒன்ருகும். இது பலவரசர்களாலும் கையாளப்பட்டுச் சாத்திர சம்மதம் பெற்றிருப்பதால் அதருமத்தின்பாற்பட்டுத் தவருகாது. இத்தகைய மணத்தை அகப்பொருளறிந்தவருங் கவிவாணரும் அதிகமாகப் போற்றி யுள்ளார்களே ! இதைப்பற்றி அச்சமடைகின்றவருமுண்டோ? இனி என் உடலையும் உயிரையும் உனக்கு அர்ப்பணஞ் செய்தேன். இனி நான் நின்னைச் சார்ந்தவன் ; நீ என்னைச் சார்ந்தவள். வற்றிய பயிருக்கு வானம்போல் வந்த வனிதாரத்னமே!' என்றனன். அப்பொழுது தென்றற் காற்று மெல்ல மெல்லச் சில்லென்று வீசிக் கொண்டிருந்தது ; குயிலொன்று கொஞ்ச தூரத்தினுக்கப்பால் பாடிக்கொண்டிருந்தது ; ஒரு மயில்

எதிரே தோகை விரித்து வாகை புனைந்த வள்ளலைப் போலாடிக் கொண்டிருந்தது. சகுந்தலையின் மனமும் நெகிழ்ந்தது. வண்டினங்களும் மணத்தின் பொருட்டு மங்கள வாத்தியம் வாசிப்பதுபோல ரீங்காரஞ் செய்து கொண்டிருந்தது.

அதன்பின்பு இருவரும் மணஞ்செய்து மகிழ்ந்தனர். பிரியமுள்ள காதலர் பேசிக்கொண்டிருப்பதே பேரின்ப மாதலால் அவ்விருவரும் வெகுநேரம் பேச்சிற் கழித்தார்கள். அப்பால், துஷ்யந்தன், சகுந்தலாய்! நான் இனி ஒரு கணமேனும் இவ்விடத்தில் இருத்தல் தகாது; அரசாக்ஷி யல்லல்படும்; ஆகையால், நான் என் நகரினை யடைந்ததும், நம் பரிவாரங்களை யனுப்பித் தக்க மரியாதையுடன் உன்னை அழைத்துக் கொள்ளுகிறேனென்று சாற்றிப் பிரிய மனமில்லாமல் பிரிந்து சென்றான்.

### சகுந்தலையின் மனவருத்தம்.

சிறிதுநேரம் பொறுத்துக் கண்ணுவ மகாரிஷி கனிகள் நிறைந்த புட்டிலொன்றைக் கையிலேந்திக் கொண்டு கடுகிவந்தார். அவர் பொன்னிறமான மேனியும் புண்டர சடையு முடையவர். தவத்தினாலே தேகபலங் குறைந்திருப்பினும் வன்மை மிக்கவர், உண்மை நிறைந்தவர். ஊழினையும் உள்ளபடி யறியும் ஊகமுடையவர். ஒழுக்கம் நிறைந்த முனிச்சிரேஷ்டர். இதுவரையில் அவர் வெளியிலிருந்து வாடி வதங்கி வருவராயின், சகுந்தலை காத்திருந்து அவரைக் கண்டவுடனே சற்றுத் தூரம் எதிர்

கொண்டோடி அவர் தாங்கிவரும் கூடையையாயி னும், மற்றெதுவாக விருப்பினும் தான் வாங்கித் தலை யில் வைத்துக்கொண்டு அவர் கரத்தைப் பிடித்து உல்லாசமாக ஆடிவருவாள். அவளது விந்தையான விளையாட்டைக் கண்டு முனிவருடைய ஆயாசம் தீரும். சகுந்தலை வழக்கம்போல அன்று எதிர் கொண்டு போகவில்லை; அவள் நெஞ்சம் படபட வென்று துடித்தது. தந்தையார் தன் தகாத செய் கையை யறிந்தால் என்ன சொல்லுவாரோ எனத் திடுக்கிட்டுத் தியங்கினாள். அவள், எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணி எண்ணி மனம் புண்பட்டுப் புழுங் கினாள்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது"

என்னும் வேதமொழிக் கிணங்க, ஒருகால் தன் தந்தையார் தன்னைச் சபித்து விடுவரோ வென்று துடிதுடித்துத் துயரக் கடலிலாழ்ந்து மூலையிலுட் கார்ந்து தலைகுனிந்து கொண்டிருந்தாள். முனிவர் நடந்தவை முற்றும் தம் ஞானக் கண்ணாலுணர்ந்து மகளை யழைத்தார். சகுந்தலை நடுங்கிக்கொண்டு அவர் முன்பே வந்து நின்றாள். கண்ணுவர் தாங்கி வந்த புட்டிலைக் கீழே வைத்து, புன்னகை புரிந்து அவள் சிரத்தின்மீது தமது கரத்தை வைத்து, 'மாத ரணிகலமே! நீ அச்சமடைதல் வேண்டா. நீ செய்து கொண்ட விவாகம் அதருமமென்று அகமழிந்து வருந்தாதே. அது அரசர் குலத்திற் கடுத்ததேயா

கும்; கல்வி நலந்தோய்ந்தா ரனைவரும் மதிக்கக்கூடிய தேயாம்; வழக்கில் வானவரும் வழுத்தற் குரிய தேயாம்; என் மனத்திற்குஞ் சம்மதமுடையதேயா கும். நீ புருடனாக வரித்துக் கடிமணஞ் செய்து கொண்டவன் உயர் குடியிற் பிறந்த வுத்தமன்; உத்தம நெறியினை நித்தங் கடைப்பிடித் தொழுகுபவன்; கருணைக்குச் சாகரமானவன்; கல்விக்குப் பிரகஸ்பதி பகவானை யொத்தவன்; உருவத்தில் குமரனையும் பின்னிடையும்படியான பேரழகு வாய்ந்தவன்; நடுநிலை தவறாது செங்கோல் செலுத்துவதால் அவனுடைய நாட்டில் பருவமழை பெய்து பைங்கூழ்களெங்குஞ் செழித்தோங்கி யிருக்கின்றன. அருமறை யந்தணர் அல்லும் பகலும் அவன் நகரை விடாது அரும் பெரும் யாகங்களை ஆங்காங்கு செய்து கொண்டே யிருப்பர். நல்குர வென்பது அவன் நாட்டிலெங்குமே கிடையாது. குடிகளுக்குக் குறை யென்பதில்லை. அவனகரத்தில் ஒவ்வொரு வருணத்தவரும் அவரவர்களுக்குரிமையான அறத்தையே விருதமாகவும், அன்பையே யொழுக்கமாகவுங்கொண்டு, விருந்தெதிர் நோக்கி விரும்பி யுண்ணுமியல்பினர் அவன் கீழ்ப்பட்ட குடிகள், 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே, என்னு மிலக்கணத்தை யுன்னி, அவனைத் தம் தெய்வம்போல வெண்ணி வருகின்றனர்' அவனும்,

"வானோக்கி வாழுமுல கெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி"

என்னு மிலக்கணத்திற்கும்,

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்"

என்னும் நீதிக்கும் வழுவாமல் எங்களுடைய தவங்களும் முட்டின்றி முடியும்படி நடந்து வருகின்றான். இவ்வளவு பெருமையும் சிறப்பும் ஒருங்கே பொருந்தியுள்ள மன்னனை நீ மணந்தது பூர்வ ஜன்மத்தில் செய்த நல்வினைப் பயனேயன்றி வேறல்ல; என்மனத்திற்கும் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. இப்பொழுது தான் நான் உன்னை அன்புடன் வளர்த்து வந்ததினாலாகிய பயனைப் பெற்றேன். உன்னைக் கொண்டுவந்த வன்று அடைந்த மகிழ்ச்சியினும், இன்று நீ பெற்ற பாக்கியத்தைக் கேட்ட என் மனம் கரைசெய்ய வரியதொரு பேருவகைக் கடலிலாழ்ந்தது; இஃதன்றோ மகள் தந்தைக்கியற்றும் மேன்மையான கடன்களிலொன்று; இப்பேர்ப்பட்ட வரனொருவன் உனக்கு வாய்க்கவேண்டும் மென்பதன்றோ நான் இதுகாறும் எண்ணி வந்த எண்ணம். இன்றே வளர்த்த பெருமையடைந்தேன்" என்றார்.

## சகுந்தலை கருவுயிர்த்தல்.

கண்ணுவரின் இன்சொல்லைச் செவியேற்ற சகுந்தலையின் பெருமகிழ்ச்சிக்கு அளவேயில்லை. சகுந்தலையும் நாட்கள் செல்லச் செல்ல உருவம் வேறுபட்டுப் பைந்நாகம்போல மேனி வெளுத்தது. மாதங்கள் பத்தும் கடந்தன. மாதர் சிரோமணியாகிய அவளுக்கு அழகிய ஓர் ஆண்மக வுதித்தது.

அக்குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தது. அக்குழந்தை காண்பதற்கு, அகன்றுயர்ந்த நெற்றியும், பொன்மயமான பொலிவுமிக்க வடிவமும், குன்றுபோற் றிரண்டெழுந்த விருதோள்களும், தளராத மனவுறுதியுமுடையதாய் விளங்கியது. அப்பாலன் சின்னஞ் சிறுவயதில் சீயங்களை எதிர்த்துச்சீறிச் சண்டை செய்வான். செந்நாய்களைச் சென்று சென்று பிடித்துப் பிடிப்பான். புலிகளைப் பாய்ந்து பாய்ந்து பிடித்து விளையாடுவான்; களிற்றியானைகளைக் களிப்புடன் கடிந்து கடிந்து முறுக்கி யடித்துக் குதித்துக் கொன்று குதூஹலித்து வருவான். அச்சமென்பது அவனுக் கணுவளவு மில்லை, அல்லென்றும் பகலென்றும் அறிந்து பார்ப்பதே யில்லை. அபாயகரமான காரியத்தை அப்பாலன், அவலீலையாக அசையாவகத்துடன் ஆவலாகச் செய்வதிலேயே ஆசையுடையவன். அவன் வனத்தில் வெளிவரக் கண்டால் வனவிலங்குக ளெல்லாம் வெருண்டோடும். அதனல், அவனை எல்லாரும் சர்வதமனன் என்று அழைத்து வந்தார்கள். அவன் கலைகளனைத்தும் ஐயந்திரிபில்லாமல் கற்றுத்தேர்ந்து கண்ணுவருக்கும் மற்றையவருக்கும் அடங்காப் பெருமகிழ்ச்சி யளித்து வந்தான்.

சகுந்தலையோ தன் நாயகன் வரவை நினைந்து நினைந்து பைங்கூழ் மேகத்தை எதிர் பார்ப்பது போல அல்லும் பகலும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அரசனோ, நெடுநாள் காத்திருந்தும் வரக்காணும். அவன் அன்று கூறிச் சென்றவண்ணம்

ஆளையும் அனுப்பிலன். நாட்கள் போயின; "மாதங் கள் ஒன்றன் பின் னொன்றாகக் கடந்தன. வருஷங் களும் வரலாயின. வாக்களித்த மன்னன் கடிதமுங் கண்டிலள். அவரது குசலமுந் தெரியவில்லை. அல்ல லும் நீங்கவில்லை. அப்பால், சகுந்தலைக்கு ஒரு எண் ணந் தோன்றியது. இதென்ன விந்தை? என்னைப் போலப் பித்துக்கொண்டவர்களுண்டோ? அரண் மனையில் ஆயிரக் கணக்காய் அழகிய வரசகுமரிகள் புடைசூழ உலகவின்பத்தை யுவப்புடன் அனுபவிப்ப வர் காட்டில் கந்தைசுற்றிக் காய்கனி தின்று ஜீவிக் குந் தன்னைப்போன்ற ஏழைப்பெண்ணை எண்ணுவ தற்கு மிடமுண்டாகுமோ வென்றையப் பாடுண்டா யிற்று. இனி எங்ஙனமாயினும் அவரையடைதலே தகுதியென வெண்ணி, ஒருநாள் பூஞ்சோலையி லுள்ள தொரு புன்னை விருக்ஷத்தினடியிற் படுத்துக் கொண்டு தன் தலைவனுக்கு,

"என்னையாளுடையானே,

தங்கள் வரவை வைகலும் எதிர்பார்த்து என் கண்கள் மலர்ந்தன. மனமும் புண்ணாகிக் கவலையு மதிகரித்தது. தங்கள் அருமந்தன்ன தனயன், 'தந் தையார் எப்போது வருவார்' என்று வினவுகின் றான். தாங்கள் என்று அடியாள் மீது கிருபைசெய்து வந்து எம் ஆவல் தீர்ப்பீர்கள்?

இங்ஙனம்,
தங்கள் அன்பினுக்குரியவடியாள்,
சகுந்தலை.

என்று விகிதம் வரைந்து அடிமை வசமனுப்பினள். அதற்கும் ஒரு விதமான விடையும் வரவில்லை. அதனால், அரசன் தன்னை மறந்து போயினனென்று மனத்திடஞ் செய்தாள். ஆயினும் அவள் மனம் நோகவில்லை. மன்னனை மாறுபட்டு வையவில்லை. அவள் ஆள்வரும் பரியந்தம் காத்திருப்பதே தனது முதன்மையான கடமை யென்று சாந்தமாகச் சகித்திருந்தாள். கணவன் சொற்கடத்து நடப்பதே காதலியின் கடமையாகு மென்பதை நன்கறிந்தவ ளாகையால், தன் துயரைப் பிறருடன் சொல்லாமலே காலத்தைக் கழித்து வந்தாள். கணவன் கருத்துப்படி நடப்பதே பெண் தருமமென்பது புண்ணியவதிகளுடைய கொள்கை யென்பதை நினைத்து நினைத்து நாட்களை எண்ணிக் கொண்டிருந்தாள்.

## சகுந்தலை கணவனிடஞ் செல்லல்

அதற்குள் சர்வதமனுக்கு ஆண்டுகள் பன்னிரண்டு கடந்தன. வாலபருவங் கடந்து யௌவன பருவமும் எட்டிப் பார்க்கலாயிற்று. சகுந்தலாதேவியுந் தன் நாயகன் தரிசனங்கண்டு நீடூழிகாலமாயிற்று. பெண்கள் தம் பெற்றோர் அகத்தில் நெடுநாளிருக்க லாகாதென்றும், அங்ஙனமிருப்பின் அவர்களது நெடுங்கற்பும் நேர்மையுங் குறையுமென்பது யாவரு மறிந்த நீதியன்றோ? அந்நீதியைத் தெரிந்த கண்ணுவர் சகுந்தலையை அரசன் மாட்டனுப்ப வேண்டுமென்று நிச்சயித்து அதன் பொருட்டாக ஒரு சுபதினமும் குறித்தார். ஆயினும், அந்

நாள் வரவே தன் மகளைப் பிரிய அவருக்கு மனம் வராமல் அவதிக்குள் அலமந்தார். கண்ணீரால் கண்கள் மறைந்தன ; காதலால் கடினமான மனது முருகிற்று ; போவென்று சொல்லி யனுப்பவும் நாக்குழறிற்று.

“இச்சு நோக்கிய தீவினைப் பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப் பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவ லின்ப மென்றிரண்டு
மொக்க நோக்கிய யோகரு மருந்துய ருழந்தார்”

என்று கம்பநாடர் சொல்லியதுபோல இவ்வுலகப் பற்றை அறவே ஒழித்துக் காட்டில் வாழும் இம்முனிவருக்கே இவ்வளவு துக்கமானல் இல்லறம் நடத்தும் தாய் தந்தையருக்கு தம் மக்கள் பிரியுங்கால் எவ்வாருகும்? முன்னம் இத்துயராற்ருத நளன்,

“மிசைப்படு துன்பமும் விழையு மின்பமு
மசைத்திடை நிகரென நோக்கு மையனுந்
தசைப்பருந் துயரொடு தளர்ந்து சாம்புமேன்
மகப்பிரி வினுந்துயர் வலிதி யாவதே”

என்று கலங்கினன். அத்தன்மையைப் போலவே விழிவழி நீருகவும், கண்டுளோர் அலக்கண் எய்தவும் கண்ணுவர் சகுந்தலையைக் கட்டி முத்தமிட்டு, அங்குள்ள பூங்காவனத்தில் தழைத்துச் செழித்து வளர்ந்திருக்கும் செடி கொடிகளை நோக்கி, “ஓ செடிகாள்! கொடிகாள்! உங்களுக்குத் தண்ணீருற்ருமல் எவள் தன் தாகவேட்கையைத் தீர்த்துக் கொள்ளாளோ,

நும்மிடத்து வைத்திருந்த பேரன்பால் எவள் உங்கள் இளந்தளிர்களையும் கிள்ளியணியாளோ, நீங்கள் பூ பூக்கும் நாளை எவள் தன் விழாநாளாகக் கொண்டாடு வாளோ அவள் இன்று உங்களை விட்டுத் தன் கொழு நனிடஞ் செல்லுகிறாள். அவளுக்கு நல்விடை தாருங் கள்" என்று விம்மி விம்மி யழுது சொல்லினர். அவ ளுடன் விட்டு நீங்காமல் அநவரதமு முடனிருந்த தோழியர்களும் அவளைச் சுற்றிநின்று கண்ணீர் விடுத்துக் கலங்கினர்கள்.

கற்பின் தலை நின்ற சகுந்தலைக்குத் தன் பெற் றோரையும் பிரியமான தோழிகளையும் பிரிவது தன் னுடலினின்றும் உயிரைப் பிரிப்பது போலாயிற்று. அவள் தன் தந்தையை இறுகப் புல்லிக்கொண்டு இருகண்களினின்றும் அருவிபோல் நீரை யுகுத்துக் கோவெனக் கதறினள். பின்பு, தன் பக்கத்திலிருக் கும் தோழிகளைப் பார்த்து, "என் இன்னுயிர்த் தோழிகளே! உங்களை விட்டு நான் எவ்வாறு போவேன்? என்றன் காலெழவில்லையே" எனத் தேம்பித் தேம்பிச் சொல்லினள். அப்பொழுது தோழிகளில் ஒருத்தி,'சகுந்தலாய்! நீ மர்த்திரமா துன் புறுகின்றாய்? இதோ அருகாமையிற் பார். இந்த மான் தான் மேய்வதைவிட்டு உன்னை வெறிக்கப் பார்க்கிறது. அம்மயில் சிறகு விரித்தாடுவதை நிறுத் திற்று. இதோ இம்மல்லிகைக் கொடியும் உன் பொருட்டு வாடுகின்றதே. இவைகளெல்லாம் உன் பிரிவாற்றாமையை விளக்குபவைகளைப் போலவல் லவா துன்புறுகின்றன. முன்பு இராமன் கான்கடக் கவும்,

ஆவுமழுத அதன்கன்றழுத வன்றலர்ந்த
பூவுமழுத புனர்புள்ளழுத கள்ளொழுகுங்
காவுமழுத களிறழுத கால் வயப்போர்
மாவுமழுதன வக்கண்ணுவரை மணாளனே

என்று கூறியது உனக்கே நிதரிசனமாயிற் றென்றனள்.

அதன் பின்பு சகுந்தலை தான் தண்ணீர் ஊற்றி வளர்த்து வந்த அம்மல்லிகைக் கொடியைத் தன்மீது அன்பு மிக்குள்ள தோழியர்களுக்குக் காட்டி, "அன்னைமீர்! இதோ என்னுயிரினுஞ் சிறந்த நறுமணமுள்ள மல்லிகையை உங்களிடம் ஒப்புவிக்கின்றேன். இதனை என்போலும் பாவித்துப் பாதுகாத்து வரல்வேண்டும்" என்று சொல்லினள். அவளை எந்நாளும் பிரிந்திராத அம்மங்கையர் அன்பாற் கரைந்து அகம் நொந்து, "அந்தோ! சகுந்தலை! எங்களை எவரிடம் ஒப்புவிக்கப்போகின்றனை? புணர்ச்சிப் பிரிதல் புலிக்குங் கடிதெனில், எங்களுக்கெவ்வாறியலும்" என்று கலங்கினர்கள். சகுந்தலை, 'பேயோடு பழகுரினும் பிரிதல் துயரந்தான். அப்பா கண்ணுவர் இருக்கும்போது நுமக்கென்ன குறையுளது? இனி நான்தான் துணையற்றவளாயினேன். இவ்வேழைச் சிறுமியை மறத்தல் வேண்டாம்,' என்று கண்களிற் றண்ணீர் துளும்பிக் கொண்டே கூற, அவர்கள், "எங்கள் கண்போல்வாய்! உன்னை மறக்கவும் படுமோ! என்ன மாற்றம் கூறினை? நாங்கள் ஒரு கால் மறக்கும்படியாக நேர்ந்தாலும், நீ விந்தையாகத் தேவரும் யாவரும் வியந்தின்ப மடைய விளையாடும் மேடையும், உனக்கிஷ்டமான மலர்களும்

உன் கரத்தால் கஷ்டப்பட்டுக் களைபிடுங்கி நட்ட விச்செடிகளும் ஞாபகமூட்டும் என்பதனை நீ மறந்து விட்டனையோ ?" என்றார்கள்.

அப்பால், சகுந்தலை, தந்தை கண்ணுவரும் சகிகள் மூவரும் முன் செல்ல, சாரங்கன் கௌதமியென்னும் மாணவரும், சிறுவன் சர்வதமனும் பின் தொடர்ந்துவர வீட்டை விட்டுக் குறித்த நாழிகை பிசகாமற் புறப்பட்டார்கள். கொஞ்ச தூரம் செல்லுவதற்குள் சகுந்தலைக்குத் தன் ஆடை நுனியை யாரோ ஒருவர் பின்னின்றிழுப்பதாகத் தோன்றியது. 'உடனே அவள் இதென்ன விந்தையாகவிருக்கின்றது? இவ்வளவு நாளாக நாம் கோடித்துக் கொண்டு இன்று செல்லப் புக்கவிடத்தும் இடையூறுகள் நேருகின்றனவே' என்று திரும்பிப் பார்த்தாள். அப்போது தான் இதுகாறும் மிகவும் பிரீதியுடன் வளர்த்து வந்த பெண்மான் ஒன்று கண்களில் தேக்கிய நீருடன் வரக்கண்டாள். கண்டவள் கன்றைவிட்டுச் செல்லுங் காராவைப்போலக் கலங்கினாள். அதன் கண்ணீர் போக்கினள், அதன் முதுகைத் தன் மெல்லிய கரங்களாற் றடவி முத்தமிட்டாள். முத்தமிட்டு, "அம்மா! உன்னைக் கைவிட்டுச் செல்லும் இந்தப் பாவியை நீ யேன் பின்பற்றுகின்றனை ? வேண்டாம். என்னருமைத் தந்தை கண்ணுவரிருக்கின்றார். அவரிடம் நாடிச்செல். அவர் உன்னைக் காப்பாற்றுவார். அவர் அருளே திரண்டுவந்த உருவம். அன்பிற்குக் கடல். உன்னை எக்காரணங் கொண்டுங் கைவிட மாட்டார்" என்று சொல்லிப்

புலம்பினுள். அவளைப் பின்பற்றி வந்தவ ரனைவரும் அழத்தொடங்கினர். முற்றத் துறந்த முனிவரும் மூதறிவிழந்து முகந்துடைக்க முயன்றனர். அப்போது முனிவர், 'இதென்ன மாயை என்று கண்ணீரை விலக்கி, சகுந்தலா! நீ விசனமுறல் வேண்டாம். உன் காதலனிடஞ் சென்று எல்லாச் சுகமு மனுபவித்துப் பின்னர், சர்வதமன னுக்குப் பட்டமளித்து நீயும் உன் நாயகனும் நன்மை கடைப்பிடித்துத் துறவறம் பூண்டு இங்கு வரலாம்' என்று சமாதானங்கூறித் தேற்றினர். ஆயினும் சகுந்தலையின் விசனம் ஒழியவில்லை. மணற்கேணியைத் தோண்டிய காலத்துச் சுரக்கும் ஊற்று நீரைப் போலவே அவள் தான் அன்புடன் பழகிவந்த ஒவ்வொன்றையும் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவளுக்குக் கண்ணீர் அருவிபோலப் பெருக்கெடுத் தோடியது.

இவ்வாறு அவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு வீட்டைக் கடந்து வெகுதூரம் வந்ததால், கண்ணுவர், இனித்தாம் பின் தொர்டர்வது அவ்வளவு சிறப்பல்ல வென்றெண்ணி, தமது மாணவர்க ளிருவரையும் சகுந்தலைக்குத் துணையாகச் செல்லும்படிக் கட்டளையிட்டு, தன்னருமை மகளை நோக்கி, 'குழந்தாய்! உனக்கு நான் சில நீதிமொழிகளைச் சொல்லுகின்றேன். அதை மறவாமல் கவனமாக மனதிற் பொருத்திக்கொள். அதுவே மேற்குடி பிறந்தவருக்குங் கீழ்க்குடி பிறந்தவருக்கும் பேதாபேதமென்று தரும நீதிகள் சொல்லா நிற்கும். நீ உன் நாயகனிடஞ் சென்றதும் அங்குள்ள பெரியோர்களுக்குக்

கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். மாமி மாமனாரைப் பெற்றோரினும் பெரிதாக வெண்ணி அவர்கள் மனங் கோணாமல் நடந்துகொள்ளல் வேண்டும். அரசனுக்கு அநேக மனைவியரிருப்பினும், அவர்களிடம் அவர் அதிக பட்சம் வைத்திருப்பினும் நீ பொறாமைப் படாமல் அன்பு பாராட்ட வேண்டும். ஏழைகளை ஆதரிக்கவேண்டும். வேலைக்காரர்களைப் பிரியமாக ஆதரித்து வரல்வேண்டும். கணவன் உன்மீது கடிந்து விழுந்தால், நீயும் அவர்மீது கடிந்து விழக்கூடாது. கோபத்தைச் சாமான்யமென்றெண்ணாதே.

கோபமே பாவமெல்லாம் விளைதரு பூமியாகும்
கோபமே பிறவியெல்லாம் புகப்புரி வித்துமாகும்
கோபமே வறுமையெல்லாம் போதரப்புரிவதாகும்
கோபமே நரகமெல்லாம் புகுதரப் புகுத்தா நிற்கும்.

எனக் கோபமே ஒருவர் அடைய வேண்டிய பலனைத் தடுத்துப் பல நரக வாதனையிற் கொண்டு சேர்க்கும் கொடிய தெய்பம். நெருப்பை யவிப்பது நீரே யன்றி நெருப் பல்லாததுபோல, கோபத்தைச் சாந்தமே தணிக்கு மென்றறிவாய். செல்வத்தைக் கண்டு செருக்கடையலாகாது.

அச்செல்வந்தான் இகத்தில் சுகத்தைக் கொடுப்பது போலவிருப்பினும், பக்தியையும் பண்பையுங் குறைத்துப் பாழ்படுத்திவிடும். நற்குண நற்செய்கையுடைய மாதர்களின் சேர்க்கையால் ஒரு குடும்பம் நன்மை பெறுவதும், கெட்ட குணமுடைய பெண்

களின் சேர்க்கையால் ஒரு அரசாட்சியே கெட்டு நாச மடைவதும் அறிவாய்" என்று நற்புத்தி கூறி மற்று மொருதடவை அவளை உச்சிமோந்து உள்ளங் களித் தார்.

உடனே சகுந்தலையும் சர்வதமனும் கண்ணுவர் பாதார விந்தத்தில் விழுந்து நமஸ்கரித்தார்கள். அவர் அவர்களை அன்புடன் வாழ்த்துக் கூறி வழி விட, அப்போது சகுந்தலை, "அப்பா! நீங்கள் என்னை விட்டுப் பிரியப் போகின்றீர்களா? என்னுயிரினுஞ் சிறந்த சகிமார்கள் என்னைவிட்டு நீங்கப்போகின்ற னரா? உங்களெல்லோரையும் விட்டு நான் எங்ஙனம் அயலூரில் அந்நியரிடஞ் சென்று சிந்தையில்லாமல் வாழப்போகின்றேன்? அந்தோ! இத்துணை நாளா கத் தங்களை ஒரு கணமும் நீங்கியறியேனே! இவ் வாறு நீங்குதற்குரிய நாள் வருமென்று மனத்தாலும் எண்ணிலனே! நான் அங்குச் சென்று எப்படிக் காலங் கழிப்பேன்? எங்ஙனம் எனதருமையான இன்னுயிரைக் காப்பாற்றிக் கொண்டிருப்பேன்?" என்று நடுக்கத்துடன் மொழிந்தாள்.!! சர்வதமனும், "எந்தையே! நான் உம்மைவிட்டு ஒருகணமும் அக லேன்; இதுவரையில் உம்முடனே விளையாட்டாகக் காலத்தைக் கழித்தவென்னை எவ்வாறு விட்டுப் போகும்படியாக அனுக்கிரகஞ் செய்கின்றீர்" ரென அவரது கழுத்தை இறுகக் கட்டிக்கொண்டான். உடனே கண்ணுவர், "குழந்தாய்! ரத்னங்கள் எவரிட மிருந்தால் பிரகாசிக்குமோ அங்குதானே இருக்க வேண்டும். எவனுடைய சொத்தை எவன் வைத்துப்

பாவிக்கக் கூடும்? இன்னும் எவ்வளவு நாள்தான் ஏழையாகிய என்னுடன் காய்கனி கிழங்கு வர்க்கங்களைப் புசித்துப் போதுபோக்கிக் கொண்டிருப்பீர்கள்? அறுசுவை யுண்டியமர்ந்து இல்ல வருட்டச் சாப்பிடுவதை விட்டுக் கானகத்திலேன் இருத்தல் வேண்டு' மென்று விடைபகர்ந்து தேறுதல் கூறி யனுப்பினர். உடன்வந்த சேடியர்கள் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே சகுந்தலை மறையும் வரையில் பார்த்துக்கொண்டிருந்து, பின்னர் தமது வீட்டை நோக்கிச் சென்றனர்.

## துஷ்யந்தனும் சகுந்தலையும்.

சகுந்தலையும், சர்வதமனனும், சீடர்கள் இருவரும் வழி நடந்த களைப்பால் மனம் மெலிந்து நடை சோர்ந்து மெல்ல மெல்ல அத்தினபுரியை யடைந்து உள்ளே சென்றார்கள். ஆங்கு விண்ணளாவிய மாட மாளிகைகளும், கூடகோபுரங்களும், பரந்து நீண்ட வீதிகளும், அகன்றுயர்ந்த மண்டபங்களும் விநோதமாக அவர்களுக்குத் தோன்றின. அவர்களுக் கிரு புறத்தினும் இடையிடையே பல பூஞ்சோலைகள் முல்லை, மல்லிகை, சம்பங்கி முதலிய பூக்கொடிகள் நாற்புறமும் மணம் பரப்பி வண்டென்னும் அதிதிகளை அழைத்து நல்லூண் அருத்தி நகைமுகங் காட்டி அசைந்தாடிக் கொண்டிருந்தன. அழற்காடெனப் பொலிவுறுஞ் சம்பக மரங்கள் அன்புடன் தன் பாற் சேரும் அளியினத்தை அலமரத் தன் இன்றுளி யளித்துப் பொதுமகள் தொழிலினைக் கதமுறச் செலுத்தின. ஓடும் புனல்கள் சங்கினம் அலற நறுமலர்

விரித்து நறையினும் இனிய நீத்தத்தைப் பெருக்கின. சகுந்தலையின் கண்ணுங் கருத்தும் அக்காட்சிகளிற் செல்ல வில்லை. அவள் தன் கணவனிடம் என்னென்ன சொல்லி இன்புறுவோமென்றெண்ணி வந்தனளோ அவைகளில் ஒன்றும் அவரைக் காணப்போகும் சமயத்தில் அவளுக்கு தோன்றாத கலவே மனந்திடுக்கிட்டது. வலது கண் படபட வெனத் துடித்தது. தேகம் நடுங்கிற்று: அவள் முன்பு கொண்டிருந்த முகப்பொலி வழிந்தது. தன்னைக் கானகத்தில் தானகவே வந்து அன்பு கொண்டு, கடிமணஞ் செய்துகொண்ட தன் கணவனுடைய தங்கவடிவம் அவள் மனத்திலூன்றி இன்பந் தந்தது போய் துன்பந் தரலாயிற்று. இங்ஙனம் தான் முரண்படுவதற்குக் காரணம் என்னவென்று ஆலோசித்துக்கொண்டே அகழியைத் தாண்டிப் பல்பொறிகள் வைத்துள்ளதான கோட்டைக்குள் நுழைந்தாள். கொலுமண்டபத்திற் புகுந்தாள். அரசன் பூவுலகிந்திரன் போல் வீற்றிருப்பதைக்கண்டு, அவன் முன்னர் சென்று நின்றாள். அவள் குமாரனும் சீடர்களும் வரிசைப்பட நின்றார்கள்.

அப்போது அரசன் அமைச்சர்கள் இருபக்கமுஞ் சூழ வரியாசனத்திலமர்ந்து விளங்கினன். தான் வெகுநாளாக விட்டுப் பிரிந்த பொருள் எதிரில் இருக்கக் கண்டதும் சகுந்தலையினது தேகம் நடுக்கமெடுத்தது. உள்ளம் தானகவே படபடவெனத் துடிப்பதிகரித்தது. கண்களில் தண்ணீர் ஊற்றெடுத்துப் பெருகியது. அவள் என்ன செய்வதென்றுணராமல்

தலையிரங்கித் தன் பக்கத்திலிருந்த பொற்றாணைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சிறுவனுகிய சர்வதமனனுடைய கண்கள் அவைக்களத்தில் அருமையாகத் தொங்கிக் கொண்டிருந்த பதுமைகளில் சென்றன.

அப்போது அருகிலிருக்குந் தவசிகளிருவரும், நல்ல தவங்கள் எல்லாம் குற்றமில்லாத வடிவத்தைப் பெற்றுக் கொண்டு விளங்குவது போலெழுந்தருளியிருக்கும் கண்ணுவரிட மிருந்து வந்த சீடர்கள் என்று அறிந்த துஷ்யந்தன், அவர்களுக்குத் தக்க மரியாதை செய்து ஆதனமளித்து, முனிவரது குசலம் வினவி, பின் வந்த காரணத்தை வினவினன். ஆனல் சகுந்தலையை ஏறிட்டுப்பார்த்தவனன்று. யாவளென்று கேட்டவனு மன்று. கௌதமி, 'அரசே! பெண்ணுக்கு உரிமையுடையவர் இருந்தும் அவருக்கறிவியாமல் நீங்களிருவரும் காதலித்துக் கடிமணஞ் செய்து கொண்டீர்கள். அதுவே தர்மத்திற்குகந்ததாகாது. உலகவொழுக்கத்தைத் தாங்கள் தெரியாதவர்களல்லர். மாதர்கள் எவ்வளவு ஞானமுள்ளவர்களெனினும், கற்புடையவர்களெனினும், தங்களைக் கடிமணஞ் செய்துகொண்ட புருஷனை விட்டுத் தாய் தந்தையர் வீட்டிலிருப்பார்களாயின், உலகம் வேறுவிதமாக யெண்ணக்கூடும். தங்கள் மனையாளை இதோ அழைத்து வந்தோம். இவளை அங்கீகரித்து அன்புடன் ஆதரிக்கவேண்டுகிறோம். முற்றத்துறந்த எம்கண்ணுவரின் ஆணையுமிதுவேயா

கும்" என்றனள். துஷ்யந்தன் உடனே, "அம்மா, இதென்ன? மரவுடையைத் தரித்து நிற்கும் இந்தப் பெண் என் தலைவியா? இதை யாவர்தான் ஒப்புக் கொள்ளுவார்கள்? இதென்ன அற்புதம்?" என்று பட படப்புடன் கேட்டான். இவ்வார்த்தைகள் சகுந்தலை யின் காதில் விழவும் அவள் முகம் வெளுத்தது. விழி கள் அசைந்தில. தலைசாய்ந்தது. தேகம் பெருங்காற் றில் அலைப்புண்ட வாழை மரம்போல அலமந்து, அறிவுமயங்கி, உணர்ச்சியு மழிந்தது. அதனால் அவள் தன்னை அடுத்திருந்த தூணைப்போலானாள். கௌதமி திரும்பவும், "காட்டில் வாழ்ந்த இச்சிறுமியைக் கடி மணஞ் செய்துகொண்டது அரசர் பெருமகனாகிய தங்கட்கு அவமானமாகத் தோன்றலாம். அங்ஙனம் தாங்கள் சத்தியந் தவறுவீராயின் அதனினுந் தாழ்ந் தது மற்றொன்று மில்லை" என்றாள். துஷ்யந்தன் சீக் கிரத்தில் விடைதர.வில்லை. அவன் முகமானது ஆச் சரியக் குறியை அறிவித்தது. கௌதமி மீண்டும், "ஐயா! என்ன எண்ணுகின்றீர்? இந்த விஷயத்தில் எண்ணுவதென்"? என்றாள். அதற்குத் துஷ்யந்தன், "அம்மணீ! நான் எவ்வளவு யோசித்துப் பார்த்தும் இந்தப் பெண்ணைக் கடிமணஞ் செய்து கொண்டதாக என் ஞாபகத்திற்கு வரவில்லை. நான் என்ன செய் வேன்? எவ்வாறு இவளை என் மனைவி என்பேன்?" என்றான். சகுந்தலை சற்று நேரத்திற் கெல்லாம் தலை நிமிர்ந்து அரசனை நோக்கி, கண்களில் நீர் கலங்க இரக்கக் குரலுடன், "ஓ என்னருமைக் காதல! என் னுருயிர் நாயக! இதென்ன விபரீதம்? தங்களைப் போன்ற தருமவான்களும் என்னை மறந்து இப்படி

சொல்லவும்படுமோ? இது அறநெறி தவறும் அரசர்களின் காரியமல்லவோ? ஏழையாகிய வென்னை இங்ஙனம் பரீக்ஷை செய்வது தமக்கேற்ற தாமோ?' என்று புலம்பினள். துஷ்யந்தன் பதில் கூறவில்லை. சகுந்தலை மறுபடியும் "என் இன்னுயிரினுஞ் சிறந்த வேந்தலே! என்னைக் காட்டில் கடிமணஞ் செய்து கொண்ட போது சாற்றிய மாற்றங்களை நினைவு கூறுங்கள். தாங்கள் வாக்குப் பிழையாத வள்ளலாயிற்றே. என்னை வாக்குப் பிரகாரம் ஆளை அனுப்பித் தருவித்துக் கொள்ளுவீரென்று இத்துணைநாள் வழிபார்த்துக் கொண்டிருந்தேன். நான் வழிபார்த்துக் கொண்டிருந்த நாள்கள் வாளா கழிந்தனவே யல்லாமல் பயனைக் காணாமையால், என் தந்தையார் ஆணையின்படி இவ்விடம் வந்தேன். என்னருமைத் தந்தையாரையும், எனதுயிரினும் மேம்பட்ட தோழியரையும் பிரியாமற் பிரிந்து நும் அவைக்களத்தையணுகிய என்னை அவமானப்படுத்தல் வேண்டாம். பிறர் நகைக்கும்படிச் செய்வதற்கு நான் ஏற்றவளல்லை; இது தருணமுமன்று' என்றனள்.

அவ்வசனத்தைக் கேட்ட துஷ்யந்தன் மனம் வேறுபட்டுக் கண்களில் இரத்தப் பொறி பறக்க விழித்து, தன் கண்களை வேறு ஒருபக்கந் திருப்பிக் காதுகளைக் கரங்களால் மூடிக்கொண்டான். 'இதென்ன பெரும் பாவமாக விளைந்ததே. இத்தகாத வசனங்களைக் கேட்க என் செவிகளென்ன பாவஞ் செய்திருந்தனவோ? இவ்வளவு நாளாக என்னிடத்தில் வந்து அவமானத்திற்குள் படுத்த வேண்டுமென்று

இவளை ஏவி யனுப்பினோர்களோ? நான் இவள் முகத்தை எந்நாளும் பார்த்தவனன்றே. பழியொரு பக்கம் பாவமொருபக்கம் சாருமென்று முன்னோர்கள் கூறும் முது மொழி என்வரையில் உண்மையாயிற்றே. இதென்ன அநீதம்? 'உறற்பால தீண்டாவிடுத லரி' தென்னும் வார்த்தை எனக்குத் தான் பலித்தது போலும்' என்றான்.

சகுந்தலை:-பிராணபதி, நீரேன்மனதை நொந்து கொள்ளுதல் வேண்டும்? தயவுசெய்து என்னைப்பார்த்துப்பேசுங்கள். என்னை அறியீரென்பது தங்கள் மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் சொல்லுஞ் சொல்லோ? என்னைத் திருமணஞ் செய்து கொள்ளுங் காலையில், நான் எந்தையார் கண்ணுவர் வருமளவும் காத்திருங்களென்ற போது தாங்கள் அது அவசியமல்லவென்றும், கடிமணங்கள் எண்வகையின வென்றும், அவற்றுள் காந்தருவமே அரசர் குலத்திற்கு அடுத்ததென்றும் பல விதமான தருமங்களைக் கூறி அக்காந்தருவ முறைப்படி என்னைப் பலவழியிலும் வற்புறுத்தினீர்களே. அருகில் வந்து அன்புடன் என்னைக் கைப்பற்றியபோது நான் தங்கள் கையை யுதற, தங்கள் உடலையு முயிரையும் எனக்கு அர்ப்பணஞ் செய்து விடுவதாகச் சொன்னீரே. இதுதான் அர்ப்பணமென்னும் அருஞ் சொல்லின் பொருளோ? அல்லது, அக்காலத்தை யுத்தேசித்த வார்த்தையோ? அவைகளுள் ஒன்றேனுந் தங்கள் ஞாபகத்திற்கு வர வில்லையா? ஒருவர் ஒருவரைப் பரீக்ஷிப்பதென்று சொல்லுவது சற்று நேரந்தானே. நீர் இவ்வாறு சத்தி

யத்தை மறப்பீரென்று நான் கனவிலுங் கருத வில்லை' என்றாள்.

துஷ்யந்தன்:—ஆஹா! என்ன விந்தை! என்ன தைரியம்! என்ன மாயப்பேச்சு! இதுதான் மாதர்களினது மாயத்திறம்போலும். வஞ்சநெஞ்சுடைய வஞ்சியரை நம்பக்கூடாதென்பது இப்பொழுதுதான் வெளியாயிற்று. பெண்டிர்கள் சமயத்திற்குத் தக்க வண்ணம் பேசித் தங்கள் காரியத்தைச் சாதிக்கின்றார்கள் என்று பலர் சொல்லும் வார்த்தையை இதுவரையில் நான் உண்மையல்லவென்றெண்ணியிருந்தேன். அதுவும் இன்றுதான் கண்கூடாயது. இவர்களுடைய தந்திர மந்திரங்களினாலன்றோ அறிவு நிறைந்த ஆண்மகனும் அவ்வறிவிழந்துவா மயங்கி மோசவலையிற் படுவது.

கௌதமி:—துஷ்யந்த மகாராஜனே! தெய்வமுண்டென நினைத்திலீர் போலும். கடவுளுக்காவது பயந்து பேசும். 'செல்வம் வந்துற்றகாலை தெய்வமுஞ் சிறிதும் பேணார், ஆவன அறிந்து சொல்லார்' என்னும் மாற்றம் நும்மிடமே உண்மையாயின. இப்பெண்ணையும் பிறரைப்போல வெண்ணாதேயும். இவள் கண்ணுவரால் வளர்த்து வந்தவள். காட்டில் திரிந்த மான்களுடன் இடைவிடாமல் பழகி வாழ்ந்தவள். கள்ளமென்பதைக் கனவிலுங் கருதாதவள். கற்பிற் பழுது படாதவள். பண்ணவர்களுங் கண்டு கைதொழும் பான்மை பெற்றவள். நற்றவர் செல்வி. விண்ணவர் அம்சம் பெற்ற விமலை. வீணே ஏன்

இக்கற்பிற் கணிகலத்தின் பாவத்தைக் கட்டிக் கொள்ளுகின்றீர், என்றனள்.

துஷ்யந்தன்:—'அம்மணீ! கௌதமி தேவியே! என்மீது கடிந்து கொள்ளுதல் வேண்டாம். மாதர்களினுடைய இயற்கைக் குணத்தை எடுத்தியம்பினேன். இல்லதும் பொல்லதும் நான் ஒருகாலும் எடுத்தியம்பேன். ஆனால், நீர் பரிந்து பேசுவது சகஜ தருமந்தான். பக்ஷியினத்திலும் பெண் குயிலானது தன் குஞ்சைப் பறக்கும் வரையில் காகத்தைக் கொண்டு வளர்ப்பதை நீர் கேட்டதில்லையோ? நான் தான் கண்டதில்லையா?' என்று நகைத்தான்.

இம்மாற்றத்தைச் செவியேற்றச் சாரங்கனுக்குக் கனலினுங் கடுங்கோப முண்டாகிக் கண் சிவந்தது. மனந் துடித்தது. நா படபடவென்றடித்தது. உள்ளங் கொதித்தெழுந்தது. உடனே சாரங்கன் 'அரசே! சற்று நிதானித்துப் பேசும். உமது சத்தியத்தை இன்றுதா னுணர்ந்தேன். இது காறும் அரசவை யாயிற்றென்றே ஆலோசித்திருந்தேன். இனி கணமும் சும்மா விருக்க மாட்டேன். நீரே நும் மனத்தை ஆராய்ந்துபாரும். கள்ளனைப் போலும் எங்கள் ஆச்சிரமத்தில் கரந்துறைந்து எம்மாரியன் மகளை அயலாரில்லாக் காலம்பார்த்துக் கவர்ந்ததுவும் அல்லாமல், இப்போது உம்மிடம் வந்தவளைத் தாறுமாறாகப் பேசுகின்றீர். இதுவோ நும்போன்ற மன்னர்களின் மகிமை' என்று உரத்துச் சொல்லினன்.

வெளுத்ததெல்லாம் பாலென் றெண்ணும் கண் ணுவர் செல்வியோ இவ்வளவு நேரம் தன் புருடன் பரிகாசமாகப் பேசி யிருப்பாரென் றெண்ணினள். அப்பால் உண்மை ஏற்பட்டது. உடனே அவளை விட்டு நீங்காத நாணமும் நீங்கிற்று. அச்சமுமகன் றது. அடங்காச் சினமுண்டாயிற்று. அகிலத்தார் அளவிடக்கூடாத வற்புத ஆண்மையுந் துணிவும் வந் தது. துக்கம் இருந்தவிடந் தெரியாமல் தூரத்திற் பறந்து பதுங்கிற்று. பார்வையோ அந்நியர் நடுங்கத் தக்கதாயிற்று. அவள் இருதயத்தில் எழுந்த எண் ணிறந்த எண்ணங்களை வெளியாக்க அவள் வாய் பதைத்தது. புருவம் துடித்தது. அவள் துஷ்யந்தனை நோக்கி, "அரசே! நீர் உயர்குடியிற் றோன்றியும் உத்தமரைப் போலத் தோன்றியும் பயனென்? உற்று நோக்கின் இழிகுணத்தை யுடையீர். நான் உம்மிடம் அபசாரப் படக்கூடாதென்று இவ்வளவும் நேரம் சும்மா விருந்தும, பயன் பெற்றிலேனாகை யால், நீர் சொல்லும் பொய்யான வார்த்தைகள் பொறுத்திருக்க முடியவில்லை. என்னை மணம் புரிந் திருந்தும் இல்லை என்று மனச்சாக்ஷிக்கு விரோத மாய்ச் சொல்லுகின்றீர்களே. நன்று நன்று நீர் கூறும் சொல். நான் மாயக்காரியென வுசனிக்கின் றீர், நீர் இவ்வவைக்கண் சிறிதும் நாணமின்றிப் பொய்மை கூறுவதுமன்றி உம்மைப் போலவே உல கத்தாரையும் நிதானிக்கின்றீர். அங்ஙன மெண்ண வேண்டாம். இனிமையாகப் பேசி ஏழைப் பெண் களை வஞ்சிக்கும் உம்மைப்போலும் ஒருவர் இவ்வுல கில் இருப்பாரென்று நான் நம்பவேயில்லை. நீர் அர

சனுதலால் உலகினர் உம்மாட்டிருக்குங் குற்றத்தைக் கவனிக்க மாட்டார்கள் போலும். என்னே இவ்வுல கத்தியற்கை ! செல்வத்திற் சிறந்தவர்களின் குற் றத்தை மறைத்து மதித்தலும், வறிஞர்களாயின் நால் வர் அறியத் தாழ்த்தலும் இயல்புபோலும். ஆ! என்ன அநீதம்! பெண் புத்தி பின் புத்தி யென்பது என் வரையி லுண்மையாயினதே. என் தந்தையார் வரும்போது கற்பித்த நீதி வாக்கியங்கள் ஒவ்வொன் றும் என் மனதைப் பிளக்கின்றனவே. கணவன் என்ன சொல்லினும் மனைவி பொறுத்துக்கொண்டி ருத்தல் வேண்டுமென்பது மகான்கள் கூறிய மறை மொழியாயிற்றே. இந்த அநீதத்திற்கு நான் என்ன செய்வேன்? என் மனம் பதைத்திடினும் கடுஞ்சொற் கூற நா எழவில்லை. ஆனால், நீர் 'முழுப் பூசனிக் காயைச் சோற்றில் மறைப்பதுபோல' என்னை அடி யோடு அறியேனென்று சாதிக்கின்றீரே, நான் என்ன வென்பது? எவரிடஞ் சென்று முறையிடுவது? நான் ஆதரவற்றவளென்று இங்ஙனம் மோசம் செய் வது நீதியோ ?நன்மக்களுக்கடுத்ததோ ? நான் உமக் குரியா ளென்பதை நீர் வாயால் மறுத்திடினும் உமது மனமானது அறியுமே! அகதிக்குத் தெய்வமே துணை செய்யுமென்பார்களே, நீர் என்னை ஏமாற்ற முயன்று லும், எல்லாம் வல்லவரும், யாவும் உணர்ந்தவருமான கடவுளையும் ஏமாற்ற முடியுமோ ? தெய்வத்திற்கும் என்மீது கோபமிருக்குமோ' வென்று மனங்கசிந்து கண்ணீருகுத்தாள். பின்னர் தன்னைத்தானே தேற்றரவு செய்து கொண்டாள்.

மறுபடியும் அவள், 'நீர் கானகத்தில் என்னை நாடிவந்து என் கையை வலியப்பிடித்தீர். நான் அன்று முதல் உமது அன்பிற் குகந்த அடியளாயி னேன். இவ்விடத்து நானே வந்தேனென்னும் பிழையினை யன்றிப் பிறிதோர்பிழை என் மன மாறச் செய்தறியேன். ஆயினும் நான் இவ்விடம் வந்தது எனது முயற்சியல்ல ; எனது தந்தையாரின் கட்டளையாகும்'' என்று சொல்லிவிட்டுச் சிறிது நேரம் சும்மா விருந்தாள்.

அதற்குள் அவையில் அமர்ந்திருந்தவர்க ளெல் லாம் அவ்வரிவையின் அருந்துயர்கண்டு அகம் நொந்து அழுங்கினர். அந்தர வாசிகளும் அம்மன் னன் அடாத செயலுக்கஞ்சி, தமது அகன்ற கண் களாற் பார்த்துப் பார்த்துப் பரிதபித்துக் கொண்டி ருந்தார்கள்.

அதன் பிறகு அரிவையர் திலகமான சகுந்தலை, 'அரசே! நீர் தரும முணர்ந்தவராக விருந்தும் இங்ங னம் நான் சொல்லும் சொற்களைச் செவியிலேற்றுக் கொள்ளாமலிருக்கலாமோ? நான் உம்முடைய வடியா ளென்பது அகத்திலுதிக்கவில்லையோ? நானே உம் மிடம் வந்தேனென்று என்னை இவ்வாறு இகழ்ந்து பலர் நகைக்கப் பரிபவப் படுத்துவதழகாமோ ? நான் எனது தந்தையார் தர்ம சாத்திரம் படிக்கையிற் பக் கத்திருந்து கேட்டிருக்கிறேன். இல்லறம் நடப் பதற்கு ஏற்றதொரு கருவி மனையாளன்றோ? மனை வியே புருஷனிற் பாதியாவா ளன்றோ? மனைவியே

நண்பர்க்குள் நாயகமாவாள்; மனைவியே அறம் பொருள் இன்பத்திற்கெல்லாம் ஆதாரமாவாள்; மனைவியே மாட்சிமை பொருந்திய மோட்சத்திற்கும் வழியாவாள். மேலும் மனைவியில்லாத மனையும் ஓர் மனையாகுமோ? அது இடுகாட்டினு மிழிவுபட்டதன்றோ"?

"அன்னை தயையும் அடியாள் பணியு மலர்ப்
பொன்னின் அழகும் புவிப்பொறையும்—வன்னவுடல்
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசில் இவையுடை யாள்"

பெண்சாதியை யன்றிப் பிறர் யார்? இஃதொன்று மட்டோ? மனவருத்தத்தாலோ, தேக நோயாலோ ஆண்மகன் அவஸ்தைப் படுங்கால் அவ்வருத்தமும் நோயும் தனக்குற்றதாம் என்று எண்ணி, அவனருகிலிருந்து அன்புடன் பணிவிடை செய்வாள் அவளன்றிப் பிறரெவருளர்? அவ்விதமான மனையாளை அலக்ஷியஞ் செய்வதுவு மல்லாமல், அவளைத் துன்பக்கடலில் துடிக்கும்படி விடுத்துப் பார்க்கும் ஆண்மகன் கதி யென்னவாகும்? இவைகளெல்லாம் வீணே தருமசாத்திரம் கூறுகின்றதேயன்றி, அதைச் செவ்வனே அறிந்தவர்களும் அதன்படி நடவாவிடின், அதைப் படித்தும் என்ன பயன்? நீரோ கல்லினுங் கடினமனதை யுடையவராக விருக்கின்றீர். நும்முடன் நான் ஏன் வாதாடவேண்டும். நான் என்னதான் வாய்நோக முறையிட்டாலும், அவைகளெல்லாம் எரி முன் வைக்கோல் போலாகி விடுகின்றது. கடலொலியைப் போல என் ஒலியும் இவர் வரையில் பயன்படா; இரண்டுமொன்றே என்று நினைத்தாள்.

ஆயினும், அவள் மனதில் மறுபடியுமொன்று தோன்றியது; உடனே அத்தெய்வத் திருவன்னாள் அரசனை யாவருங் காணப் பணிந்து 'சுவாமி! என்னைக் கவனியாவிடினும் நீர் பெற்ற இச்சிறுவனையாவது கவனிக்கலாகாதா? தேகமெல்லாம் மண்ணிற் புரண்டிடினும் மகன் ஓடித் தந்தையின் மடியின்மே லுட்காருவானாயின், அப்பொழுது தந்தைக்குண்டாகும் இன்பத்தைப் போலும் மற்றொன்று உலகத்திலுண்டோ வென்றும், நறுமணம் வீசும் சந்தனமும், குளிர்ச்சியைத்தருந் தண்ணீரும், தனயனுடைய ஸ்பரிசத் தன்மைக்கு ஒருவாற்றானுஞ் சமமாகாவெனச் சான்றோர்கள் சொல்லுகின்றார்களே. அதுவுமறிந்திலீரோ? குழலி னொலியும், கோகிலத்தினினியவோசையும் குழந்தையின் மழலை மொழிக் கிணையாகுமோ என்று ஆன்றோர்கள்,

" பொன்னுடையரே னும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர் ". எனவும்,
" சொன்ன கலையின் துறையனைத்தும் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி " எனவும்,
' அமிழ்தினு மாற்ற வினிதே தமமக்கள்
சிறுகை யளாவிய கூழ் '

எனவும் கூறியுள்ளவை நும் செவிப்படாதோ? அரசனே, நான் இவ்வளவு நேரம் சொல்லியதை யெல்

லாம் கேட்டு மனமிளகாமலும் வாய் திறவாமலும் மரம்போலிருக்கின்றீர். இதெல்லாம் நான் பழம் பிறப்பில் புரிந்து செய்த தீவினையே. அதற்காக வும்மை நோவதாலென் பயன்'? 'தாந்தாம் முன் செய்த வினை தாமே யனுபவிப்பரென்பது' மேலோர் அறிந்து கூறிய வுறுதி மொழியன்றோ? என்னே விதி யிருந்தபடி. முன்னம் என்னை ஈன்றெடுத்த தந்தை என்னை ஏற்காதொழிய, என்னருமைத் தாயருமென் னைக் கைவிட்டாள். என்னை நாடிவந்து மணஞ்செய்து கொண்ட நீரும் வேணுமென்று நீதியறியாமல் விலக் குவது தகுதியோ? இங்ஙனம் சம்பந்தமுடைய பலரும் என்மேல் வெறுப்படைவதற்கு யான் செய்த கொடிய வினை யாதோ? ஆ! என்னைப்போன்ற அபாக்கிய சாலிகளும் அகிலத்தில் அகப்படுவார்களோ? அகற் றொணு வித்துயரத்தை இனி நான் எங்ஙன மகற்றிக் கொள்ள முயலுவேன் இவ்விடம்? வந்து இன்ப முறுவோமென்று எண்ணிய வெண்ணங்களெல்லாம் ஊமன் கண்ட கனவு போலாயிற்றே என்று மனம் வருந்தினுள்.

அதன் பிறகு, தன்னுடன் வந்த சீடர்களிலொரு வர், 'அம்மணீ! நீ எதற்காக இவ்வாறு புலம்ப வேண் டும். எமதாரியனிருக்கையில் உமக் கொருகாலும் குறைவு நேரிடாது' என்று தேறுதல் கூறினர்.

அது கேட்ட சகுந்தலை தனக்குள்ளே சிறிது நேரம் ஆலோசனை புரிந்து, அன்னை கைவிட்டா லென்ன? தலைவன் தவிக்கும்படித் தள்ளினுலென்ன?

என்னுயிரினும் அரிய தந்தையாகிய கண்ணுவரிருக்கும் போது நானேன் இவ்வளவு கவலைப்பட வேண்டும்? அவருடைய தபோபலத்திற்கு முன்பு மற்றவர்கள் மனோபலமும் சேனைபலமும் என் செய்யவல்லது? இவ்வளவு காலமாகக் காத்துவந்தவர், இனி என்னைக் காக்காமலிருப்பாரோ? என்ன புத்தியீனத்தால் மனம்போன வழியே மாறி மாறிப் பிதற்றுகின்றேன்! அவர் நான் உள்ள நாளும் உள்ளன்போடு ஆதரிப்பார். அதில் எனக்குச் சிறிதுங் கவலையே கிடையாது. ஆனால், 'அரசே! நீர் உம்முடைய செல்வப் புத்திரனை நீக்குதல் தருமமல்ல' என்றாள்.

அப்பால், அவளது நா பேச முடியாமல் தளர்ச்சியடைந்தது. மெய் சோர்ந்தது. இளங் கொடியானது அருகிலுள்ள தூணைத்தாவியது போல அவளும் அருகாமையிலிருக்கும் பொற்றூணைப் பொருந்தினள். அவையிலுள்ளோர் அச்சத்தால் ஒன்றுங் கூறமுடியாமல், ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு மௌனியாக விருந்தார்கள். ஆனால், அவர்கள் கண்களில் தானாகவே தண்ணீர் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. என்ன, நம்மரசன் எல்லாக் கலைகளுமுணர்ந்திருந்தும் இம்மங்கையர்க்கரசியை மனம் நோகும்படியாகச் செய்கின்றானே; "ஏழை யழுத கண்ணீர் கூரிய வாளேயாகும்" என்னும் பழமொழிக் கிணங்க வென்ன நடக்குமோ வென்று அவரவருக்கு அச்சமுண்டாயிற்று.

சகுந்தலையின் தனிமை

துஷ்யந்தன், மன இரக்கத்தை யடையாமல் உல்லாஸமாகவே யிருந்தான். அங்கிருந்தவர் களெல்லாம்

அவையில் அருந்ததியைப் போல ஆற்றுவாரில்லாமல் நின்று கலங்கிக் கொண்டிருக்கும் சகுந்தலையைக் கண்டு கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தனரேயன்றி, அரசனுக்கு நன்னெறி யுரைத்தவர்கள் எவருமில்லை. துஷ்யந்தன் மனமுஞ் சிறிது மிளகவில்லை. முகத்தில் இரக்கக் குறிப்பு எட்டுணையுங் காணோம். ஆயின், அரசன் சற்று நேரம் பொறுத்துச் சகுந்தலையைப்பார்த்து, "பெண்ணே! உன் தந்தை உன்னைக் காட்டில் கைவிட்ட காதகன்; தாயோ உன்னைச் சாகவிட்டுப் போன சண்டாளி; உன்னை விட்டுப் 'போன வுனது தந்தையாகிய விசுவாமித்திரனோ பிறந்த குலத்தை மறந்து வீரம் துலைந்து பிராமண குலத்திற் புகுந்தவன்; தாயோ இன்னகுலமெனச் சொல்ல முடியாமல் பலர் மேல் மனம் வைத்துப் பணம் பறிக்கும் வேசி. நீ இவ்வகையின ருடலிற் பெண்ணாகப் பிறந்தவளாதலால், உன் நடத்தை எவ்வாறிருக்கும்? 'தாயைப்போல பிள்ளை; நூலைப் போலச் சீலை,' அல்லவோ? நன்று; நன்று; உனது வமிசத்தின் அவலக்ஷணத்தைச் சிறிதுங் கவனியாமல் இச்சபை முன்னம் சற்றும் நாணமின்றி என்னை நாயகனென நவில்கின்றாய். மரியாதையில்லாமல் வாய்க்கு வந்த வண்ணம் வழங்குகின்றாய். உன் ஏழ்மையைக் கருதி என் அரண்மனையிலிருக்க நீ எண்ணங்கொண்டிருப்பின், அவ்வுண்மையினை என்னிடந் தெரிவிக்கலாமே. உனது இஷ்டத்தின் பிரகாரம் அரண்மனையில் தனியிடங் கொடுத்து ஆதரித்து வருவேனே. அதை யொழித்து, நீ என்னுடைய மனையாளென்றும், இச்சிறுவன் என் மகனென்றும் இல்லாதவைகளைக் கற்பித்து மாயமா

கத் தகாதவற்றைச் சொல்ல வேண்டுவதேன்? பெண்கள் நீலிகளென்பர் பெரியோர்கள். மாயப் பிசாசம் என்பர் மதிவல்லோர். இது முற்றும் சரி, அடி வஞ்சகக்கள்ளி! மாயக்காரி! என் முன் நிற்காதே. உன்னையும் ஒரு பெண்ணுகச் சிருஷ்டித்தானே வேலையில்லாத வேதன். எங்கேயாவது செல். என் அடி வயிறு பற்றி எரிகிறது; மனம் தானுகவே கொதித்தெழுகிறது; இதுவரையில் என் குலமன்னர்கள் ஒருவரும் இத்தகைய அபவாத மொழிகளைக் கேட்டதே கிடையாது" என்று கடுகடுத்துச் சொல்லினுன். அப்போது அரசன் கண்கள் சிவந்தன. புருவங்கள் மேலெழ மீசைகள் துடிக்கலாயின; தமக்கு முன்னர் ஆதனங்களில் அமர்ந்திருக்கும் ஒவ்வொருவரையும் சுடச்சுடப் பார்த்தான். அவன் சொல்லிய ஒவ்வொரு சொற்களும் சகுந்தலையின் உள்ளத்தில் ஊடுருவிப் புண்ணிலிட்ட ஊசிபோலவிருந்தது. தூணிற் சாய்ந்திருந்தவள் எழுந்து நின்று கோபக் குறியுடன் திரும்பவும், "அரசே! என்ன கூறினீர்? ஏழை வார்த்தை அம்பலம் ஏற்குமோ? ஆயினும் ஒன்று கூறுவேன்; உமது குற்றத்தை விட்டுப் பிறருடைய குற்றத்தை நாடுகின்றீர். தினையளவாகவுள்ள பிறருடைய குற்றந் தெரிவதல்லால், பனையளவாகவுள்ள வுமது குற்றந் தெரியவில்லை போலும். நீர் அரசராக விருந்து ஆகம புராணங்களைப் படித்தும் பயனென்? பெரியோர்களை நிந்திப்பது அழகாகுமோ? என் அன்னை வேசியல்ல; தெய்வப் பெண்; வானுலகில் வரிசையுடன் வாழ்பவள். மாதர்களுக்குள் மகாகீர்த்தி வாய்ந்தவள். மன்னுதி மன்னர்

களும் வணங்கும் மாட்சிமைப்பட்ட வரசாட்சி பூண்ட பகவானுக்கு அடிமைப் பட்டவள். என் தந்தை யோகத்திற்குக் கடல். காதியின் மைந்தர். வேத விற்பன்னர். விண்ணவரும் போற்றும் வித்தகர். தவத்திற் கிருப்பிடம். எடுத்தவேலையை முடிக்கவல்ல வர். பிரம்மரிஷி பட்டம் பெற்றவர். எதிர்த்தவர் களுக்கு எமனினு மிக்க திறலுடையவர். ஆகவே, பிறப்பில் நான் உம்மைக் காட்டினும் பதின்மடங்கு ஏற்றத்தையுடையவள். உமது பதவியை எண்ணி என்னை வாய்க்கு வந்த பிரகாரம் வைதல் வேண்டாம். எவ்வகையதான குற்றங்கூறினுஞ் சகித்திருப்பேன். குலத்தைப்பற்றிக் கூறின், 'கூழுக்கு மாங்காய் தோற்காது.' புனிதமான விடத்திற்கொண்டுவைத் துக் குளித்து நீராட்டினலும் பன்றி சேற்றை நாடிச் செல்வதைப்போன்றும், நல்ல பழங்கள் நாற் புறமுமிறைந்து கிடக்கவுங் காகம் வேம்பின் கனியை விரும்பிச் செல்லுவது போன்றும், சிஷ்டாசாரமும் சீலமுமில்லாத துர்மார்க்கர்கள் பிறருடைய குற்றத் தையே எடுத்துச் சொல்ல விரும்புவார்கள். அந்நிய ருடைய குற்றத்தை நாடியே அவதூறு செய்வதே அவர்களுக்கியற்கை. தாங்களடையும் நற்பயன் சிறிதுமில்லை எனினும் அந்நியர்கள் துன்பப்படும்படி அவதூறு செய்வதே ஆனந்தம். நீர் சொன்ன வார்த்தைகள் ஒவ்வொன்றும் ஞானவான்கள் மிக வும் மெச்சக் கூடியதேயாம். நான் கள்ளியோ அல்லது கொள்ளியோ? என் அன்னை வேசியோ அல்லது விதவையோ? என் தந்தைக் கசடனோ வல் லது கள்ளனே? இதெல்லாம் விந்தையாக இருக்கின்

றது. இவை நல்லோர்கள் நா பொருந்தியதா? உதட்டில் தேன்போன்ற சொல்லும், உளம் கடுவிடம்போன்ற வும்மையும் உண்மையுணராத யான் ஒரு கணவனகக் கருதி கடிமணஞ் செய்து கொண்டேனே. அதன் கைம்மாறு இது போதுமென யான் நினைக்கவில்லை. அந்தோ! இவ்வுலகுணர்ந்த பெரியோர் உறுதுயர் தெரியாமலா? பெற்றவர் சம்மதமின்றிப் புருடனைத் தேடும் பெண்களுடைய கதி இதுவேயெனச் சொல்லுகின்றனர்" என்று தனது கரத்தால் முகத்தை மறைத்துள்ளம் நைந்துருகினள். உடல் பதைத்தாள். ஓவென்றலறினள். இருகண்களினின்றும் பேரருவி நீர் பெருக்கினள், இனியாரைத் துணைகொள்வேன் என்று வாயாற் கூவி வானகமும் மண்ணகமும் மருளுமாறு கதறினள்.

அப்போது, கண்ணுவரிடமிருந்து வந்திருந்த சீடர்கள், இதென்ன அநீதவ்ாசு! இச்சீதேவி நின்றழும் கூக்குரல் இவ்வரசன் செவிக்கேற்க வில்லை என்று அடங்காக் கோபத்தோடெழுந்து, 'அரசே! ஆஹா, என்ன அற்புதம்! என்னவிந்தை! எமது சகுந்தலா தேவியோ சூதென்பதறியாதவள்; படிதாண்டாப் பத்தினி; பாவையர்க்குள் பார்வதி தேவியன்னவள்; இப்பேர்ப்பட்டவள் இச்சபைமுன் மாயக்காரியானள். பிறரை வஞ்சித்தலே பெருமையெனக் கொண்ட நீர் மிக்வும் சத்தியவந்தனயினீர்; உமது பேச்சை யாமறிவேம்; உம் குலத்தின் முறையறிவேம்; உம் நீதிதானறிவேம்; ஆயினும்,

"அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்னும் வேதவாக்கியத்தை யுன்னி யுனக்கு ஒரு வார்த்தை சொல்லுகின்றேம். அது தமக்கு இஷ்டமிருந்தால் செவியேற்றுக் கொள்ளும், இல்லையேல் விட்டு விடும், என்று தமது முகத்தைச் சபையோர் காணத் திருப்பிக்கொண்டு, 'அரச! உம்மை வெறுப்பதில் பயனில்லை,

"எண்ணித் துணிக கருமம். துணிந்தபின்
எண்ணுவ தென்ப திழுக்கு"

என்றபடி ஆராய்ந்து பாராமல் அவசரப்பட்டுச் செய்யுங் காரியங்கள் முடிவில் வருத்தத்தைத் தருவதாகும். ஆதியில் இப்பேதையாள் சிறிது பொறுத்திருந்தாலாவது, எங்களுடன் சற்று ஆலோசித்திருந்தாலாவது இத்துணை கேடுகளுண்டாவதற் கிடமில்லையே? நீர் இப்பொழுது பேசும் வஞ்சக குணத்துடன் அப்பொழுது பேச முடியுமோ? இளம் பெண்கள் இனியேனும் ஆண்மக்களருகிற் செல்லாமலும், அவர்களிடம் பேசாமலும், அவர்கள் சொல்லும் இனிய வார்த்தைகளைக் கேளாமலு மிருக்கட்டும் என்று தாங்கள் செங்குத்தான பாறையின் மேல் நடப்பதாயும், சற்றுத் தவறின் பாதாளத்தில் விழுந்து பாழாவது நிச்சயமென்றெண்ணட்டும். இவள் கதியே இவளுக்குத் தக்க சான்றானது என்று நினைக்கட்டும்." என்றனர். அப்போது அருகாமையில் அமர்ந்திருந்த கௌதமி, சாரங்கனைக் கையமர்த்தித் துஷ்யந்தனை நோக்கி, "அரசே! நாங்கள்

உம்மிடம் வாதாடுவதேன்? இக்கற்பினுக் கணிகலனை இவண் விட்டுவர வேண்டுமென்பது எங்கள் ஆரியன் ஆணை. அவ்வாணையின்படியே இவளை அழைத்து வந்தோம். எங்கள் ஆணையை நாங்கள் நிறைவேற்றிவிட்டோம். இனி அவளை நீர் அங்கீகரிப்பதும் துரத்திவிடுவதும் உமதிஷ்டமேயாகும். இனி நாங்கள் திரும்பிப்போகிறோம். இவ்விடத்தில் உம்முடன் வாதாடுவதாலடையும் பயனென்ன? செவிடன் காதிற் சங்கூதியது போல நீர் இருக்கின்றீர். கல்லைக் கடிப்பாருமுண்டோ? அங்ஙனம் தன்மை தெரியாது கடிப்பவர் கசடரல்லவோ" வென்று சொல்லிச் சாரங்கனை அழைத்தாள்.

அப்போது சகுந்தலை அடியற்ற மரத்தைப் போல அலறிக் கீழே விழுந்தாள். ஐயோவென்று ஓலமிட்டாள். இரண்டு கைகளையுஞ் சென்னியின் மீது குவித்து, என்னருமை நண்பர்களே! என் அன்பன் தான் என்னை விடமாகப் பாவித்து விரட்டுகின்றனர். நீங்களுமா என்னை விட்டகல வேண்டும்" என்று சொல்லிப் பின்செல்ல யத்தனித்தாள். அவர்கள், 'அம்மணீ! நீ என்ன தருமமுணராதவளா? புருடனைப் பிரிவது பொற்புள்ள பெண்களுக்கழகல்லவென்பதையறிந்து மறியாதவளாகின்றனையே. கணவன் எத்தகையதான தீங்கு செய்யினும் அவற்றைப் பொறுமையுடன் சகித்துக கொண்டிருப்பதல்லவா பூவையர் கடமை' என்று சமாதானஞ் சொல்லிப் போயினர்.

சகுந்தலை பின்பு தன்னைத் தான் மறந்து பித்தம் பிடித்தவர்களைப் போலக் கலங்கிக் கண்களிலிருந்து அருவி பெருக்கி யகம் கரைந்து நின்றாள். அவள் நெஞ்சந் துடித்தது. அறிவு மயங்கியது. அவள் கருமையான வளகங் கீழே விழுந்து புரண்டது. ஹே! கருணாகரக் கடவுளே! அனாதை ரக்ஷகா! ஆபத்பாந்தவா! இனி என் கதி என்னவோ? என்னுடன் வந்தவர்களும் என்னைக் கைவிட்டகன்றனர். என் அரும் பெரும் நாணமுமகன்றது. இனி இவ்வுடலத்தை வைத்திருப்பதாலென்ன பயனுளது? 'மானமழிந்த பின் வாழாமை முன்னினிதே' என்னும் ஆன்றோர் வழக்கினைப்போல் அழிந்தொழிவதே நலமென்று சொல்லிக்கொண்டு அவைக்களத்தை விட்டு அகன்றாள். சிறுவன் மாத்திரம் ஒன்றுந் தோன்றாமல் நான்கு பக்கத்திலும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கண்களில் தண்ணீர் துளிக்க ஏதிலானைப்போல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான்.

## அசரீரியும், சகுந்தலையைத் துஷ்யந்தன் ஏற்றுக்கொள்ளுதலும்.

இங்ஙனம் கண்ணீருங் கம்பலையுமாய்க் கதறிக் கொண்டு பித்துப் பிடித்தவளைப் போல் திரியும் சகுந்தலையை அங்குள்ளவர்களெல்லாம் கண்டு கலங்கினார்கள். ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். என்ன செய்வதென்றேற்படவில்லை. எங்கும் நிச்சப்தமாக விருந்தது. மன்னவனும் சபையினர் குறிப்பறிந்து எதையோ ஆலோசித்துக் கொண்டிருந்தான். அவைக்களமோ அரசன் அமைதியைக் கண்டு நடுநிசியைப் போலவிருந்தது.

கொஞ்சநேரம் வரையில் சும்மாவிருந்த மன்னன், அவைக்கண் வீற்றிருக்கும் பெரியோர்களைப் பார்த்து ஏதோ சொல்ல ஆரம்பிப்பதுபோல் வாயசைக்கத் தொடங்கினன். அதற்குள், துஷ்யந்தனே! சகுந்தலை கூறியது முற்றும் சத்தியமே. அவள் சாமான்னிய பெண்ணென்றெண்ணதே! தனது கற்பால் இவ்வுலகமுழுவதும் ஒருகணத்தில் சாம்பராக்குஞ் சிறப்பினை யுடையவள்; உன்னிடம் பதிபக்தி குறையாத பான்மையை யுடையவள்: ஒழுக்கத்தி லுயர்ந்தவள்; உத்தம குலத்துதித்தவள்; உனது அன்புள்ள பத்தினி; அரிவையர்க்கரசி; இச்சிறுவன் உன்னருமைக் குமரன்; இவர்கள் விடயத்தில் நீ மாறுபட்டுக் கூறுவது தருமமாகாது; இனி இவர்களை யாதொரு விதமான பழிமொழியுஞ் சொல்லாமலேற்றுக்கொள்; தாமதம் வேண்டாம்; பின்னர் உனதரசும் அரசாட்சியும் அல்லல்படநேரிடும்;

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது"

என்னும் வேதவாக்கியத்தின்படி முனிவர் சாபத்திற்கிலக்காகாதே, என்று அனைவருங்கேட்க ஓர் அற்புத வாக்கு உண்டாயிற்று. கொலுமண்டபத்தில் வீற்றிருந்தவர்க ளெல்லாரும் மிக்க வாச்சரியமடைந்து, இதென்ன வாச்சரியமாக விருக்கின்றதே என்று பலரும் ஒலியுண்டானவிடத்தை உற்றுப்பார்த்துஒருவரையுங்காணமல்விழித்தார்கள். அநேகர் ஆச்சரியமடைந்து அரசன் முகத்தைப் பார்க்கலானர்கள். அரசனும் அசரீரியைக் கவனத்துடன் கேட்டிருந்தான். உடனே

அரசன் அவையோர்களை நோக்கி, 'ஐயன்மீர்! கேட்டீர்களோ ஆகாசவாணியை? இச்சிறுவன் என் குமரன் என்பதை யான் நன்றாக அறிவேன். ஆயினும் சகுந்தலையின் வாக்குறுதியைக் கொண்டு இவளை நான் ஏற்றுக் கொண்டிருப்பின், இச்சகுந்தலையை என் மனைவியாளென்றறியாத இப்பேருலகம் என் சொல்லும்? அத்தகைமையான பழிச்சொல்லுக் கிடந்தருவது அரசருக் கழகாகுமோ' எனக் கூறி, நின்றவாறு புலம்பிக்கொண் டிருக்குந் தன்னிளஞ் சிங்கத்தைத் தூக்கி மடிமீ திருத்திக் கண்ணீர் துடைத்து முத்தந் தந்து உச்சிமோந்து அக்குமரனது விலாசமான நெற்றியையும், நீண்டு அகன்ற கண்களையும், பளபளப்பான தேகத்தையுங் கண்டு களிப்பெய்தினன். ஆனந்த பாஷ்பம் பெருக்கினன். அக்குமரனின் அரிய அழகினை யாவருங் கண்டு, சிறிதுநேரம் வைத்தகண் வாங்காமல் ஈடுபட்டனர்.

சிறிது நேரஞ் சென்ற அளவில் சகுந்தலை உள் நுழைந்தாள். மகன் அரசன் மடிமேலிருப்பதைக் கண்டு அகங்குளிர்ந்தாள். அவளைக் கண்டதும் அரசன் வறியன் தனம் பெற்றது போலப் பரிந்து ஓடித் தம்மிரண்டு கரங்களாலும் வாரிச் சிங்காதனத்தில் உட்காருவித்துத் தாமுமுட்கார்ந்து, "என் கண் பாவாய்! நாம் இருவரும் வனத்தில் கண்டு நாட்டாரும் நகரத்தாரும் அறியாமல் கடிமணஞ் செய்து கொண்டோம். உன்னை நான் திடீரென ஏற்றுக் கொள்ளின் என்னைச் சார்ந்த உறவினரும், என்னிடமிருக்குமமைச்சரும், பிரதானிகளும், என்கீழ்ப்பட்டகுடிகளும்

உன்னை என்மனைவி யென்றெண்ணச் சந்தேகிப்பார்கள். அதனால், நான் உனக்குக் கொடுத்துவந்த சத்தியத்தில் தவற நேரிடும். அவ்வண்ணம் ஐயப்பாடு கூடாதென்றெண்ணியே உன்னுடன் பல்வகையதான சொற்போர் நிகழ்த்திய தன்றியும், உன் மனம் வெறுக்குங் கடின மொழிகளையும் அறிந்து வாது கூறினேன். இப்போது எம்பெருமானே உண்மையை வெளியிட்டனன். இனி அந்நியர் நாக்கை வளைத்துச் சொல்லுவதற்கு யான் அஞ்சேன். இப்போது இவ்வங்கத்தினர்களும் பெரியோருங் காணச் சிறிது மச்சமின்றியே நாமிருவரும் ஒருவரென்றும், இக்குமரன் எனது செல்வச் சிறுவனென்றும் பலரறியப் பறைசாற்றுவேன். ஓ பெண்கட்கரசியே ! பெறற்கரிய பேரமுதே ! விண்ணவர் விதையே ! நான் இதுகாறும் சீற்றத்துடன் கூறிய மொழிகளை எண்ணாதே. என் பிரியமுள்ள பட்டத்தரசி நீயே ஆவாய். இப்பேரரசு மிச்செல்வச் சிறுவனுடையதே என்று சொன்னான்.

சகுந்தலை உள்ளக் கிளர்ச்சியால், அழுத கண்ணீர் ஆனந்தக் கண்ணீராய் மாறியது. அவையிலுள்ளவரனைவரும் ஆனந்த பரவசராயினர். மறையவர்கள் மறையொலி செய்து வாழ்த்தினர்கள். பாவாணர் பலரும் பான்மையான சொல் மாலைகள் தொடுத்தலங்கரித்து அகம் பூரித்தார்கள். உறவின் முறையார் உண்மையறிந் துளங்களிகூர்ந்தார்கள். சிறுவனும் தாய் தந்தையர் கூறும் நீதிமொழியைக் கேட்டு நீணிலம் மகிழ நடந்து வந்தான். அன்று முதல் இல்லறந்

தவறாத ஒழுக்கத்துடன் சகுந்தலையும் துஷ்யந்தனும் நகமுஞ்சதையும்போல அன்புடன் அனைத்துலகுந் தொழ அரசாட்சி புரிந்து வந்தார்கள்.

## விக்கிரமோர் வசியம்

“ புதனு மந்தமென் பூவையும் புரூரவா வினைத்தஞ்
சுதனெனும் படிதோற்றுவித் தனரவன் றோன்றி
யிதநலம் பெறுமழகினுந் திறலினு மிலங்கி
மதனனுங் கலைமுருகனு மெனும்படி வளர்ந்தான் ”

எனப் புலவர்கள் புனைந்து கூறுஞ் சிறப்பினையுடைய வன் புரூரவ சக்ரவர்த்தி. எவ்வகையிலும் நாட்டிற்கு நன்மையே புரியும் நற்குணம் வாய்ந்த அவன், ஒரு நாள் காலப்போக்கின் நிமித்தம் காலை அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, பரிதியஞ் செல்வனைப் பரிவொடு தொழுது தன் உய்யான வனத்தை அடைய எண்ணிப் புறப்பட்டான். அப்பொழுது அவனுடைய காதில் அப்ஸரப் பெண்கள் அழுகுரலோசை விழுந்தது. அப்ஸரஸப் பெண்களில், மேனகையும், ஊர்வசியும், ரம்பையுமே அழகிற் சிறந்தவர்கள். அவர்கள் மூவருந் தன் தாதிமாரோடு ஒருநாள்,

“ கந்தமலர்க் கொன்றையணி சடையான் றன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத்தானைச்
சராசரநற் றாயானை ”
“ நஞ்சடைந்த கண்டத்து நாதன் றன்னை
நளிர் மலர்ப்பூங் கணைவேளை நாசமாக
வெஞ்சினத்தீ விழித்ததொரு நயனத் தானை ”

கண்டு கைதொழுவெண்ணிக் கைலயங்கிரியை யடைந்து மீண்டு வருகையில், இடைவழியாகிய புரூர வன் பட்டணத் தருகாமையில், ஊர்வசியையும் சித்திர லேகையையும் அசுரர்கள் சிறைப்படுத்திவிட்டார் கள். மேனகையும் அரம்பையும் மேனிலமெல்லாம் நடுங்கும்படியாகவும், நானில மெல்லாம் நனையும்படி யாகவும் ஓவென்று அலறிக்கொண்டு வருவதைப் புரூரவா கண்டனன். கண்ட கருணைநிதியான அவ்வ ரசர் பெருமகன் அரம்பையராதியரைப் பார்த்து, 'நீவிர் அஞ்சற்க. இன்னும் அரைக்கணத்தில் அத்தீய வசுரர் குழுவை அடிபணியும்படி செய்து அச்சுதன் மகளைச் சிறைமீட்டுக்கொண்டு வருகிறேன்' என்று வஞ்சின மொழிந்து, அவ்வசுரர்களுடன் போர் தொடங்கி, வெற்றிமாலை புனைந்து, ஊர்வசியினையும் சித்திரலேகையையும் சிறை மீட்டு வந்தான்.

ஊர்வசி அவ்வசுரர்களிட மிருந்து மீண்டு வருகை யில், தன்னை மறந்து நெட்டுயிர்ப் பெறிந்து உயிரற்ற வுடலைப்போலவரசன் தேர்மிசை விழுந்தாள். பின்பு, இனி நமக்கு எக்காரணத்தாலும் துன்பம் நேரிடாதெனத் தெளிந்து கண் திறந்தாள். திறந்த வள் தான் முன்னமடைந்திருந்த ஆயாஸம் நீங்கி யுளங்குளிர்ந்தாள். அப்போது அவளது முகம் பூரண சந்திரனையும் பின்னிடையச் செய்தது. அதுகண்ட அரசன் இதென்ன புதுமை! 'மேகத்தால் மறைக் கப்பட்ட மதி மீண்டு விளங்குவதைப் போலவும், நீர் வீழ்ச்சியால் நிலைகுலைந்த நன்னீர் மகிதல முற்றுப் பரவி மாசு கழிந்து விளங்குவதைப் போலவும், இரு

ளாற் சூழ்ந்த இருநீருலகம் முழுமதி கண்டு மகிழ்வது போலவும்' இவள் முகம் பொலிவடைகிறதே என்றுவகை பூத்தான். பிறகு இருவரும்மணக்க விரும்பினர்.

அப்போது சித்திரரதன் என்னும் கந்தருவ் வரசன் சதமகனுல் ஊர்வசியைச் சிறை மீட்க வனுப்பப்பட்டு, அவ்விடம் அடைந்தான். அவன் மண்ணுலகாளும் மன்னனை நோக்கி, 'அசுரகுல காலா! அடியேன் அமரர்கோனுல் இவ்வூர்வசியை அசுரர்களிடமிருந்து சிறைமீட்டழைத்தேக வனுப்பப்பட்ட கந்தருவன். நீவிரே யான் வருவதற்குள்ளாக, எங்களையனுல் ஏவப்பட்ட பணியைப் புரிந்துவிட்டீர். உம்முடைய பராக்கிரமத்தைக் கண்டு மெச்சினேன்.' என்று கொண்டாடி, ஊர்வசியையும் அழைத்துக் கொண்டு பொன்னுலகடைந்தான்.

## புரூரவன் மணம்.

அரசன் தான் விரும்பிச் சிறைமீட்ட ஊர்வசி பொன்னுலகடைந்ததை நினைந்து மனம் புழுங்கிக் கொண்டிருந்தான். ஒரு நாள் விதூஷகன் அரசன் அருகாமையிற் சென்று, அவனுக்குப் பல தேறுதல்களைக் கூறிக்கொண்டிருந்தான். அப்போது ஆகாயத்தில் ஊர்வசியும் சித்திரலேகையும் அரசன் படுந்துயரத்தைக் கண்டு, தங்களை ஒருவரும் அறியாவண்ணம் திரஸ்கரணி யென்னும் வித்தையால் மறைத்துக்கொண்டு ஆண்டகை முன்னர் அணுகி நின்றனர். அவளைக் கண்ட வரசன் ஒருவாறு மன

மகிழ்ச்சி கொள்ளவும், அச்சமயத்தில், அமரர் தூதுவன் ஒருவன் அவ்வரிவையை யணுகி, 'நடனத்திற் சிறந்த நங்கையே! நமதையன், தங்களை இக்கணமே அழைத்து வரும்படிச் சொல்லினர்' என்றனன். அதுகேட்ட ஊர்வசியும் அரசனுக்குத் தான் பின்னொருநாள் வருவதாகக்கூறி, அமரர் அவைக்களமடைந்தனள். அவ்வவையில் சரஸ்வதி தேவியாற் செய்யப்பட்ட 'இலக்குமி சுயம்வரம்' என்னும் நாடகம் நடிக்கப்பட்டது. அதில் ஊர்வசி இலக்குமி வேடந்தரித்து வெகு இன்பமாக நடித்ததைக் கண்டு இந்திரன், 'உனக்கென்ன விழைவு' என்றனன். அப்போது ஊர்வசி, 'அரசே! யான் மண்ணுலகாளும் புரூரவாவினை மணக்க விரும்புகின்றேன்' என்றனள். உடனே மகவான் அவ்வாறே 'நீ பூவுலகடைந்து புரூரவாவினை மணந்து, அவனிடமாகவோர் ஆண்மகவீன்று எம்மவையினை அடைவாய்' என்று ஆணையிட்டனன்.

இதற்குள், புரூரவாவினது ஆற்றொணாத் துயரத்தினைக் கேட்ட அவனது அருந்தேவி (அவுசிநாரி தேவி), தன் நாயகன் தாபத்தைத் தணிக்கவெண்ணித் தோழியை அவனை அழைத்து வரும்படி விடுத்தாள். அப்படியே தோழி இராணியின் ஆணையை அரசனுக்கறிவிக்க, அவனும் அன்று மாலை அரசியினிருக்கை சேர்ந்தான். அப்போது ஊர்வசியும் சித்திரலேகையும் ஆகாயத்தில் வந்து கொண்டிருந்தார்கள். அரசி, தனது மாலை பூஜையை முடித்து, அமைதி யடைந்தவளாய் அரசனிடம் வந்து அடிபணிந்து, 'அடியேன்

நும்மனங் கோணு வண்ணம் நடந்து கொள்ளவும், தேவரீர் கொண்ட துன்பம் யாதோ' வென்று கேட்டாள். அதற்கரசன் தன் துயரத்தை அடக்கிக் கொண்டு அவளை முகமலரும்படி இன்சொற் கூறியனுப்பி விட்டான்.

பின்பு, அரசன் ஊர்வசியை நினைந்து பலவாறு கூறிச் சிந்தை கலங்கினன். அத்தருணத்தில் முன்னமே வந்து கொண்டிருந்த ஊர்வசி, அரசனது பின்புறமாக வந்து அவன் சிந்தித்திருந்த வண்ணமே விளையாட்டாக அவன் கண்களைத் தன்னிரு மெல்லிய கரத்தால் மறைத்துக் களித்தாள். களித்தவள் கரத்தைச் சிந்தையிற் குளித்திருந்த மன்னன், வலித்துப் பிடித்து, இக்கரம் மண்ணுலகிற் பிறந்த மடவார் கரமன்று. விண்ணுலகிற் பிறந்த ஊர்வசியின் கரமேயென்று, வியப்படைந்து விம்முற்றான். பின்னர் புரூரவா அன்னவளைக்கண்டு அகமகிழ்ந்து, இதுகாறும் நான் பெற்றிருந்த செல்வமெல்லாம் எனக்கின்பத்தைச் செய்யவில்லை. இன்று உனது தரிசனத்தினாலேயே துன்பம் தருவனவும் இப்போது இன்பத்தைக் கொடுத்ததென்று சொல்லினன். பிறகு அவ்விருவருஞ் சிறிது காலம் தம்பதியாக வாழ்ந்திருந்தார்கள்.

## ஊர்வசியைப் பிரிதல்.

அந்நாட்டிற் கருகாமையில் குமாரவனம் என்று ஒரு பெரிய 'காடிருந்தது. அதில் பெண்கள் செல்வதில்லை ஒருநாள் ஊர்வசி அதினுள் செல்ல, உடனே கொடியாக மாறிவிட்டாள். அவளது வேற்றுருவை

அறியாதவனுகிய வரசன், அகங் கரைந்து உருமாறிக் கானகமெல்லாந் தேடித்திரிந்து, கண்டவைகளையெல்லாம் ஊர்வசியைக் கண்டீரோ வெனப்பித்தப் பிடித்தவன்போலக் கேட்பானுயினன். அப்போது ஆகாயத்தில் கிளம்பிய கருமேகத்தைக் கண்டவரசன், அதைத் தன் காதலியைக் கவர்ந்து செல்லும் அரக்கனெனக் கருதி, 'அடே பாவி! அன்றசுரர் குலத்தை வாட்டியவனென்றென்னை மதியாமல், என்னுடைய காதலியைக் கவர்ந்துசெல்லுங் காதகா! நில் நில். என் காதலியை எங்கே தூக்கிக்கொண்டு விரைகின்ருய். என்ன எனது மாற்றத்தை மதிக்காவண்ணம் அம்புகளை எய்கின்ருய்? இதோ உன்னை அரைக்கணத்திற் கொன்று போடுவேன்' என்று வீரம்பேசி விரைந்தெழுந்தான். உடனே உண்மை கண்டு, என்ன மதியுமாறிற்றே என்று தனக்குள்ளே தெளிந்தான். அப்பால், அசுரர்கள் அவளைக் கொண்டு செல்லார்கள். அவள் மறைந்தது நான் செய்த தீவினையே என்று வருந்தினன்.

அப்பொழுது ஆகாயவாணி, "அரசே! நீ வருந்தற்க. இன்னும் சிறிது தூரம் இவ்வழியே செல்லுவையேயாயின், ஓர் பளபளப்பான மணி உன் கண்ணிற்குப் புலப்படும். அது கௌரி தேவியின் காலிலிருந் துண்டானது. அதற்குச் சங்க மனீயமணி எனப் பெயர். அது பிரிந்தவர்களை ஒன்று சேர்க்குந் தன்மை வாய்ந்தது' என்று கூறிற்று. அரசன் அங்ஙனமே சென்று பார்க்க மணி இருக்கக்கண்டு மனமகிழ்ந்து கையிலெடுத்து, தன் மனதிற்குகந்த

ஒரு கொடியை அம்மணியால் தொட அது உடனே ஊர்வசியாக மாறிற்று. உடனே அரசன் களிப்பிலாக் களிப்புடன் அன்னவளோடு தன்னகரடைந்து ஆனந்தித்திருந்தான்.

அரசன் புத்திரனைக் காணல்.

இங்ஙனஞ் சில்லாண்டுகள் கழிய, ஒருஞான்று கழுகொன்று அரசனிடத்திருந்த அருமணியைக் கவர்ந்து பறந்தது. அதுகண்ட வரசன், தன்னுலியன்ற மட்டும் அதைக் கொல்ல முயன்றும் அப்பறவை அம்புக்கெட்டாத தூரத்தில் பறந்து சென்றதால் வருத்தப்பட்டான். பின்னர் சிறிது நேரத்திற்கெல்லாம் சேவகன் ஒருவன் அக்கழுகுடன் அரசனவையை நண்ணி, 'அண்ணலே! இக்கழுகினுடலிற்றைத்திருக்கும் அம்பின் விந்தையைக் கண்டீரோ' என்று அவ்வம்பைக் காண்பித்தான். அதில் 'பூரூரவனுக்கும் ஊர்வசிக்கும் பிறந்த ஆயுவினுடைய வம்பு' என்று பொறிக்கப்பட்டிருந்தது. அரசன் அதைக் கண்டு 'இதென்ன வாச்சரியம்! எனக்கும் அவ்வமராதினுக்கும் ஆயுவென்றொரு புத்திரன் பிறந்தனனோ?' என்று ஆலோசித்துக்கொண்டிருக்க, தவப்பெண்ணொருத்தி அழகிய குமரனோடு அவணடைந்து, 'இக்குமரன் உன் அருந்தவச் செல்வன். இவனை ஏற்றுக்கொள். இவனே ஆயுவென்பவன். இவன் பிறந்த பொழுதே ஊர்வசி இவனை என்னிடம் ஒப்புவித்தாள். நானும் இதுகாறும் என் குழந்தையைப் போலவே வளர்த்துவந்தேன். இவன் செவன முனிவரிடத்தில் சகல கலைகளையுங் கற்றுத் தேர்ந்தனன் என்பதை

இக்கழுகு எய்த திறத்தாலேயே தெரிந்து கொள்ளும்' என்று கூறி, ஒப்புவித்துச் சென்றனள்.

அவ்வமயம் ஊர்வசியும் அவண்வர, தன் காதலனைக் கண்டு கண்களில் நீரைப் பெருக்கினள். அரசன், 'அரிவையர் திலகமே! நீ திடீரெனக் கண்கலங்கக் காரணமென்' என்றனன். அப்போது ஊர்வசி, 'நாதா! நான் முன்பு சதமக னருள் பெற்று வரும்போது 'அவர், அரசன் உன் குமரனைக் கண்டவுடன் என்னை அடைவாய்' என்று பணித்தனர். இப்போது தங்களை விட்டு எப்படிப் பிரிவேன்' என்று பின்னும் வருந்தினள். அம்மொழிகேட்ட அரசன், 'நங்காய் நானும் நம் புதல்வனுக்கு முடிசூட்டிக் கானகமடைந்து கடுந்தவம்புரிந்து உன் பதியடைகின்றேன். நீயும் முன்பே சென்று என் வரவினை எதிர் பார்த்துக் கொண்டிரு' என்று கூறிச் சொன்னதை செய்யத் துணிந்தான். அக்காலையில் பட்ட மாழுந் தழைக்கும் பண்ணமைந்த யாழினைக் கைக்கொண்டு நாரத முனிவன் அவ்விடம் வந்து, அரசனை நோக்கி, 'புரூரவ! இன்னுஞ் சில ஆண்டுகளுக்குள் அமரர்களுக்கும் அசுரர்களுக்கும் அமர் நேரிடப் போகின்றது. அப்போது அமரர்கோன் உன் உதவியை நாடப் போகின்றனன். ஆகையால், நீ அருந்தவம் மேற்கொண்டு காடடைதல் சிறப்புடையதன்று. ஆயிரங்கண்ணனும் இவ்வூர்வசியை உன்னுடனேயே இன்னும் பல்லாண்டுகள் இன்புற்று வாழும்படிக் கட்டளை யிட்டிருக்கின்றனன்' என்றனர். அதன்பிறகு அரசனும் ஊர்வசியும் ஆயுவிற்கு அரசை ஈந்து வெகுகாலம் இன்பமாய் வாழ்ந்திருந்தார்கள்.

இந்நாடகம், படிப்பவர்களின் மனதிற்கு ஆனந்த ரஸத்தையே கொடுத்துக்கொண்டுவரும் தன்மை வாய்ந்தது. அகப் பொருளுணர்ச்சியை ஆங்காங்கெழுப்பக்கூடியது. இதற்கு *திரோடகம் என்னும் ஒரு பெயருமுண்டு. அஃது எங்ஙனமெனில், ஆங்கிலத்தில் கைவல்ல அருங்கவிப் புலவர்களாற் செய்யப்பட்டிருக்கும் ஆப்பெரா (**opera**) என்னும் நாடகத்தைப் போலக் கொள்ளலாம். ஆயினும் இந்நாடகம் பலவிடங்களில் அதனினும் மாறுபட்டு நடைபெறுமென்பதற் கையமேயில்லை.

காளிதாஸ சரிதம் முற்றிற்று.

*திரோடகம்:—இது நாடக விலக்கணங்கள் குன்றாமல், 5 7 8 9 அங்கங்களுக்குக் குறையாமல் மனித தேவதா ஸம்பந்தமான தலைவன் தலைவிகளாற் பொலிந்தோங்கும் சிறப்பினையுடையது. ஒவ்வொரு அங்கங்கள் தோறம் விதுஷகன் வியப்புச் சொல்லே விரவிவரப்பட்டது,